CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# श्रीविघ्नेश्वरस्तुतिमञ्जरी

(स्तोत्रभागः)

# ஸ்ரீவிக்நேச்வர ஸ்துதி மஞ்ஜரீ

(ஸ்தோத்ரங்கள் - நாமாவளீ)

இரண்டாம் பாகம்

தொகுத்தவர்
வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரி
ஸ்ரீரங்கம்

வெளியிடுபவர்
Sri Vigneswara Venkateswara Trust,
283, T.T.K. Salai, Chennai - 600 018.

1999

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# श्रीविघ्नेश्वरस्तुतिमञ्जरी

(नामावली)

# ஸ்ரீ விக்நேச்வர ஸ்துதி மஞ்ஜரீ

(நாமாவளி)

இரண்டாம் பாகம்

தொகுத்தவர்

வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரி

ஸ்ரீரங்கம்

வெளியிடுபவர்

**Sri Vighneswara Venkateswara Trust**

**283, T.T.K. Salai, Chennai - 600018**

**1998**

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

**Sri Vighneswara Stutimanjari**
Part II Stotras

© Sri Vighneswara Venkateswara Trust

First Edition : 1998

*Copies available at*

**Sri Vighneswara Venkateswara Trust**
**283, T.T.K. Road, Chennai 600 018**

Lasertypeset & Printed at :
**V.K.N. ENTERPRISES**
8/1, Dr. Rangachari Road, Mylapore, Ph: 4950775

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# ஸ்ரீ விக்நேச்வரர்

ஸ்ரீ மஹாகணபதி ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தையும் நாமாவளியையும் இந்த ஸ்தோத்திரத்திற்கு ஸ்ரீ பாஸ்கரராயர் என்ற மகான் எழுதிய கத்யோதம் என்ற செய்யுளாக அமைந்த பாஷ்யத்தையொட்டி மூலத்தைச் சீரமைத்து வெளியிடுகிற வாய்ப்பு 1965ல் கிடைத்தது. ஸ்ரீ மஹாகணபதி ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்திற்கு மற்றொரு செய்யுள் வடிவில் அமைந்த உரை, பிரும்மாண்ட புராணத்தில் பூர்வ கண்டத்தில் 47-53 அத்தியாயங்களில் பராசரர் - வியாஸர் ஸம்வாதமாக, 651 சுலோகங்களுள்ள பகுதி ஏட்டுப் பிரதியாக குடும்ப புஸ்தக கோசத்தில் இருந்தது. இரண்டையும் ஈடு செய்து பார்த்ததில் மிகச்சில இடங்களைத் தவிர மற்ற இடங்களில் எழுத்திற் கெழுத்து ஒத்துப் போவதைக் கண்டதும், கத்யோத பாஷ்யத்தையும் இதனையும் சேர்த்து வெளியிடும் ஆசை அன்று தோன்றியதை நிறைவேற்ற இப்போது தான் வாய்ப்பு வந்தது. ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடம் ஜகத்குரு அவர்களின் ஆஜ்ஞைப்படி ஸ்ரீ விக்நேச்வர வெங்கடேசுவர டிரஸ்ட் விக்நேச்வரரின் ஸ்தோத்திரங்களைத் தொகுத்து வெளியிடுகிற பொறுப்பை என் மீதுள்ள ஸ்ரீ விக்நேசுவரரின் கருணையால் உந்தப்பட்டு என்னிடம் அளித்தது. எப்படி அதனை அமைப்பது ? எதைதைச் சேர்ப்பது என்பதில் அவ்வப்போது ஸ்ரீ கணேசரே வழிகாட்டி வந்ததால் முதலில் திட்டமிட்டதை விட இருமடங்கு விரிவடைந்துள்ளது. இந்த நூலமைப்பு இடையூறின்றி நிறைவேற அருள் புரியும்படி ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடத்ததிபர்கள் ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்ரீ சரணர்களிடம் விண்ணப்பித்துக் கொண்டதும், எதிர்பார்த்திருப்பதை விட மிகச்சிறப்பாக அமையும் என்று அருளாசி வழங்கினார்கள். நடமாடும் தெய்வமாக அனைவரும் உணர்ந்த ஜகத்குரு ஸ்ரீ மஹா ஸ்வாமிகளின் நினைவகமாக காஞ்சீ ஏனாத்தூரில் அமைந்துள்ள ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதீ பன்னாட்டு நூலகத்தில் தங்கி, மூலநூல் தொகுப்பில் ஈடுபட்டதும், வற்றாத நீரூற்றாக எழுத அடங்காதவாறு தொகுப்பதற்கான விஷயங்கள் நான் முந்தி நான் முந்தி எனக் கண்கள் முன் வந்தன. அவை 5000



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

பக்கங்களிலும் அடங்கா. இது முக்கியம் இது சிறந்தது எனப் பாகுபடுத்த முடியாதவாறு எல்லாமே சிறப்பும் முக்கியத்துவமும் நிறைந்தவை. அன்பர்கள் பலர் கணேசர் பற்றிய நூல்கள் தந்து உதவினர். கணேசரும் தாளிலும் பேனாவிலும் மையிலும் கைகளிலும் கண்களிலும் அமர்ந்து இரவும் பகலும் எழுதினார். இந்த நூல் இரு பாகங்களாக முதலில் வெளியிடப் பெறுகின்றது. முதல் பகுதியில் வேதங்கள் புராணங்கள் மற்றும் ஆகமங்கள் கணேசரைப் பற்றித் தந்துள்ள ஸ்தோத்திரங்களும், ஜகத்குரு ஸ்ரீ சங்கர பகவத் பாதர் முதலிய மகான்கள் தாம் பெற்ற இறையருளை விளக்கித் தந்த ஸ்தோத்திரங்களும், மஹாகவிகளும் சாஸ்திரகாரர்களும் மற்றவரும் தம் தமது நூல்களின் தொடக்கத்தில் நூல் மங்களமாக நிறைவுற வேண்டிக் கொண்டு எழுதிய மங்கள சுலோகங்களும், சிறந்த வாக்கேயகாரர்களான ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் ஸ்ரீ தியாகராஜர் முதலானோர் எழுதிய கீதங்களும் இடம் பெறுகின்றன. இரண்டாம் பகுதியில் பகவானின் வழிபாட்டில் பெரியோர்களின் வழக்கில் இருந்த ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரங்களும் திரிசதீ ஸ்தோத்திரங்களும் அஷ்டோத்தர சத நாம ஸ்தோத்திரங்களும் மற்ற நாமாவளிகளும் இடம் பெறுகின்றன.

இவற்றை தொகுத்து அச்சிற்கு அனுப்பிய பின் மிகுந்துள்ள பகுதிகளை ஆராயும் போது அவை தற்போது வெளியிட்டுள்ள அளவு மிகுந்துள்ளதும் உணர முடிந்தது. இந்த இரு பகுதிகளை வெளியிட்ட கணேசர் அதனையும் விளம்பமின்றி நிறைவுறச் செய்யக்கூடும்.

ஸ்ரீ விக்நேசுவரர் எப்போதும் போல் தொடர்ந்தும் தம் அருளிற்கு ஏற்றவராக நம்மை ஏற்கட்டும் என்று கோரி, இந்நூலை விக்நேசுவரர் அருள் பெற்றவர் முன் சமர்ப்பிக்கிறோம். இதில் உதவி புரிந்தவர் பலர். அனைவருக்கும் நன்றியும் வணக்கமும்

S.V.ராதாக்ருஷ்ண சாஸ்திரி
தொகுப்பாளர்

22, வீரேசுவரம்
அப்ரோச் ரோடு
ஸ்ரீரங்கம் 620006



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

உ

Sri Chandramouleeswaraya Namaha:
SRI SANKARA BHAGAVADPADACHARYA PARAMPARAGATHA
His Holiness Sri Kanchi Kamakoti Peetadhipathi

# Jagadguru Sri Sankaracharya Swamigal

**Srimatam Samsthanam**

**No. 1, Salai Street. Kancheepuram - 631502**

---

Camp: காஞ்சீபுரம் Date 13.10.1998

உ

நமது அத்யந்த ப்ரிய சிஷ்யர்கள் நிர்வகிக்கிற ஸ்ரீ விக்நேச்வர வெங்கடேசுவரா டிரஸ்ட் மற்றும் நமது ப்ரிய சிஷ்யர் வைத்ய ராதா கிருஷ்ண சாஸ்திரியின் விஷயமாக நாராயண ஸ்மரணம் செய்யப்பெறுகிறது

பிள்ளையார் சுழியிட்டுத் தொடங்கிய பணி சிறிதும் முடக்கமின்றி இனிது நிறைவுறும் என்ற நம்பிக்கை மக்களிடையே ஆழமாக உள்ளது. நற்பணிகளைத் தொடங்குவதற்கு முன்னதாக விநாயகரை வழிபடுவர். மற்ற தேவதைகளை வழிபடவும் அவர்களது அருளை வேண்டவும் முன்னதாக விநாயகர் வழிபாடு செய்வர். நம் வீடுகளில் பஞ்சாயதன பூஜை முறையில் வேறுபாடின்றி விநாயகர், சிவபெருமான், தேவி, நாராயணர், ஸூரியன் இவர்களை வழிபடும் போது விநாயகரே முதலில் வழிபடப் பெறுகிறார். உலகப்படைப்பில் மூல ஒலியான பிரணவத்தையும் அவற்றின் வரிவடிவான நாத பிந்துக்களையும் வடிவமாகக் கொண்டவராக, பரம்பொருளாக, ஆதி தம்பதிகளின் மூத்த புதல்வராக யாவராலும் ஆலய அமைப்போ பூஜை முறையோ கொள்ளாமல் அரசமரத்தடியில் மஞ்சளிலும் மண்ணிலும் கூட, இவரை வழிபட முடிகிறது. இவரைப் பற்றி ஸ்தோத்திரங்கள் அனைத்தும் நமது ஆஜ்ஞானுஸாரம் மூன்று பாகங்களாக வெளியிட சென்னை ஸ்ரீ விக்நேச்வர வெங்கடேசுவர டிரஸ்ட்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

முன் வந்து, முதலிரு பாகங்களை வெளிக் கொணர்ந்ததைப் பார்வையிட்டு, பல அரிய விஷயங்களை இதில் தொகுத்துள்ளதை அறிந்து மிகவும் மகிழ்ச்சியடைகிறோம். இதில் வேதம், புராணம், ஆகமம் மற்றும் இவற்றிலிருந்து விநாயகரைப் பற்றிய ஸ்தோத்திரங்கள், நாமாவளிகள், கீர்த்தனைகள் முதலியவை பல இடங்களில் தமிழ் உரையுடன் அழகிய முறையில் சேர்க்கப்பட்டுள்ளன. இவற்றைப் படித்து பூஜை முதலியவற்றில் பயன்படுத்தி ஸ்ரீ விநாயகப் பெருமானின் அருளுக்குப் பாத்திரமாகும்படி ஆசி கூறி வாழ்த்துகிறோம்

நாராயண ஸ்ம்ருதி



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# இவர் பிள்ளையார்

தெய்வம் என்பது பற்றிப் பல விளக்கங்கள் உண்டு

1. வடிவம் மற்ற சிறப்பம்சங்களும் ஏதுமின்றி, தவத்தாலும் ஞானயோகத்தாலும் உணரத்தக்க நிர்குண பரம்பொருள் நிலை - பரப்ரம்ஹம்

2. பரம்பொருளே மாயையின் உந்துதலால் உலகைப் படைத்துக் கட்டுப்படுத்திப் பாதுகாத்து மறைத்து மூலப்பொருளில் ஒடுக்கித் தன்னுள் லயமடைவித்தலாகிய பல பணிகளில் ஈடுபடுகிற நிலை - ஈசன் - ஈச்வரன் , ஜகத் காரணம்.

3. ஒவ்வொரு பணிக்கும் ஒரு தனித்த அதிகாரியாக அவர்களைக் கண் காணிப்பவராக சிவன் விஷ்ணு பிரும்மா என்ற மும்மூர்த்திகளாக கணேசர், சிவன், அம்பிகை, விஷ்ணு, ஆதித்தன் என ஐவராக வழிபாட்டுக் குரியவராகப் பற்பல அடையாளங்களுடன் தோன்றும் நிலை. ஸகுணர், ஜகந்நாதர் - ஜகந்நியாமகர்.

4. உலகின் தொடர்ந்த இயக்கத்திற்கு உதவுகிற தர்மத்தின் பாதுகாப்பாளராக அந்தந்தகால வரைக்கேற்ப தோன்றுகிற நிலை - அவதாரங்கள்.

5. உலகமாக மாறி உலகினுட் புகுந்து ஆட்படுத்திப் பல்வேறு கால தேசநிலைகளைப் பகுத்து அதற்கேப சர - அசுரம் என்ற பலவற்றின் மூலப்பொருளாகிய பிரகிருதி - புருஷன், அதன் பரிணாமங்களும் விகாரங்களுமான பஞ்ச பூததத்வம், உள்ளம், என்ற பல பௌதிகக் கூட்டுப் பொருள்களையும், கட்டுப் படுத்துகிற இந்த்ரன் அக்னி யமன் வருணன் சந்திரன் சூரியன் முதலான ஆதிதைவிக புருஷர்களாகத் தோன்றுகிற நிலை - தேவர்.

6. இவ்வாறு பலதரப்பட்ட நிலைகளை அறிவாளிக்கு உணர்த்துகிற வழிகாட்டி குரு - தாய் - தந்தை.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

7. இந்நிலைகளில் ஸாதகனின் மனப்பண்புக் கேற்பப் பல வடிவங்களை ஏற்று நேரில் காட்சிதந்து மனிதனைத் தெய்வ நிலைக்கு உயர்த்துகிற பிள்ளையார், முருகன், தேவி, ராமன், க்ருஷ்ணன் முதலிய இஷ்ட தெய்வங்கள்.

ஒரே பரம்பொருள் உலகுடன் தொடர்பு கொள்ளத் தாமே விழைந்து தன்னிச்சையாக எடுத்துக் கொள்கிற பல வடிவங்களின் மூலம் முன் கூறிய ஏழு நிலைகளிலும் தன்னைக் காட்டிக் கொள்கிற வடிவம் ஸ்ரீ மஹாகணபதி. பர நிலையும், அ பர நிலையும் ஒருங்கே காட்டுபவர். பல்லாயிரக் கணக்கான ஆண்டுகள் என்ற வரையற்ற காலவரையில் பாமரர் முதல் மகாஞானியர் வரை அனைவரது உள்ளத்திலும் தெய்வமாகத் துலங்குபவர்.

வாழ்க்கையின் ஒவ்வொரு நிகழ்ச்சியும், உலகின் பரிணாமத்தின் ஒவ்வொரு இயக்கமும் சலனத்தில் தொடங்கிச் சலனத்தில் முடிவுறுகின்றன. நடுவிலும் ஒவ்வொரு நொடியிலும் ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் உணரப்பெறுவது சலனம் தான். காலத்தை விட வேகமாக மாற்ற மடைவது ஏதுமில்லை. அந்த மாற்றமும் நொடியின் நொடியில் நிகழும் சலனத்தால் தான் நேர்கிறது.

பெரும்பாலும் இச்சலனங்கள் அனிச்சையாக, நம் முயற்சி எதையும், எதிர்பாராததாக நிகழ்கின்றன. மிகச் சில சலனங்களை மட்டும் நாம் உணர்கிறோம். மற்றவை நம் உணர்விற்கு அப்பாற்பட்டவை.

சில சலனங்களைப் பற்றி முன்னதாகச் சிந்தித்துத் திட்டமிடுகிறோம். செயல் முறை வகுத்துச் செயலினுள் அடி வைக்கிறோம். செயல்படு முன் சற்றுச் சிந்தித்து நிதானம் கொள்கிறோம். இடையூறின்றி, எண்ணியது எண்ணியவாறே நடைபெறுமா என்று தயங்குகிறோம். இந்தத் தயக்கம் ஒரு நொடியில் மறைய நம்மிடம் ஒரு தாயத்து (ரக்ஷாகவசம்) உள்ளது. அது பிள்ளையார் சுழி. அது நீண்ட காலத்திய - காலவரை அறிய இயலாத காலத்திலிருந்து வந்த உள்ளப்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

பதிவால் நினைவில் வருகிறது. பணி தொடங்கியதும் உள்ளுணர்வுடன் கூடிய பழக்கமாகக் கொண்டு அந்தப் பிள்ளையார் சுழியை எழுதுகிறோம். ஒரு சுழியும் ஒரு படுத்த நேர்கோடும் இணைந்த வடிவம் அது. அனிச்சையாக அதனை எழுதும் வழக்கமும் உள்ளது.

''பிள்ளையார் சுழி போட்டாச்சு! தொடங்கு ! என மனம் குதிபோட்டு ஆழ்ந்த நம்பிக்கையுடன் பணியைத் தொடங்குகிறது. அந்தச் சுழியும் நேர்க்கோடும் தான் சலனத்தின் வரி வடிவம். பொதுவாக எல்லா ஆற்றல்களையும் பிறருக்கு உணர்த்த அவற்றிற்கு வரிவடிவம் கொடுப்பதுண்டு. சலனத்தின் வரி வடிவமே சுழியும் நேர்க்கோடும் தான்.

நீர் பெருகத் தொடங்கியதும் சுழித்துச் சலிக்கத் தொடங்குகிறது. பின் நீண் கோடாக ஓடுகிறது. இந்த ஆரம்பச் சலனத்தை வரி வடிவாக்கினால் பிள்ளையார் சுழியாகும். சுழி முதல் முயற்சியின் வடிவம். நேர்க்கோடு அதன் பின் விளைவு. தடை நேருமோ என்ற தயக்கம், நேர்ப்பாதை புலப்படுகிற வரை நிதானம், சலனத்திற்குத் தடை நேரும் போது மூல நிலைக்கே திரும்புகிற வேகம், முனைவுடன் தடையைச் சீராக்கி முயல்வதே வழி என்று கண்டு, உறுதியுடன் வேகத்துடன் மீண்டும் முயன்று பார்க்க, நேர்ப்பாதை தெரிவதும் அதில் ஊக்கிய வேகத்துடன் இயக்கத்தைத் தொடர்வதுமான சலனத் தொடரைப் பிள்ளையார் சுழி உணர்த்துகிறது.

ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களில் தமஸ் தடையையும், ரஜஸ் தடைமீறுகிற உந்துதலையும், ஸத்வம் நிதானத்தையும் உறுதியையும் உணர்த்தும். இந்த முக்குணங்களின் இயல்பையும் ஆற்றலையும் கட்டுப்படுத்தும் ஈசன் பிள்ளையார் - குணேசர் - பிந்துவும் நாதமுமே சுழியும் தண்டமு(நேர்க்கோடு)மாகிப் பிள்ளையார் சுழியாயின. பிரகிருதியின் ஆற்றல் வடிவமே இந்தச் சுழி.

ஒலியே பிரகிருதியின் முதல் விரிவாக்கம். ஒலியின் முதல் விளக்கம் ஓங்காரம் எனும் பிரணவம். அதன் வரிவடிவமும்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

சுழியும் தண்டமும் தான். சுழி - தண்டம், பிரணவம், பிரகிருதி, என்பதனைத்தையும் பிள்ளையாரின் உயரத்தூக்கிய துதிக்கை உணர்த்துகிறது. அதனால் அந்த துதிக்கையின் வரிவடிவமே பிரணவமும், சுழியும் தண்டமுமாக வந்தது. பிரணவ ஸ்வரூப வக்ரதுண்டம் என்றிதனை ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் பாடுகிறார்.

மனத்தில் கொண்ட துதிக்கையின் வரிவடிவமான பிள்ளையார் சுழி பிள்ளையாரின் வடிவத்தியானமாக மாறி அவரை வணங்கி வழிபடச் செய்கிறது. எளிமையையும் எல்லையிலா மாட்சியையும் ஒருங்கே காட்டுபவரின் அண்மை அப்போது கிட்டுகிறது. பிள்ளை எனும் போது அன்புக் கையணைப்பிற்குக் கட்டுப்படுபவர். அத்துடன் 'யார்' கூடியதும் எளிதில் அணுக முடியாதவர். தந்தையார் தமையனார் என வயதில் மூத்தவரை மதிப்பதுபோல், பிள்ளையைப் பிள்ளையார் என அழைப்பதாக மட்டுமல்லாமல் வேறோரு விளக்கமும் உண்டு.

கணபதி என்று அவரை அழைப்போம். உயிரினமனைத்தும் கூட்டமாக, இயல்பால் மேலும் கீழுமாக இருப்பினும் அவருக்கு அடங்குகிற பாங்கில் அவை ஒரே தரத்திலிருப்பதால் அவை கணம். கணமாக இருப்பதற்கு அவர் ஈசர், கணம் என்பதில் யார் யார் அடங்குவர் ? மும்மூர்த்திகளும், கணேசன், சிவன், அம்பிகை, விஷ்ணு, ஆதித்தன் எனப் பஞ்சாயதன தேவர்களாகப் பல்வேறு பணிபுரிகிற கடவுளரும், அன்னமயம், பிராண மயம், மனோமயம், விஜ்ஞான மயம், ஆனந்த மயம் என்ற ஐந்து கோசங்களையும் தன் இருப்பிடமாக தனது சொத்தாக அபிமானம் கொண்டுள்ள ஆத்ம நிலைகளும் தேவர் மனிதர் நாற்கால் பிராணி, பறவை, ஊர்வன எனப்பல வகைப்பட்ட உயிரினங்களும் தனித்தனியே கணங்களே. அவற்றின் ஈசரானதால், இவரின்றி அவை தனித்தியங்காமையால் இவரே அவர்களை இயக்கி வழி நடத்துபவரானதால் கணபதி - கணநாதர் - கணேசர். நமது அன்னமயம் முதலிய கோசத்தலைவர்களுக்கு அவர் தலைவர் என்பதால்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

உணரப்பெறுகிற அருகாமையுடன் மூத்தோரான சிவன் முதலானோருக்கும் தலைவரானதால். மூத்தோருக்கும் மூத்த நாயனார் ''ஜ்யேஷ்டராஜர்'', ''அப்பாலுக்கும் அப்பானவர்'' - ''பராத் பர:'' என்று உணர்ந்ததும் அவரை வெகுதூரத்தில் காட்டுகிறது. ''தத் தூரே தது அந்திகே'' என உபநிடதம் கூறும்.

முழு முதற்கடவுளாக நிறம் வடிவம் எனப்பகுத்தறிய முடியாதவாறு வாக்கிற்கும் மனத்திற்கும் கூட எட்டாதவராக நினைத்த அந்தக் கணேசப் பரம்பொருளே ஆற்றங்கரையிலும் அரசமரத்து நிழலிலும் நிழலற்ற திடலிலும் மண்ணிலும் கல்லிலும் மஞ்சள் பொடி உருண்டையிலும் எளிதில் அணுகத் தக்க பிள்ளையாராகக் காட்சி தருகிறார்.

இந்த எளிமையும் மாட்சியும் ஒருங்கே காண்கிற ஒரு தெய்வம் வேறு உண்டா? ஸ்ரீ மஹா கணபதி ஸபர்யா முறைப்படி நாள் முழுவதும் வழிபடத்தக்கவரை, ஔவைப் பாட்டி அகவலில் காட்டியபடி யோகத்தில் சித்தத்தைப் பர நிலையில் ஒடுக்கிய பின்னரே காணத் தக்கவரை, தலையில் குட்டித் தோப்புக்கர்ணம் போட்டு நான்கு முறை வலம் வருவதால், மஞ்சள்தூளை நீர்வார்த்து உருட்டி, அல்லது அச்சுவெல்லத்தை வைத்து அவரைத் தியானித்து ஒரு நொடியில் வழிபட்டு விடலாம்.

பரம்பொருளாகத் தியானத்தில் உணர்ந்தவரும் ஆடை அணிகலன்களுடன் அழகிய யானை முகத்தோனாக விக்கிரகம் கொண்டவரும், மஞ்சள்தூளில் அருவ உருவமாகக் காட்சி தருபவரும் குழந்தையாக விளையாடி வாழ வைப்பவரும் ஒருவரே.

சிவபெருமான் தன் தவத்தால் பரம்பொருளையே தன் மகனாகப் பெற்றார். அவரே கணபதி. தேவி தன் உடற்பூச்சிற்காக வைத்திருந்த மஞ்சள் உருண்டையில் பரம்பொருளின் சைதன்யத்தைப் பதித்துக் கணபதியாக்கினாள். புண்யகம் எனும் விரதமிருந்து



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

பரம்பொருளை நேரில் கண்டு அவரையே தன் மகனாக வேண்டி வரமாகப் பெற்றாள். இவ்வாறு புராணங்கள் கூறும். சிவபெருமானும் தேவியும் பரம்பொருளையே மகனாகப் பெற்றனர். அப்போது பிள்ளை எனத் தனக்குள் அடங்கியவராகக் கூற விரும்பாமல், பிள்ளை என்ற எண்ணத்திற்குப் பங்கமும் வராமல் பிள்ளையார் என்று அவர்களே அழைத்ததால் பிள்ளையார் என்ற பெயர் நிலைத்ததென்பர். ஜ்யேஷ்டராஜர் என வேதமே கூறும். பிள்ளையாகப் பிறந்தும் தம்மை விட இவர் மூத்தவர் எனச் சிவனை மதிக்கச் செய்ததால் ஜ்யேஷ்ட்டராஜர். சிவனும் தேவியும் ஜ்யேஷ்டராஜராக இவரை வணங்க, இவரோ சிவஸூதன், உமாஸூதன் எனத் தன்னை அறிமுகப் படுத்திக் கொள்கிறார். பண்டாஸுரனது விக்நயந்திரத்தை உடைக்க, காமேசுவரரும் காமேசுவரியும, தியானித்தபடி மஹாகணபதியாக எழுந்தருளி விக்கின யந்திரத்தைத் தூளாக்கியவர். அவர்களின் மைந்தனாகவே காட்டிக் கொள்கிறார்.

நரமுகனாக அழகனாகப் பிறந்த தேவியின் மைந்தனைச் சிவபெருமான் தன் பரசுவால் வெட்டி வீழ்த்தினார். தேவி வெகுண்டு தன் சக்தியை உலகிலிருந்து பிரித்து தன்னுள் அடக்கிக் கொண்டு விட்டாள். யானைத்தலை பொறுத்தி உயிர்த்தெழச் செய்து தேவியை மகிழ்வித்ததும், தேவர்கள் மற்றவர்களை வழிபடுமுன் ஸ்ரீகணபதியை வழிபட்டாலன்றி வழிபாடு நிறைவடையாது என்று வரம் தந்தனர். வேழ முகத்தனின் அருளால்தான் மற்ற தேவர்களின் அருள் பெற முடியும். வேழ முகத்தனின் அருள் பெற்றால் அவரிடமே தேவர் அனைவரையும் காண முடியும். இவரே அனைத்து தேவர்களுமாவார். இதனை உணர்ந்துதான் வழிபட வேண்டுமென்றில்லை. அவரை எவ்வகையிலேனும் வழிபட்டால் போதும். வழிபாடு முறைப்படி அமைவதும் அவசியமல்ல. அதே வெல்லப் பிள்ளையாருக்கு அதே வெல்லத்தைக்கிள்ளி நிவேதனம் போதும்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

'பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை நாலும் கலந்துனக்கு நான் தருவேன்'' என்றாள் ஔவைப் பாட்டி. அவர் நாடோடி. இளங்கன்னியாயிருந்தவள். விரும்பிக் கிழவியானவள். உலகில் எந்த உரிமையையும் உடைமையையும் கொண்டாடாதவள். தான் அறிந்துணர்ந்ததை மக்களுக்கு வேறுபாடின்றி எளிய முறையில் தானே பறைச் சாற்றி முழக்க ஊர் ஊராகச் சுற்றியவர். அவளுக்கும் பசியும் தாகமுண்டு. நாடோடியின் பசியுணர்ந்த ஏழை எளியவர் தாமே விரும்பியளித்த பாலும் தேனும் பாகும் பருப்பும் அவரால் விநாயகருக்கு நிவேதனப் பொருளாகத் தரப்படுகின்றன. எனது என்ற உரிமையையும் உடைமையையும் கொண்டாடாமல், அவனளித்ததை அவனுடையதை அவனுடையதாக்குவது - அவனுடையதாகத் தெரிவிப்பதுதான் நிவேதனமாகும். இவர் ஒருவருக்குத் தான் தேங்காயைச் சிதறும்படி தரையிலடிப்பதே நிவேதனமாகிறது.

இந்தக் குழந்தைத் தெய்வத்தைப் பற்றிய பல புதிர்களை ஸ்ரீ காஞ்சி பெரியவர்கள் மஹா ஸ்வாமிகள் தமக்கே உரித்தான தெய்விக நடையில் தெய்வக்குரலில் விளக்கியுள்ளதை 'தெய்வத்தின் குரல்' இன் ஒவ்வொரு பாகத்திலும் நூற்றுக்கணக்கான பக்கங்களில் ஸ்ரீ ரா. கணபதி தொகுத்துத் தந்துள்ளதை ஆயுள் முழுதும் படித்து உணரலாம்.

பிள்ளையாராகித் தம் அருள் பரவசத்தால் நெருங்கி நம்முடன் இணைந்து நிற்பவரை பரம்பொருளானவரை எவ்வாறு துதிப்பது? ஒருவருடைய பெருமை முழுவதையும் கண்டறிந்து பாராட்டுவதே துதியாகும். கடலில் பனிக்கட்டியாலான பெருமலை ஒன்று தன் கொடிமுடியின் நுனி மட்டும் மேலே தெரியும்படி மூழ்கி நிற்கிறது. அந்த நுனியும் நீராலானதால் கடல் நீருக்கும் அதற்கும் வேற்றுமை புரியவில்லை. அதனைச் சுட்டிக் காட்டுவது போல் அமைவதே பெருமானைப் பற்றிய துதியும். அவரது பெருமைகளின் விரிவே அவரை மறைக்கிறது. அவரது பேரொளியே அவரை இருட்டிலுள்ளவராகக் காட்டுகிறது. அவரை முழுதும் அறிந்தவன் போல் புகழ முற்படுவதும் குற்றமாகலாம்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

எனினும் பணிந்தெழுவதே எம் செயலுக்கு உட்பட்டது'' என எல்லாத் துதிகளின் முத்தாய்ப்பாக அமைவதை நன்கு இந்த ஸ்தோத்திரங்களும் உணர்த்துகின்றன.

வேதம் அவரை ஜ்யேஷ்டராஜராக, பிரும்ஹண ஸ்பதியாக உணர்த்துகிறது. மூத்தோருக்கும் மூத்தவரான பரம்பொருள் அவர். வேதம், அதனை ஓதுபவர், வேத ஒலியால் நிறைவுறுகிற வேள்விகளும் அவற்றால் வழிபடப்பெறுகிற தேவர்களும், அவ்வழிபாட்டால் பெறுகிற உலக நன்மை - மேன்மைகள் வேதத்தை உலகிற்கு ஈந்த பிரும்மா. இவர்களனைவரும் பிரும்மம். என்றும் இவர்களின் பதியானதால் விநாயகர் ப்ரம்ஹணஸ்பதியாகிறுர். பல்வேறு கணங்களும் ஒன்று கூடிக் கணங்களாகின்றன. தேவரினத்தில் கணத்தில் உட்பிரிவாக தேவர், கந்தர்வர்,, ஸித்தர், ஸாத்யர், வஸு, ருத்ரர், ஆதித்யர், விச்வேதேவர், ஆபாஸ்வரர், துஷிதர் என்றவாறு பல கணங்கள் உண்டு. இந்த கணங்களின் கணத்திற்கு தலைவர். ''கணாநாம் கணபதிம்'' என்றே இவரை முதலில் வேதம் அறிமுகப்படுத்துகிறது. மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாதபடி விரிந்து கிடக்கின்ற அவரது படைப்புகளில் ஒன்றுன இவ்வுலகத்தின் ஆழத்தையும் பரப்பையும் உட்கிடக்கையையும் உணர்ந்து அவற்றை அவர் படைத்த எழுத்து வடிவில் தருபவர் கவியாவர். இவரோ ''கவீநாம் கவிம்'' ''கவிகளுக்கும் கவி, இணையற்ற புகழ் படைத்தவர்'' உபமச்வரவஸ் தமம் ''ப்ரம்ஹணாம் ப்ரம்ஹணஸ்பதிம்''. ருக்வேதமும் யஜுர்வேதமும் ப்ரம்ஹணஸ்பதி என்றே இவரைக் குறிப்பிடுகின்றன. அதர்வ வேதம் நமஸ்தே கணபதயே என்றே தொடங்குகிறது. கணபதி, ஏகதந்தர், வக்ரதுண்டர், தந்தீ எனப் பெயர்களை வேதம் அறிமுகப்படுத்துகிறது.

வேதம் கூறிய பெருமைகளையே கணேசப் பெருமானின் அவதாரங்களான வக்ரதுண்டர், கஜாநநர், மஹோதரர், ஏகதந்தர் முதலானவற்றில் கண்ட கணகர், முத்கலர். கசியபர், பார்கவர், வஸிஷ்டர் முதலான முனிவர்கள் மந்திரவடிவில் அவரைக் கண்டு வழிபட்டதை புராணங்கள் கூறுகின்றன.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

அந்த அவதாரங்களில் பகவான் காட்டிய லீலைகளைத் தம்மைக் காக்க வந்த பரமனின் அருட் செயல்களாகப் பாவித்துத் தேவர் முதலானோர் துதி வடிவில் வெளியிட்டுள்ளனர். இவையனைத்தும் முன் யுகங்களில் நிகழ்ந்தவை.

கலியுகத்தில் பகவானை வழிபட்ட ஸ்ரீ சங்கர பகவத் பாதர் முதலானோரும் செவிக்கினிய மொழி வடிவில் துதிகளாக அவரது பெருமைகளைத் தொகுத்துத் தந்துள்ளனர். இவையனைத்தையும் நம் வரை கிட்டும்படி சுவடிகளில் எழுதிப் பாதுகாத்துத் தந்த நம் முன்னோரும் பகவானின் அருள் பெற்றவரே. முன்னோரின் உடைமைப் பொருளாக இருந்ததைக் கடும் முயற்சியெடுத்துப் பாதுகாத்தும் நாம் வேண்டும்போது நமது உடைமையாக்கிக் கொள்ள வாய்ப்பைப் பெருமனத்துடன் நல்கிற ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதீ பன்னாட்டு நூலகம் முதலியவையும் பகவானின் அருளுள்ளத்தை நமக்கு உணர்த்துபவரே. இவற்றைத் தக்க விளக்கங்களுடன் நம்மையடுத்து வருகிற சந்ததியினருக்குத் தருவது நமக்குள்ள பெரும் பொறுப்பு. அது நிறைவுற அவன் தாள் பணிவோம். இவ்வரிய தெய்வ உணர்வு புகட்டுகிற நூல்களை எழுதிப் பாதுகாத்து நமக்கு விளங்கும்படி போதித்து நம் கைகளில் ஒப்படைத்த நம் முன்னோர்களுக்குச் சிரம் தாழ்த்தி இதனையே காணிக்கையாக சமர்ப்பிப்போம்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# ஸ்ரீ மஹாகணபதி

வாக்கிற்கும் மனத்திற்கும் அப்பாற்பட்டவரை அப்பாற்பட்டதற்கும் அப்பாற்பட்டவரை வழிபட வேண்டும். அவரை வழிபட அவரது அருள் பெறுதல் அவசியம். அவரது அருள்பெற அவரது வழிபாடு முக்கியம். எது காரணம் ? எது காரியம் ? அடையத் தக்கதே அடையும் வழியாகும் புதிரில் நம் முன்னோர் பல முறைகளை வகுத்து அவ்வழி சென்று நன்மை கண்டு அனுசாஸனமாக நம் வரை அவ்விளக்கங்கள் வந்து சேரும்படி குரு பரம்பரையையும் நூல் வரிசைகளையும் தந்துள்ளனர். அவற்றில் பெரும்பாலான முறைகள் இன்றுள்ள பாமரர் வரை பழக்கப்பட்டுள்ளன.

பகவானை அடையும் வழிகளாக ஒன்பது மார்க்கங்கள் வழக்கில் உள்ளன. 1) சிரவணம் - பகவானின் பெருமைகளைக் கேட்டறிதல், 2) கீர்தனம் - பகவானின் பெருமைகளை வாயாராப் பாடுதல் 3) ஸ்மரணம் - சிரவணத்தாலும் கீர்த்தனத்தாலும் மனத்தில் பதிந்த பகவானது லீலைகளை மீதமுள்ள பொழுதில் நினைத்து உருகுதல் 4) பாதஸேவநம் - கேட்டுப்பாடி நினைத்து உருவகப்படுத்திய பெருமானின் வடிவத்தைச் சித்திரமாக விக்ரகமாக அமைத்து வழிபட்டு அவரது திருவடிகளைத் தனக்குப் புகலிடமாகக் கொள்வது 5) அர்ச்சநம் - அவரை முறைப்படி வழிபடுவது 6) வந்தநம் - வழிபடுபவன் தன் அகந்தையையும் மமதையையும் இழந்து உலிர்க்கும் உயிரான பரமனிடம் தமதனைத்தையும் அர்ப்பணித்துத் தன்னையும் அர்ப்பணம் செய்வது 7) தாஸ்யம் - இதுகாறுமிருந்த அகந்தையை இழந்து விட்டதைத் தனக்கும் பரமனுக்கும் உணர்த்தி அவரது திருவடியார்களுக்கு அடியானாகப் பணிபுரிவது 8) ஸக்க்யம் - முதல் ஏழு உபாயங்களால் பகவானுடையவனாக (பாகவதனாக) மாறியதைப் பகவானும் ஏற்க அவர் நம்பால் தோழமை காட்ட, நாமும் அவரது ஸுகமே நம் ஸுகமாக உணர்கிற தோழமை. 9) ஆத்ம நிவேதநம் - இறைவன் நம் உள்ளத்தை அவனது உள்ளமாக்கி ஆட்கொள்ள அவன் ஆட்டி வைத்தபடி ஆடுகிற நிலை. இவை அனைத்தும் பக்தி எனும் நன்னீர் விட்டு வளர்பவை.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

இந்த ஒன்பது மார்க்கங்களில் ஏதேனும் ஒன்றிலோ அல்லது சிரவணம் முதல் ஆத்மநிவேதனம் வரை ஒவ்வொன்றையுமோ படியாக அமைத்து இறைவன் பால் செல்வது பல பக்தர்களின் வாழ்க்கை வரலாற்றில் காணப்படுகிறது. அதனால் அவை பழக்கத்தில் தெளிந்த உபாயங்களே. எனினும் பாமரனும் பயன்படுத்துகிற உபாயம் சிரவணமும் கீர்த்தனமும். பெரும்பாலான அறிவாளிகளும் இவ்விஷயத்தில் பாமரரே. வெகுச்சிலரே மூன்றுவதான ஸ்மரணத்தைக் கடைபிடிக்க இயலும் ! நாராயணன் எனும் நாமமுண்டு. அதனைக் கூற நாக்கும் நம் வசமுள்ளது. இவ்வாய்ப்பிருந்தும் நரகத்திற்குச் செல்கிறார்களே ! இதை விட விந்தை எது'' என்ற பழமொழியுண்டு. இறைவனை வழிபட எண்ணற்ற நாமங்கள் வகை வகையாக உள்ளனவே ! பொருளறிந்தும் பொருளுணராமலும் பக்தி உணர்வு மிகுந்தோ இல்லாமலோ கூறினாலும் நாமத்தின் சக்தி அதனை விட்டகலாததால் அது வேறொன்றையும் எதிர்பாராமல் செயல்படுவதால் உடனேயோ தாமதித்தோ நம் மனத்தைத் தன் வசப்படுத்தும் ஆற்றல் மிக்கதே.

இறைவனை யுணர விக்கிரகம் பெரிதும் உதவும் என்பர். உடலால் அவனை அடைய இயலாது. வாக்கும் மனமும் உடலால் அடைய முடியாததையும் பெறச் செய்கிற ஆற்றல் உள்ளவைதான். மனத்தால் உருவாகப் பெற்றதைத் தான் வாய் பேசும். வாயால் பேச முடிந்தவற்றையே மனம் கற்பனை (அமைப்பு) செய்யும். மனத்தால் உருவகப்படுத்தாத பொருளில் உடல், வாக்கு, மனம் என்ற மூன்றிற்கும் அப்பாற்பட்டவனை, உருவகப்படுத்த இயலாதவனைப் பற்றிக் கூறவோ கேட்கவோ உபகரணமில்லை எனினும் மஹர்ஷிகள் தவத்தால் கண்டு விண்டுரைத்த நாமங்களும் பகவானின் வடிவமைப்புகளும் விக்ரகங்களாக, பல, நம்மை வந்தடைந்துள்ளன.

மேலேழுந்தவாரியான அறிமுகமாக அல்லாமல் புரிந்து கொண்டு ஆழ்மனத்தில் பதித்துப் பல்வேறு பிறவிகளிலும் தொடர்ந்து அந்த நினைப்பு நிலைக்குமாறு இறைவன் தம் கருணையால் கொண்ட விக்கிரஹங்கள் பல உண்டு.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

(விக்ரஹம் - விசேஷேண க்ருஹ்யதே - சித்தே ஆதீயதே பகவத: ஸ்வரூபம் யேந). விக்ரமாக அமைந்தது பலவாறு காணப்படுகிறது. அவற்றில் முதலிடம் பெறுபவை பகவானது நாமமும் ரூபமும்.

விக்கிரகம் என்றதும் பதுமையாகவோ சித்திரமாகவோ அமைந்த உருவம் தான் நினைவில் வரும். ஸ்ரீ போதேந்திர ஸரஸ்வதி முதலான பெரியோர்கள் பகவானது திருநாமங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வடிவிலமைந்த விக்ரங்களே என்று கூறுவர். நாமம் பதிந்த பின்னரே. உருவம் மனத்தில் பதியும். நாமம் தெரியாததன் உருவம் ஆழப்பதியாது. நாமம் தரும் அழுத்தமே மனத்தில் ரூபத்தைப் பதிக்கிறது. இறைவனும் நாமமும் பெற்ற பின்னரே ரூபம் பெறுகிறுன். (நாமரூபே க்ருஹ்ணாதி ஜஹாதி) நாம வழியே அறிமுகமானதே உருவ வழியில் பதியும். நாமமும் ரூபமும் விக்ரகமெனினும் நாமமே இவ்விரண்டிற்குள் முக்கியமானது. உருவத்தால் இறைவனை உணராதவரும் நாமத்தால் உணர இயலும். உருவம் தெரியாத இடத்திலும் பெயரிட்டழைத்ததும் பெயரின் உடமையாளர், தன்னைத்தானே அறிமுகப் படுத்திக் கொள்வர்.

பகவானின் நாமம் வீர்யம் மிக்கது. கேலியாகவோ விளையாட்டாகவோ பரிகாசமாகவோ, அறிந்தோ அறியாமலோ கூறினாலும் அது தன் இயல்பு மாறுபடாமல் தன் செயலைச் செய்கிறது. பகவானுக்கும் தன் நாமத்தில் அளவு கடந்த பற்று. எந்த நாமியும் தன் நாமத்தில் பற்றும் மதிப்பும் கொள்வது இயல்பே.

வாழ்க்கை என்பது பெருஞ்சலனம். சலனத்திற்கு ஓர் எதிரி முடக்கம் - தடை - இடையூறு. இத்தடை ஒவ்வொரு நொடியிலும் நேரலாம். அத்தடை நம் செயலை முடக்கலாம். அல்லது தடையே காரணமாகவே முயற்சி முடுக்கி விடப்பட்டு விரிவடைந்து எளிதில் அப்பணி நிறைவுறலாம். பிள்ளையார் சுழி, பிள்ளையாரின் உயரத்தூக்கிய துதிக்கை. விநாயகரின் நாமம் இவை தடையை நீக்கிச் செயலை நேராக்கி நிறைவிற்கு இட்டுச் செல்கின்றன.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

விநாயகரின் திருநாமங்கள் எண்ணிலடங்காதவை. அவற்றில 16 திருநாமங்கள் எப்பணியைத் தொடங்கினாலும் முதலில் கூறப்படுபவை. ஸுமுக: எனத் தொடங்குகிற அவற்றைக் கூறிப் பணித் தொடங்கத் தடை நேரிடாது என்பர். பணியின் தொடக்கம் மங்களமாயிருக்கும் என்பதை ஸுமுக: என்ற முதல் நாமமே அறிவிக்கும். இந்நாமங்களைத் திரும்பத் திரும்பக்கூற பதினாறும் பெற்றுப் பெரு வாழ்வு வாழலாம் என்று காஞ்சீ மஹா ஸ்வாமிகள் அவர்கள் தமக்கே உரித்தான தெய்வக்குரலில் அழகாகக் குழைவுடன் நினைவுபடுத்துவது உண்டு. ஸ்ரீரா கணபதி அவர்கள் தொகுத்தளித்துள்ள தெய்வத்தின் குரலின் ஒவ்வொரு பாகத்தின் முதல் பகுதி ஸ்ரீ விநாயகரைப் பற்றியதே. குழந்தை ஸ்வாமி அவ்வளவு எளியவர் என்பதை பெரியவாள் கண்ணீர் மல்கக் கூறுவார்கள். அவர்களுக்கும் ஏற்பட்ட தடை பற்றிக் கூறி குழந்தை ஸ்வாமியின் விளையாட்டு இது என்ற வரலாறுகளும் அதில் இடம் பெறும். 16 பெயர்கள் கொண்ட ஸ்தோத்திரத்தைச் சொல்லிக் கேட்டாலும் போதும் என பலச்ருதி கூறுகிறது. மஞ்சளில் பிடித்த பிள்ளையாரை இந்நாமங்கள் கூறியே மலரால் அர்ச்சிப்பர்.

அந்தப் பதினாறு பெயர்கள் அருள்கிற பதினாறு பேறுகளும் (தனிப்பாடலில் - ''துதிவாணி, வீறு, விசயம், சந்தானம், துணிவு, தனம், மதி, தானியம் ஸௌபாக்கியம், போகம், அறிவு, அழகு, புதிதொரு பெருமை, அறம், குலம், நோயகல்பூண் வயது என்பவை) பெற்றவனுக்கு பெறுவதற்கு வேறு என்ன இருக்கிறது ?

பிரகாசமே வடிவாகக் கொண்ட பரம்பொருள் கணேசராக உணர்த்துகிற நிலைக்கு வர சிவபெருமானும் பார்வதியும் உதவுகின்றனர். உலகையே ஈன்று காக்கும் பொறுப்புள்ள அந்த ஆதி தம்பதிகள் 'ப்ரபஞ்சமாதாபிதரௌ'' ''ஜகத: பிதரௌ'' என பேரறிஞர்கள் அம்மையப்பனாகக் கண்ட அந்த ஆதி தம்பதிகள் இருவரும் கணேசரின் தாயும் தந்தையுமாகிறார்கள். சிவபெருமானின் தேஜஸில் தோன்றியவருக்குப் பார்வதி வளர்ப்புத் தாயானாள் என்பர். பார்வதி தம் உடலில் பூச வைத்திருந்த நறுமணத்தூளை உருட்டி உருவாக்கித் தன்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

சக்தியான சைதன்யத்தை உட்செலுத்தி உண்டாக்கியவருக்கு சிவபெருமான் வளர்ப்புதந்தையாவார் என்பர். சிவபெருமானும் தேவியும் அந்தப் புரத்தில் சுவற்றிலிருந்த களிரையும் பிடியையும் ஆர்வத்துடன் காண யானை முகத்துடன் தோன்றியவர் என்பர். பார்வதி உடற்பூச்சை வழித்து உருட்டிக் கங்கையில் விட, கங்கை அதனைக் கஜமுகனாக்க, இருவரையும் தாயாக ஏற்ற பெருமான் என்பர். ப்ரகாச நிலையிலிருந்த பரம்பொருள் உலகிற்கு உதவுகிற விமர்சப் பொருளாக மாற உதவியவர் சிவனும் பார்வதியும் கங்கையும். பின்னர் இதே போன்று காமேசுவரர் காமேச்வரி தம்பதியினர். கணகர் வசிஷ்டர் கசியபர் முத்கலர் முதலானோரும் விமர்ச நிலைக்கு உதவியவர்கள் என்பர். இப்படி ஆதி தம்பதிகளும் தவமிக்க முனிவர்களும் தவவழியே பெற்றமையால் பிள்ளையாகத் தோன்றியவரே பிள்ளையாராக அவர்களாலும் வழிபடப் பெறுகிறுர் என்று புராணங்கள் காட்டுகின்றன.

பண்படுத்தத் தக்கதையும் பண்படுத்தலுக்கு உட்படுவதையுமே பண்படுத்த முடியும். பண்படுத்தலை விநயனம் விநயம் என்பர். விநயனம் இரு வகைப்படும், இயல்பாக அமைந்தது, செயற்கையாக ஏற்கப்பட்டது என. இயல்பாக அமைந்த பண்பு முன் பிறவிகளில் ஏற்பட்ட செயற்கையான பழக்கத்தால் விளைந்தது. இப்பிறவியில் குரு முதலானோரால் வழிபடுத்தப்படுவது செயற்கையாக விளைந்தது (க்ருதகம்). பண்படுத்த இயலாததைப் பண்படுத்த முடியாது. பண்பாட்டிற்கு உட்பட மறுப்பதையும் பண்படுத்த முடியாது என்பார் கௌடில்யர். (விநயக்ரியாஹி விநயதி த்ரவ்யம் - நாத்ரவ்யம்) த்ரவ்யம் த்ரவயிதும் அர்ஹம் - த்ரவயிதும் விநயார்ஹதயா பரிணமயிதும்)

விநயனத்தில் தேர்ந்தவரானதால் இவர் விநாயகர். பண்பட்டவரைக் கைபிடித்து அழைத்துச் செல்வார் (விசேஷேண நயதி) தலைவராக முன் நின்று நல்லதைச் சுட்டிக் காட்டுவார் - (விசிஷ்ட: நாயக:) தடையுண்டாக்கி முடங்கித் திணறுபவனே, தடையேற்படுத்தியும் அடங்காதிருப்பவனைத் தண்டித்து வளைத்தும் வழிபடுத்துபவர் - வில்லுக்கான விறைப்புள்ள மூங்கிலை அனலில் வாட்டி வளைத்துப் பயன்


https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

படச் செய்வது போல் பயன்படுவதாகக் கொணர்வார் (விநயதி). இறையுணர்வு சிறிதுமின்றி அடங்காத் திமிர் கொண்டவனை அவனுக்கு ஹிதமில்லாத பாதையில் இட்டுச் சென்று துன்பத்திற்கு ஆளாக்குபவர் (விபரீதம் நயதி) மக்களை நல்வழிப்படுத்தவே அறிவூட்டி நல்வழியைப் பின்பற்றச் செய்யவே இந்த விநாயகர் எனும் விமர்சத் தோற்றம். உலகியல்பில் தடை நீக்குபவர் தடை செய்யார். தடை செய்பவர் தடை நீக்கார். தடை செய்பவருக்கும் தடை நீக்கும் ஆற்றலிராது. முற்றிலும் மாறுபட்ட இவ்விரு ஆற்றலையும் ஒருங்கே காட்டுகிற தெய்வத்தின் ஆற்றல் இது.

யானைத் தலையும் மனித உடலும் ஒரு விந்தையான இணைப்பு. யானையின் மூளையிடும் கட்டளையை மனித உடல் ஏற்காது. மனித உடலின் உணர்வை யானைத்தலை சிந்தியாது. வாய் பொத்தி வாயடக்கிய மனிதன் போல் துதிக்கையில் மறைந்த வாயுள்ள முகம். அகன்ற நோக்குள்ள விசாலாக்ஷீ விசாலநேத்ரர் என்ற இறைக்காட்சிக்கு மாறுபட்ட குறுகிய கண்கள். தன்னிலை உணர்விராததாகக் காட்டுகிற மேடிட்டுப் பருத்த மத்தகம். எப்போதும் திறந்த செவியனாக இராமல் விசிறிபோல் முன்னும் பின்னுமாடி காதுத்துளைகளை மூட முற்படுகிற செவி மடல்கள் என்று எண்ணுகிற அதே நேரத்தில் பரம்பொருளாக இருப்பதை யானை முகமும் உயிரினமாக இருப்பதை மனித உடலும் காட்டுவதாக முனிவர் கண்ட காட்சி விந்தைக்கும் அப்பாற்பட்டதே.

எந்நிலையிலும் சிறிதும் பொருந்தாப் பெருச்சாளி வாகனம். மூர்க்கனான கஜாஸுரன் பகவானுடன் போரிட்டுத் திணறிப் பெரும் எலி வடிவுடன் மாயையால் மறைய அதனைப் பிடித்து வாகனமாக்கிக் கொண்டார் என ஒருபுறம் விளக்கம்.

வெளிப் பொருளையே நாடிக் கொண்டிருந்த ஜீவனை அடக்கி, வெளிப்பொருளாக இனியவையையே வெளியே காட்டியும் தன்னையே சுமக்க விரும்புகிற ஆழ்மனமாக்கி அமைதியுள்ள பெருச்சாளி அது என்பர். ஆழ்மனத்தின் முன் வடிவம் பெருச்சாளி. மூர்க்கத்தனமும் திமிரும் எதனையும் பொருட்படுத்தாத அடக்கமின்மையுமே வடிவான பெருச்சாளி.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

வெளி வடிவ அளவில் மாறு விடினும் உள் மனத்தில் எதிரிலுள்ள கொழுக்கட்டை முதலியவற்றில் ஆர்வமற்றுப் பெருமானை உள்ளத்தில் தாங்குவதையே பெருமையாகக் கொண்டு எந்தக் கட்டும் கயிறும் தேவைப்படாத வாகனமாக அமைந்துள்ளதை இது காட்டுகிற தென்பர்.

இவ்வாறு சேராச்சேர்க்கையை உணர்த்துவதே மாயை. கஜா எனும் அந்த மாயையையே தான் வெளிப்படுகிற முகமாக்கிக் கொண்டவர் கஜாநநர் என்பர்.

இப்படி நாம் அறிந்த பல பெயர்களே அவரை அடையாளம் காட்டுகின்றன. இவற்றைப் பொருள் உணர்ந்தோ உணராமலோ கூறினாலும் அவை தன் இயல்பால் இறைவனை உணர்த்தும்.

ஒன்றே போதும். எனினும் தீர்க்கதர்சிகளான பெரியோர்கள் தாமறிந்த தனைத்தையும் தன் பிற்காலத்தினர் எல்லோரும் அறிய வேண்டும் என்ற கருணையால் ஸஹஸ்ர நாமங்களாக, திரிசதியாக அஷ்டோத்தர நாமங்களாகத் தொகுத்தளித்த பின்னும் அதற்கும் வாய்ப்பில்லாதவர் 28, 21 16, 15, 10, 8 என எண்ணளவில் வரிசையாகக்குறைத்து அதற்கும் வாய்ப்பில்லாதவரும் சுழியிட்டாலே பிரணவத்தைக் கூறினாலே போதும் என வழிகாட்டியுள்ளனர். அவற்றின் தொகுப்பே இந்த இரண்டாம் பாகம். நமக்கும் இத்தனையையும் பயன்படுத்த வாய்ப்பிருந்தால் அவர் கருணை வென்று விட்டது. நமக்குப்பின் நம் ஸந்ததியில் எவருக்கேனும் பயன்பட்டாலும் நமக்கு மங்களமே. நம் வரை வந்த அருந்தனத்தை நம் சந்ததியர் வசம் ஒப்படைப்பதே பெரும் அறப்பணி. இப்பணியைப் புரிய வாய்ப்பளித்த பகவானின் அரும் பெருங்கருணை நம் சந்ததியருக்கும் இதனைப் பயன் படுத்துகிற அரிய வாய்ப்பளித்து அருள் பாலிக்கட்டும் என வேண்டி நிற்போம்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# श्री विघ्नेश्वरस्तुतिमञ्जरी

## द्वितीयो भागः (नामावली)

## विषयानुक्रमणिका





https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy





https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# ஸ்ரீவிக்நேச்வர ஸ்துதி மஞ்ஜரீ

## இரண்டாம் பாகம் (நாமாவளி)

## பொருளடக்கம்





https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



திருச்சி மலைக்கோட்டைப் பிள்ளையார்

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

१

# श्रीविघ्नेश्वरस्तुतिमञ्जरी

## ஸ்ரீ விக்நேச்வர ஸ்துதி மஞ்ஜரீ

### नामावली

श्री गुरुभ्यो नमः ॥

वन्दे गुरुपदद्वन्द्वमवाङ्मनसगोचरम् ।
रक्तशुक्ल प्रभामिश्रमतर्क्यं त्रैपुरं महः ॥

दयमानदीर्घनयनां देशिकरूपेण दर्शिताभ्युदयाम् ।
वामकुचनिहितवीणां वरदां सङ्गीतमातरं वन्दे ॥

दयिन्या श्रीमात्रा दहरकुहरे सूत्रधरया
समादिष्टा वाचामधिपतिषु काप्यन्यतमिका ।
मदाराध्यश्रीमद्गुरुचरणनिर्णेजनजलैः
पवित्रे जिह्वाग्रे नटति मम देवी करुणया ॥

श्रुतिस्मृतिपुराणानामालयं करुणालयम् ।
नमामि भगवत्पादशङ्करं लोकशङ्करम् ॥

अपारकरुणामूर्तिं ज्ञानदं शान्तरूपिणम् ।
श्रीचन्द्रशेखरगुरुं प्रणतोऽस्मि मुदाऽन्वहम् ॥

परित्यज्य मौनं वटाधःस्थितिं च व्रजन्भारतस्य प्रदेशात्प्रदेशम् ।
मधुस्यन्दिवाचा जनान्धर्ममार्गे नयन्श्रीजयेन्द्रो गुरुर्भाति चित्ते ॥
तव तत्त्वं न जानामि तदमेयं धिया मम ।
अनीदृशस्त्वं प्रथितस्तादृशे ते गुरो नमः ॥



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# ॥ श्रीगणपतिषोडशनामस्तोत्रम् ॥

## ஸ்ரீ கணபதி ஷோடசநாம ஸ்தோத்திரம்

सुमुखश्चैकदन्तश्च कपिलो गजकर्णकः ।
लम्बोदरश्च विकटो विघ्नराजो विनायकः ॥
धूमकेतुर्गणाध्यक्षो भालचन्द्रो गजाननः ।
वक्रतुण्डश्शूर्पकर्णो हेरम्बः स्कन्दपूर्वजः ॥

षोडशैतानि नामानि यः पठेच्छृणुयादपि ।
विद्यारम्भे विवाहे च प्रवेशे निर्गमे तथा ।
सङ्ग्रामे सर्वकार्येषु विघ्नस्तस्य न जायते ॥

ஸுமுகஶ் சைகதந்தஶ் ச கபிலோ கஜகர்ணக:
லம்போதரஶ்ச விகடோ விக்க்நராஜோ விநாயக:

தூமகேதுர் கணாத்த்யக்ஷ: பாலசந்த்ரோ கஜாநந:
வக்ரதுண்டஶ் ஶூர்பகர்ணோ ஹேரம்ப: ஸ்கந்தபூர்வஜ:

ஷோடஶைதாநி நாமாநி ய: படேத் ஶ்ருணுயாதபி
வித்யாரம்ப்பே விவாஹே ச ப்ரவேஶே நிர்கமே ததா
ஸங்க்ராமே ஸர்வகார்யேஷு விக்க்நஸ் தஸ்ய ந ஜாயதே.

1. ஸுமுகர், 2. ஏகதந்தர், 3. கபிலர், 4. கஜகர்ணகர், 5. லம்போதரர், 6. விகடர், 7. விக்னராஜர், 8. விநாயகர், 9. தூமகேது, 10. கணாத்த்யக்ஷர் 11, பாலசந்த்ரர், 12. கஜானனர், 13. வக்ரதுண்டர், 14. சூர்ப்பகர்ணர். 15. ஹேரம்பர், 16. ஸ்கந்த பூர்வஜர், என்று 16 பெயர்கள் வாய்ந்தவர் ஸ்ரீ மஹாகணபதி. கல்வியைத்தொடங்கும்பொழுதும், திருமணத்திலும், புதுமனை புகும்போதும், பயணத்திலும், போரிலும், எல்லா நற்செயல்களிலும் இந்தப் பதினாறு பெயர்களை நினைத்துச் செயலாற்றுகிறவனுக்கு எவ்வகையான தடையும் தலை காட்டாது.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# ஸ்ரீ மஹாகணபதி ஸஹஸ்ர நாமஸ்தோத்திரம்

## முன்னுரை

ஸ்ரீகணேசபுராணத்தில் நாற்பத்தாறும் அத்யாயமாக இந்த ஸ்தோத்ரம் 215 சுலோகங்கள் உள்ளதாக அமைந்துள்ளது. இதற்கு உரையாக, ஒவ்வொரு நாமத்திற்கு பொருள் விளக்கம் பிரும்மாண்ட புராணத்தின் பூர்வகண்டத்தில் 47-53 அத்யாயங்களில் பராசரர் - வ்யாஸர் ஸம்வாதமாகக் காணப் படுகிறது. 651 சுலோகங்கள் கொண்ட இவ்விளக்கத்தில் முதல் 38 சுலோகங்கள் முன்னுரையாக உள்ளன. மீதமுள்ள 613 சுலோகங்கள் நாம விளக்கம் கொண்டவை, இந்த நாம விளக்கப்பகுதி ஸ்ரீபாஸ்கரராயரின் கத்யோதபாஷ்யத்துடன் பெருமளவு எழுத்திற்கெழுத்து ஒத்துப்போகிறதெனலாம். (ஒத்துப் போகாமல் தனித்துள்ள விளக்கப்பகுதி மட்டும் இங்கு அடிக்குறிப்பாகத் தரப்பட்டுள்ளது. மற்ற விடங்களில் எழுத்தில் கூடச் சிறிதும் மாற்றமில்லை எனலாம்.)

மஹாராஷ்டிரத்தில் பிறந்து காசியில் உத்தமகுருவை யடைந்து மந்திரசித்தி பெற்று வாழ்நாளின் இறுதிப்பகுதியைத் தமிழ்நாட்டில் தஞ்சை மாவட்டத்திலுள்ள பாஸ்கரராயபுரம் எனத் தனக்கு மானியமாக அந்நாளரசு தந்த கிராமத்திலும் திருவிடை மருதூரிலும் மந்த்ர தந்த்ர வழிபாடுகளிலேயே கழித்த ஸ்ரீ பாஸ்கரராயர் என்ற பாஸுராநந்தநாதர் ஸ்ரீலலிதாஸஹஸ்ரநாம ஸ்தோத்ரத்திற்கு ஸௌபாக்ய பாஸ்கரம் என்ற உரையையும் ஸ்ரீமஹாகணபதி ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரத்திற்கு கத்யோத பாஷ்யம் என்ற சுலோகமாக அமைந்த சிறு விளக்க உரையையும் தந்துள்ளார். ஸ்ரீவித்யாவிஷயமாக அவர் எழுதிய பலநூல்களில் ஸம்ஸ்க்ருதமறிந்த பாமரனும் இவ்விரண்டு உரை நூல்களையும் பேரார்வத்துடன் படிப்பான். மஹாகணபதி ஸஹஸ்ரநாம உரைப்பகுதி கணேசபகவானுக்குப் பக்தன் நேரிடையாகக்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



கூறும் ஸ்தோத்ரமாகவும் அமைந்துள்ளது மற்றொரு சிறப்பு. சுமார் 610 சுலோகங்கள் கொண்ட இந்த உரை ப்ரும்மாண்ட புராணத்திலுள்ள விளக்கத்தை எழுத்திலும் வரிசையிலும் ஒத்துச் சிறிதும் மாறுபடாதிருப்பது வியப்பைத் தருகிறது. பிரும்மாண்ட புராணத்து விளக்கத்தையும் பாஸ்கரராயரின் உரையையும் ஒட்டி கணேசபுராணம் விநாயகரஹஸ்யம் முத்தல புராணம் முதலிய மூல நூல்களில் காணப்பெறுகிற ஸ்ரீமஹாகணபதி பற்றிய தத்துவ விளக்கம், அவதாரக்கதை, லீலைகள் இவைகளையும் முன்நிறுத்தி ஆயிரம் நாமங்களின் விளக்கச்சுருக்கம் தமிழில் தொடர்ந்து தரப்படுகிறது.

இந்த ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரத்தின் தோற்றுவாய் - கணேசபுராணம் இதனை விளக்குகிறது. கிருத்ஸமதர் ஸ்ரீகணபதியின் மந்த்ர ஜபத்தையே தவமாக்கி ஸ்ரீகணபதியை வழிபட்டார். கணபதியின் அருளால் பெரும் புகழ் பெற்றார். ஒரு நாள் அவர் எதிரில் ஒரு சிறுவன் தோன்றினான். அவன் தன் உரத்த பேரொலியால் மூவுலகையும் நடுங்கச் செய்தான். தன்னைப் புதல்வனாக ஏற்கும்படி கிருத்ஸமதரிடம் வேண்டி நின்றான். கிருத்ஸமதர் அவனுக்கு கணபதி மந்த்ரத்தை உபதேசித்து கணபதியை வழிபடச் செய்தார். கடும் தவத்தின் பயனாக கணபதியின் அருள் பெற்று மூவுலகையும் அவன் தன் வசப்படுத்தினான். கணபதி அவனுக்குத் தங்கத்திலும் வெள்ளியிலும் இரும்பிலும் மூன்று புரங்களையமைத்து விரும்பியபடி மூவுலகிலும் செல்ல வரம் தந்தார். ''நீ வரை மீறிச் சிவபெருமானுடன் மோதும் போது ஒரே பாணத்தால் அவர் உன்முப்புரங்களையும் அழித்து விடுவார். அதன் பின் ஞானியாகி நீ வீடு பேறு பெறுவாய்'' என்றும் வரத்திற்கு மாற்றமைத்து மறைந்தார். அன்றிலிருந்து கிருத்ஸமதரின் புதல்வன் திரிபுராஸுரன் ஆனான்.

மூவுலகையும் வென்ற திரிபுரன் வெறி மிக்கவனாகி, பிரும்மலோகத்தையும் வைகுண்டத்தையும் வென்று அங்கு தன் புதல்வர்களான பிரசண்டனையும் சண்டனையும் முறையே அதிபதியாக்கி கைலாஸம் நோக்கிச் செல்லும் போது கணபதி அவன் முன் தோன்றி ''சிவபெருமான் தான் வழிபட

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



வைத்திருக்கிற சிந்தாமணி கணபதி விக்ரஹத்தைப் பறித்து என்னிடம் சேர்ப்பாய்'' என்று உத்தரவிட்டார். திரிபுரனும் கைலாசம் சென்று சிவபெருமானுடன் போரிட்டு வென்று சிந்தாமணி கணபதி விக்ரஹத்தைப் பறித்துத் தன்னிருப்பிடம் வரும்போது அவன் கையிலிருந்து கணபதிப் பதுமை மறைந்தது. அது அவனுக்கு அபசகுனமாகத் தோன்றியது.

சிவபெருமான் தனது தோல்விக்குக் காரணம் பற்றி சிந்திக்கும் போது நாரதர் ''போருக்குச் செல்லு முன் கணபதியை வணங்காமற் சென்றது தான் காரணம்'' எனச் சொல்ல சிவபெருமான் கணபதி விக்ரகம் அசுரன் வசமானதை உணர்ந்து கணபதித் தியானத்தில் அமர்ந்தார். அந்த தியான உருவே மூர்த்தியாக வெளியில் தோன்றியது. ஐந்து முகம், பத்து கைகள், நெற்றியில் சந்த்ரன், முண்ட மாலை, நாகாபரணம், கிரீடம் தோள்வளை முதலிய அணிகள், அக்னி-சூர்ய- சந்த்ரர்களை வெல்கிற பேரொளி, இந்தத் திருவுருவில் ஸ்ரீகணபதியைக் கண்டு வியந்து அவரை வழிபட்டார். ''என் மந்திர பீஜம் கொண்ட என் பெயரைக் கொண்டு மந்திரித்த அம்பைத் திரிபுரன் மேல் செலுத்தி வெற்றி பெறுவீர்'' எனக்கூறித் தன் பேராயிரத்தையும் சிவபெருமானுக்கு கணபதி உபதேசித்தார். சிவன் இந்த நாமபலம் கொண்டு திரிபுரனை வென்றார். திரிபுரனும் தன் ஆணவம் அழிந்ததும் ஆத்மஞானம் பெற்று வீடுபேறு பெற்றான்.

பாரதபூமியில் மூன்று ஸஹஸ்ர நாமங்கள் பெரிதும் ஆர்வத்துடன் படிக்கப்பெறுகின்றன. முதலாவது விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம். ஸ்தோத்ரத்தால் துதிக்கப்படுகிற தெய்வமான கண்ணனின் எதிரில் பீஷ்மர் தர்மபுத்திரருக்கு இதனை உபதேசிக்கிறார். இரண்டாவது ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம். தேவி ஸ்ரீலலிதா தன் பணியாளர்களான வாக்தேவிகளைக் கொண்டு பேராயிரத்தைத் தொகுக்கச் செய்து தன் எதிரில் பாடச்செய்து உலகுக்கு அளிக்கிறாள். மூன்றாவது இந்த ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம். ஸ்தோத்ரத்தின் உட்பொருளான கணேசரே தானே உலகத் தந்தையான சிவபெருமானுக்கு உபதேசமாக அருளியது.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

श्रीविघ्नेश्वराय नमः

# श्री महागणपति सहस्रनामस्तोत्रम्

## श्रीभास्कररायदीक्षित प्रणीत खद्योत भाष्यसङ्ग्रहयुतम् ।

गुरुरेव गतिर्गुरुमेव भजे, गुरुणैव सहास्मि, नमो गुरवे।
न गुरोः परमं, शिशुरस्मि गुरोः मतिरस्ति गुरौ मम, पाहि गुरो॥

गणेशो वः पायात् प्रणमत गणेशं जगदिदं
गणेशेन त्रातं नम इह गणेशाय महते।
गणेशान्नास्त्यन्यत्त्रिजगति गणेशस्य महिमा
गणेशे मच्चित्तं निवसतु गणेश त्वमव माम्॥

इह खलु सर्ववेदान्तसंवेद्यं अखण्डं सत् चिद् आनन्दं निरस्तत्रिविधभेदं अवाङ्मनसगोचरं स्वप्रकाशं मुक्तोपसृप्यं परं ब्रह्म। तन्निर्विकल्पेन तद्विषयकसविलासाज्ञाननिवृत्त्या कण्ठचामीकरन्यायेन तदात्मतावाप्तिरूपो मोक्ष इत्यविवादम्। स च निर्विकल्पः शुद्धचित्तानामेव न मलिनाशयानाम्। चित्तशुद्धौ तु श्रौतस्मार्तकर्माणि तत्तद्वर्णाश्रमोचितानि वेदे कर्मकांडसमधिगम्यानि बहिरङ्गोपायाः। तस्यैव ब्रह्मणः सगुण-निर्गुणभेदेन द्विविधस्य उपासनानि वेदे रहस्यतरोपनिषत्कांडसमधिगम्यानि अन्तरङ्गोपायाः। बहिरङ्गानुष्ठान-शीलानामेव त्वन्तरङ्गानुष्ठानेऽधिकारः। सगुणं तु रूपमुपासकानुग्रहार्थं कल्पितमेव इत्युपासकरुचिवैचित्र्येण नानाविधम्। तेषु 'आदित्यमंबिकां विष्णुं गणनाथं महेश्वरम्' इति स्मृत्युक्तरूपाणि तत्तदवांतरमूर्तिभेदाश्च तत्तज्जन्मायातसंस्कारानुगुण्ये नोपास्यानीति सर्वेऽपि ईश्वरा एव। अत एव पुराणान्यपि तत्तदुपासकानुजिघृक्षया प्रवृत्तानि; तस्य तस्यैव सर्वोत्तमत्वम्, अन्येषां ततोऽपकर्षं च, नहिनिंदान्यायेन प्रतिपादयन्ति। कल्पभेदेन एकस्मादन्येषामुत्पत्तिः



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



संभवतीत्यादिकमाकरेषु स्पष्टम्। तत्र गणपतिविषये हेरम्बोपनिषद्गणेशोपनिषदाद्याः श्रुतयः, ऐदंपर्येण गाणपतन्त्राणि, गणेशोपपुराणं, पुराणान्तरेष्वपि तत्र तत्र सर्वोत्तमत्व-निरूपणभागाश्च, इति शतशः प्रमाणानि तत्तद्विदां स्पष्टानि।

तदुपासनं चैकाक्षरषडक्षराष्टाविंशत्यक्षरादि – बहुविधगणपति-मंत्रजपादिरूपं बहुविधम् । स्वतंत्रतया सहस्रनामस्तवपाठोऽपि । सहस्रनामस्तवस्यापि पुराणतंत्रभेदेन बहुविधस्य मध्येऽयमेव बहुभिरुपासकैः परिगृहीत इत्ययमेव व्याक्रियते ॥

गणेशपुराणे तावदुपासनाखण्डे—'अष्टादशपुराणानि-विस्तराच्छ्राविताानि नः। अन्येषामपि शुश्रूषा वर्तते वह्निसंभव''. इति सूतं प्रति ऋषीणां प्रश्ने पुराणमवतार्य कतिचिद् आख्यानानि निर्वर्ण्य षट्त्रिंशमध्यायमारभ्य गृत्समदोपाख्यानं प्रवर्तितम् । तदीयक्षुतात् त्रिपुरासुरस्योत्पत्तिः, तस्य तपः, तस्मै वरदानं, तस्य त्रैलोक्यजयः, शिवेन सह युद्धं, शिवपराजयः, नारदं प्रति शिवकृतप्रश्नः, नारदवाक्ये — 'युद्धाय गन्तुकामेन नार्चितो गणपस्त्वया । अतः पराभवं प्राप्तोऽस्यग्निनेत्र पिनाकधृक्' इत्यादि। ततः, ''सोऽतप्यत तपोऽत्युग्रं दश वर्षाणि शंकरः । ततस्तस्य मुखांभोजान्निर्गतोऽभूत्पुमान् परः । पञ्चवक्त्रो दशभुजो भालचन्द्रः शशिप्रभः। मुण्डमालः सर्पभूषो मुकुटाङ्गदभूषणः । अग्र्यर्कशशिनो भाभिस्तिरस्कुर्वन् दशायुधः'' इत्यादिना गणेशाविर्भावतत्प्रसादवरदानादिकं उक्त्वा, 'ततः स्वनाम्नामवदत् सहस्रं तस्मै गणेशः प्रणताय दिव्यम्। शिवस्य भक्त्या परितुष्टचित्तो जयप्रदं कामकरं जनानाम् ॥' इत्यादिना तपःसमाप्तिः पञ्चचत्वारिंशेऽध्याये वर्णिता।

तत उत्तरेऽध्याये ब्रह्माणं प्रति व्यासकृतप्रश्नः-:'व्यास उवाच ॥ कथं नाम्नां सहस्रं स्वं गणेश उपदिष्टवान् । शिवायैतन्ममाचक्ष्व

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



लोकानुग्रहतत्पर !" इति । ततः- ब्रह्मोवाच । 'देव ' एवं पुरारातिः' इत्यादिश्लोकचतुष्टयेन पूर्वोक्तविस्तृतकथायाः संक्षेपेणानुवादः । तदिदं स्तोत्रं गणेशपुराणे षट्चत्वारिंशत्तमाध्यायरूपम् । अत्र पूर्वपीठिका-भागः पंचश्लोकात्मकः । मध्ये नामभागः सार्धषट्षष्ट्युत्तरशत-श्लोकात्मकः । अन्त्यः फलश्रुतिभागः सार्धत्रिचत्वारिंशत्श्लोकात्मकः । संहत्य पञ्चदशोत्तरे द्वे शते श्लोकानामुक्त्वा सप्तचत्वारिंशेऽध्याये पुनर्युद्धं त्रिपुरसंहारादिकं चोक्त्वा त्रिपुराख्यानमुपसंहृतम् ।

एवं व्यासेन पृष्टमर्थं दीनजनानुजिघृक्षयोपदिदिक्षुर्भगवान् ब्रह्मा 'सहस्रनाममंत्रोऽयं जपितव्यः शुभाप्तये' इति मंत्रजपं विधाय गुरुसंप्रदायशुद्धिमन्तरेण लब्धस्य फलानावहत्वाद्गुरुपरंपराज्ञाना-वश्यकत्वं ध्वनयितुमाख्यायिकां पूर्वं विस्तृत्य वर्णितामपि पुनः संक्षिप्यानुवदति

*व्यास उवाच*

**कथं नाम्नां सहस्रं स्वं गणेश उपदिष्टवान्**
**शिवायैतन्ममाचक्ष्व लोकानुग्रहतत्पर ! ॥ १ ॥**

*ब्रह्मोवाच –*

**देव एवं पुरारातिः पुरत्रयजयोद्यमे ।**
**अनर्चनाद्गणेशस्य जातो विघ्नाकुलः किल ॥ २ ॥**

**मनसा स विनिर्धार्य ततस्तद्विघ्नकारणम् ।**
**महागणपतिं भक्त्या समभ्यर्च्य यथाविधि ॥ ३ ॥**

**विघ्नप्रशमनोपायमपृच्छदपराजितः ।**
**संतुष्टः पूजया शंभोर्महागणपतिः स्वयम् ॥ ४ ॥**

**सर्वविघ्नैकहरणं सर्वकामफलप्रदम् ।**
**ततस्तस्मै स्वकं नाम्नां सहस्रमिदमब्रवीत् ॥ ५ ॥**

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



एवं पूर्वाध्यायैरुक्तरीत्या उक्तं च — 'गुरुक्रममविज्ञायोपास्ते यः स्वेष्टदेवताम् । सोपास्तिर्निष्फला ज्ञेया भस्मन्यर्पितहव्यवत् । तस्माद्यत्नेन विज्ञेया मूलाद्गुरुपरंपरा' इति । सा यथा—सर्वेषां गाणपतमंत्राणां आदिगुरुर्गणेश एव । ततो गणक्रीडस्ततो विकट इत्यादिक्रमेण कुलाख्या गुरवो नव । ततः सुरानन्दादयो विद्यागुरवोऽपि नव । ततः संतानगुरवो विनायकादयो विंशतिः । एतेषु प्रत्येकं दिव्यौघाः सिद्धौघा मानवौघाश्चेति त्रेधा विभागो गुरुमुखादवसेयः । तत्पश्चात्कपिलादिव्यासपर्यन्ता एकविंशतिः । ततो गणकादि-शंकराचार्यांता द्विचत्वारिंशत् । संभूयैकोत्तरं शतं गुरवो विद्यारण्यश्रीपादैर्विद्यार्णवे प्रतिपादिताः । तेषां विशिष्टनामानि तत्रैव द्रष्टव्यानि[1] । प्रायेणास्मिंस्तोत्रे प्राथमिकनामशतद्वयमध्ये तानि सर्वाणि व्यक्तीभवन्तीति रहस्यम् । शङ्करभगवत्पादेभ्योऽर्वाचीना तु स्वनाथपर्यंता गुरुपरंपरा स्वस्वदेशिकमुखादेवावगन्तव्या ॥ गुरूपसदनक्रममाह — महागणपतिमिति । गुरोः प्रसादफलमाह— संतुष्ट इति । उपदेशक्रममाह - सर्वविघ्नेतिं । अखिलानिष्टबाधकेषु उपायेषु अस्य मुख्यत्वकथनाय—एकेति । चतुर्वर्गसाधनत्व-कथनाय—सर्वकामेति । ईदृशगुरुपरंपरामूलभूतो गणेश एव शिष्यभक्तिमाहात्म्यात् स्वमुखेनैव स्वकीयं महामन्त्रं एनमुपादिक्षत् इत्याह — स्वकमब्रवीदिति । ततश्चान्यैरपि अयं मंत्रः प्रोक्तगुरुपरंपरागतेष्वन्यतमं गुरुं भक्त्या संतोष्य तन्मुखादेव लब्ध्वा जपनीयः, न पुस्तकमात्रेण गृहीत्वा जप्तव्य इति तात्पर्यार्थः । अथोपदेशविषयस्य लौकिकत्वात् व्यूढादिवत्स्वयमेव तत्स्वरूपं विध्यपेक्षितत्वात्प्रदर्शयति — गणेश्वर इत्यादिनाऽनन्तानन्तसौख्यद इत्यन्तेन ।

[1]गणेशो गाणपत्यानां गणदीक्षाप्रभुर्मतः ।
गणेश्वरो गणक्रीडो विकटो विघ्ननायकः ॥
दुर्मुखः सुमुखो बुद्धो विघ्नराजो गणाधिपः।

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



एते कुलाख्या गुरवः तत्तेजसि विभावयेत्।
सुरानन्दः प्रमोदश्च हेरम्बश्च महोत्कटः।
शङ्करो लम्बकर्णश्च मेघनादो महाबलः।
गणञ्जयो नवैते तद्विद्यानामवतारकाः।
विनायको विरूपाक्षो बुद्धः शूरो वरप्रदः।
एते पञ्चैव दिव्यौघाः, विजयो दुर्जयो जयः।
कवीश्वरश्च ब्रह्मण्यो निधीशः सिद्ध संज्ञकाः।
गजाधिराजो दुःखारिः सद्योजातः सुखावहः।
परात्मा सर्वभूतात्मा महानादः शुभाननः।
बाल (भाल) चन्द्रो नवैते च मानवौघाः प्रकीर्तिताः।
ततश्च बालचन्द्रान्तां पूजयेद्गुरु सन्ततिम्।
कपिलाद्व्यासपर्यन्तं एकविंशति संख्यकाः ॥
(कपिलोऽत्रिर्वसिष्ठश्च सनकश्च सनन्दनः।
भृगुः सनत्सुजातश्च वामदेवश्च नारदः।
गौतमः शुनकः शक्तिर्मार्कण्डेयश्च कौशिकः।
पराशरः शुकश्चैवाङ्गिराः कण्वस्तथैव च।
जाबालिश्च भरद्वाजो वेदव्यासस्तथैव च॥
गणकः सुभगो नित्यो नित्यालम्बश्च शाश्वतः।
पूर्णानन्दः परानन्दः सुभक्तः पद्मलोचनः।
कामपालो बुधश्रेष्ठो गजवक्त्रो गणप्रियः।
भूतेशो बाललीलश्च कुमारो बोधनो हरः।
सत्यलीलः सुलीलश्च विकटो धूम्रवर्णकः।
नन्दिप्रियो नन्दिहासो देवीपुत्रो धनेश्वरः।
विश्वंभरो विशालाक्षो विघ्नहर्ता विनायकः।
कूष्माण्डेशः कपर्दी च शिवः कालो महीधरः।
गौडादि शङ्करान्ताश्च सप्त प्रागीरिताश्च ये।
(गौडः पावक एव च। पाराशर्यः सत्यनिधी
रामचन्द्रस्ततः परम्। गोविन्दः शङ्कराचार्यः)
त्रिषष्टिसंमिता ह्येते गुरवः सिद्धिदायकाः।
पूजिताः संस्मृता नित्यं सर्वेप्सितफलप्रदाः।
श्रीमायास्मरबीजाद्याः सिद्धान्ताचार्यनमोन्तकाः।
(श्रीविद्यार्णवेतन्त्रे प्रथमाश्वासे श्लो. २५१-२६४.)

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



अस्य श्रीमहागणपतिसहस्रनामस्तोत्रमहामन्त्रस्य, गणेश ऋषिः, अनुष्टुप् छन्दः, श्रीमहागणपतिर्देवता। गं बीजं, तुं गं शक्तिः, स्वाहा कीलकं, श्रीमहागणपतिप्रसाद सिद्ध्यर्थे नामपारायणे विनियोगः । गां अंगुष्ठाभ्यां नमः, गीं तर्जनीभ्यां नमः, गूं मध्यमाभ्यां नमः, गैं अनामिकाभ्यां नमः, गौं कनिष्ठिकाभ्यां नमः, गः करतलकरपृष्ठाभ्यां नमः । गां हृदयाय नमः, गीं शिरसे स्वाहा, गूं शिखायै वषट्, गैं कवचाय हुं, गौं नेत्रत्रयाय वौषट्, गः अस्त्राय फट्। भूर्भुवस्सुवरोमिति दिग्बन्धः। ध्यानं—

पञ्चवक्त्रो दशभुजो ललाटेन्दुः शशिप्रभः ।
मुण्डमालः सर्पभूषो मुकुटांगदभूषणः ॥

अग्न्यर्कशशिनो भाभिः तिरस्कुर्वन् दशायुधः ।
सर्वविघ्नहरो देवः तं ध्यायामि दिवानिशम् ॥

लं पृथिव्यात्मने महागणपतये गन्धं समर्पयामि । आकाशात्मने महागणपतये पुष्पाणि समर्पयामि । यं वाय्वात्मने महागणपतये धूपमाघ्रापयामि । रं अग्न्यात्मने महागणपतये दीपं दर्शयामि। वं अमृतात्मने महागणपतये अमृतोपहारं निवेदयामि ॥

(गणेश्वरो गणक्रीडः इति अङ्गुष्ठाभ्यां नमः । कुमारगुरुरीशानः इति तर्जनीभ्यां नमः। ब्रह्माण्ड कुम्भश्चिद्व्योमभालः इति मध्यमाभ्यां नमः। रक्तो रक्ताम्बरधरः इति अनामिकाभ्यां नमः।

सर्वसद्गुरु संसेव्यः इति कनिष्ठिकाभ्यां नमः । लुप्तविघ्नः स्वभक्तानां इति करतलकरपृष्ठाभ्यां नमः । छन्दश्छन्दो वपुः इति हृदयाय नमः । निष्कलो निर्मलो नित्य इति शिरसे स्वाहा । सृष्टिस्थितिलयक्रीड इति शिखायै वषट्। ज्ञानं विज्ञानमानन्दः इति कवचाय हुम् । अष्टाङ्गयोग फलभूः इति नेत्रत्रयाय वौषट् अनन्तशक्ति सहितः इति अस्त्राय फट्। गजवदनमचिन्त्यं तीक्ष्ण दंष्ट्रं त्रिणेत्रं बृहदुदरमशेषं भूतिराजं पुराणम्। अमरवर सुपूज्यं रक्तवर्णं सुरेशं पशुपतिसुतमीशं विघ्नराजं नमामि। - इति केचित्)

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



6. பரம்பொருளே முழுமுதற் கடவுள். அவரே ஐந்து உருவமைப்புகளைக் கொள்கிறார். கணேசர், சிவபெருமான், சக்தி, விஷ்ணு, சூர்யன் என இதனை இறையியல்பு கண்டவர்கள் வகுப்பர். அவற்றை அருவ உருவமாக சோணம், பாணம், மாக்ஷிகக்கல், ஸாலக்ராமம், ஸ்படிகம் என்ற இயற்கைப் பொருள்களில் உருவகப்படுத்திப் பஞ்சாயதன வழிபாடாகக் கொள்வர். இந்த ஐந்து தேவர்களும் பரப்பிரும்மத்தின் கணம். இந்த ஐவருக்கும் ஈச்வரர் - மூலப்பொருள் பரப்பிரும்மமே. பஞ்சாயதனத்தேவர்களில் ஒருவரான கணேசருக்கும் மூலமான அந்தக்கணேசப் பரம்பொருளையும் இந்த கணேசரையும் அவரது பல லீலாவதாரங்களையும் லீலைகளையும் நினைவில் கொணர்வதற்கே இந்த ஸஹஸ்ரநாம பாராயணம் உதவுகிறது. கணேசருடன் மற்ற பஞ்சாயதன தேவர்களையும் அந்தப் பரம்பொருளாக வழிபடவும் பல நாமங்கள் உதவுவதையும் காண முடியும்.

7. உலகாக விரியவிருக்கிற பரம்பொருள் உலகமாக அமைகிற பாங்கிற்கும், அதன் நடைமுறைகளுக்கும் வழிகாட்டியான குரு என்ற கணமாகவும் ஆகித் தானே அதற்கு ஈசனாகிறார்.

குரு என்ற மாபெரும் தத்துவத்தை விளக்கவந்த ஸ்ரீ வித்யாரண்யர், ஸ்ரீ வித்யார்ணவத்தில் கணபதி வழிபாட்டில் குரு பரம்பரை பற்றி முதல் ஆச்வாஸத்தில் விளக்குகிறார். கணபதி ஸம்ப்ரதாயத்திற்கு ஆதிகுரு ஸ்ரீமஹாகணபதியே. குரு வடிவில் முதலில் தோன்றியது கணேச்வரராக. அவரது சிஷ்யர் - கணக்ரீடர் (நா-2) அவரது சிஷ்யர் விகடர் (நா-11) அவரது சிஷ்யர், விக்க்ந நாயகர் (நா. 12) இப்படி குருபரம்பரை விரியும். குரு - சிஷ்யர்களுக்கிடையே வேற்றுமை இல்லை. குருவே சீடராகி ஆத்மாவை புத்ரநாமாஸி என்பது போல் பரம்பரையைக் காக்கிறார். தனக்குப்பின் வருபவனை - சீடனை - பரம் பரனாக - மேலானவனாக்கி (பரம் பிபர்தி போஷயதி - பாலயதி) சீடனை வளர்த்துக் காப்பாற்றிப் போஷிக்கிற குரு - சிஷ்யக்கிரமம் அமைவது குரு பரம்பரை எனப்பெறும். இது மூன்று கணங்கள் அடங்கியது.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



(1) தெய்வத்தன்மை பெற்ற குருக்கூட்டம், திவ்யௌகம் (2) மந்திர சித்தி பெற்ற ஸித்தர்களின் கூட்டம் ஸித்தௌகம் (3) மனிதனாகத் தோன்றி வழிபாட்டு முறை அறிவித்து உணர்த்திச் சீடனை வளர்த்துப் போஷிக்கிற - மனிதக்கூட்டம் மானவௌகம். இம்மூன்று கணங்களும் அதன் ஈசனும் மஹாகணபதியே.

1. கணேச்வரர் (நா 1) கணக்ரீடர் (நா 2) விகடர் (நா 11) விக்க்ந நாயகர், (நா 12) துர்முகர், (நா 14) ஸுமுகர் (நா 13) புத்தர் (நா 15) விக்க்நராஜர் (நா 16) கணாதிபர் (நா 11) என்ற ஒன்பது குல குரு க்கள்.

2. ஸுராநந்தர் (நா 21) ப்ரமோதர் (நா 19) ஹேரம்பர் (நா 23) மதோத்கடர் (நா 22) சங்கரர், லம்பகர்ணர், (நா 26) மேகநாதர், (நா 31) மஹாபலர் (நா 27) கணஞ்ஜயர் (நா 32) என்ற ஒன்பது வித்யா குருக்கள்.

3. விநாயகர் (நா 33) விரூபாக்ஷர், (நா 34) புத்தர் (நா 15) சூரர், (நா 35) வரப்ரதர் (நா 36) என்ற ஐந்து திவ்யௌக குருக்கள்,

4. விஜயர் (நா-44), துர்ஜயர் (நா.61) ஜயர், (நா-63) கவீச்வரர் (நா-74) பிரும்மண்யர் (நா 75) நிதீசர் (நா 78) என்று ஆறு ஸித்தௌக குருக்கள்.

5. கணாதிராஜர் (நா 113) துஃக்காரி, ஸத்யோஜாதர் (நா-94) ஸுகாவஹர், பராத்மா, ஸர்வ பூதாத்மா, மஹாநாதர் (நா137) சுபானனர், (நா 139), பாலசந்திரர் (நா 107) என்ற ஒன்பது மானவௌக குருக்கள் .

6. கபிலர், அத்ரி, வஸிஷ்டர், ஸனகர், ஸநந்தனர், ப்ருகு, ஸனத்ஸுஜாதர், வாமதேவர், நாரதர், கௌதமர், சுனகர், சக்தி, மார்கண்டேயர், கௌசிகர், பராசரர், சுகர், அங்கிரஸ், கண்வர், ஜாபாலி, பரத்வாஜர், வேதவ்யாஸர், கணகர், ஸுபகர், நித்யர், நித்யாலம்பர், சாச்வதர், பூர்ணாநந்தர், பராநந்தர், ஸுபக்தர், பத்மலோசனர், காமபாலர், புதச்ரேஷ்ட்டர், கஜவக்தரர், கணப்ரியர், பூதேசர், பாலலீலர், குமாரர், போதனர், ஹரர், ஸத்யலீலர், ஸுலீலர், விகடர், தூம்ரவர்ணகர், நந்திப்ரியர், நந்திஹாஸர், தேவீபுத்ரர், தனேச்வரர், விசுவம்ப்பரர்,

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



விசாலாக்ஷர், விக்க்நஹர்தா, விநாயகர், கூச்மாண்டேசர், கபர்தீ, சிவர், காலர், மஹீதரர், கௌடர், பாவகர், பாராசர்யர், ஸத்யநிதி, ராமசந்திரர், கோவிந்தர், சங்கராசார்யர் என்ற அறுபத்து மூன்று குருக்கள்.

ஆக இந்த கணேசகுருபரம்பரை 101 குருக்கள் அடங்கியது. ஸ்ரீ சங்கராசாரியரிலிருந்து நமது குருவரை உள்ள குரு பரம்பரையினரையும் குரு முகமாகத் தெரிந்து கொள்ள வேண்டும்

இவர்களும் கணேச்வரரே என்ற பாவனையுடன் ஒவ்வொருவரையும் ஸ்ரீ-சக்தி-காமபீஜங்களை முதலிலும் நம: ஓம் என முடிவிலும் கூறி வழிபாட்டிற்கு முன் வணங்கவேண்டும். ஸமஸ்த குருமண்டலரூபிணே பகவதே கணேஶ்வராய நம: என்றுவது சுருக்கமாக வணங்கவேண்டும் என்பது மரபு. பல குருநாமங்கள் முதலிருநூறு நாமங்களுக்குள்ளேயே இடம் பெறுவதைக் காணலாம்.

ஸ்ரீ கணபதி இவ்வாறு பலகணங்களுக்கும் தலைவரானவர்.

2. கணக்ரீட: - கணங்களுடன் விளையாடுபவர். விருப்பும் வெறுப்பு மற்ற பெருமான் உலகெனும் ஏற்றத்தாழ்வு மிக்க தொன்றைப் படைத்து அவரவர் தம் தமது வினைப்பயனுக்கேற்ற இன்பதுன்பங்களை அநுபவிக்கச் செய்து உலகுடன் தமது தொடர்பை விளையாட்டாகக் கொண்டுள்ளார். கணேசவழிபாட்டு முறையில் கணேசர் என்ற ஆதிகுருவின் சிஷ்யரான கணக்ரீடரும் கணேசரே. விளையாட்டாயினும் அதிலும் ஒரு கட்டுப்பாடு உண்டு. கட்டுப்பாடற்ற விளையாட்டே வினையாகிவிடும். மனிதனாகப் பிறந்தவரின் வினை தீர்க்கவே இந்த விளையாட்டு. பதஞ்சலியிடம் கௌடபாதர் வியாகரணம் கற்றுர். நல்ல சிஷ்யனிடம் அந்தக் கல்வியை வழங்காவிடில் குருவிடம் வித்யையைப் பெற்ற கடன் தீராது. கௌடருக்கு நல்ல சிஷ்யர் அரிதானபோது பதஞ்சலியே சந்திரசர்மாவாகிச் சீடரானார் என்று வரலாறு. சிஷ்யர் என்ற வேடத்தில் குருவான கணேசரிடம் வித்யை ஏற்ற கணக்ரீடரும் கணேசரே! குருவின் கோலம் போல் சிஷ்யக்

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



கோலமும் அவராக விரும்பி ஏற்ற லீலே வடிவமே. குருவும் அவரே ! சீடரும் அவரே !.

முன் நாமத்தில் குறிப்பிட்டுள்ள பலகணங்களுடன் விளேயாடுபவர். மாயையும் பிரகிருதியும் கூடிப்படைத்த பொருட்கள் தனித்து இயங்காத நிலேயில் அவற்றின் உட்புகுந்து பரவி ஸாக்ஷியாக அந்தர்யாமியாக, ஜீவனாக' நான் ஆகப் பெயர் - உருவம் பெறச்செய்து, விளேயாடுபவர்.

ஜராயுஜம் (கருப்பையில் தோன்றியவை) அண்டஜம் (முட்டையாக வெளி வந்தவை). உத்பித்ஜம் (தரையைப் பிளந்து வெளிவருபவை - மரம் முதலியவை). ஸ்வேதஜம் (புழுக்கத்தில் தோன்றியவை) என்றவாறு பிரிந்த பல்வேறு இனங்களிலும் ஆத்மாவாகி அத்துடன் விளேயாடுபவர்.

3 கணநாத: - கணங்களால் நாடப்பெறுபவர். முதல் நாமத்தில் குறிப்பிட்டுள்ள கணங்கள் அனேத்தும் அவை வாழத் தம்மையே நாடச் செய்தவர். தமது குண கணங்களே எண்ணுபவர் முன், நொடியில் மங்களமாக நிற்பவர். கணம் கணமாக நிற்கிற பிரகிருதி தன் இருக்கைக்கும் இயக்கத்திற்கும் இவரேயே நாடுவதால் கண - நாதர். நிர்குணமான தன்னிடமிருந்து முற்றிலும் ,மாறுபட்ட ஸகுண்மான பிரகிருதியை உலகமாக மாற்ற சித்சக்தியையும் ஜடத்தையும் க்ஷோபணசக்தியால் குழப்பி இணேத்துத் தான் அக்கலவைக்கு நாதனாக ஆனவர்.

4. கணாதிப: - கணங்களின் மேலாளர். ஆதித்யர் 12, வசுக்கள் 8, ருத்திரர் 11, அசுவினி தேவர்கள் 2 என முப்பத்து மூன்று கணங்கள். ஆதித்யர் 12, விச்வேதேவர் 13, வஸுக்கள் 8, துஷிதர் 26, ஆபாஸ்வரர் 64, மருத்துக்கள் 49, மஹாராஜிகர்கள் 30, ஸாத்தியர் 12, ருத்திரர் 11, என 9 கணங்களாகப் பிரிந்த தேவகணங்கள் உண்டு. இவற்றிற்கு மேலாளர்.

அண்டத்திலுள்ள தேவகணங்களேக்கட்டுப்படுத்துவது போல், பிண்டமான சரீரத்திலும் உள்ள தேவகணங்களேயும் அவர் கண்காணிப்பார். மனம், புத்தி, பொறிகள், முதலியவை தனித்தனியாக இயங்க, மனத்தில் சந்த்ரன், புத்தியில் பிரும்மா,

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அஹங்காரத்தில் ருத்திரன், வாக்கில் அக்கினி, கைகளில் இந்திரன், கால்களில் விஷ்ணு, குதத்தில் மிருத்யு, குறியில் வருணன், காதுகளில் திக்தேவதை, தோலில் ஓஷதிகள், கண்களில் அக்னி, நாக்கில் அசுவினீ தேவர், மூக்கில் வாயு என இயக்குகிற தேவ கணங்களுக்கும் இவரே அதிபர்.

உலகம், ஜீவர்கள், ஈச்வரன் என சித் அசித் பொருள்களை மூன்று கணமாகப் பிரிப்பர். இதன் அதிபரும் அவரே. ஸம்ப்ரஜ்ஞாதம், அஸம்ப்ரஜ்ஞாதம் என்ற இருயோக ஸமாதிகளிலும் வெளிநாட்டம் இன்றி ஒருங்கிணைகிற உள்ளம் முதலியவை கணமாகும். இந்த கணத்திற்கும் சிறிதும் இணைப்பிற்கு அடங்காத சித்தப்போக்குள்ள ஜராயுஜம் முதலியவற்றின் கணத்திற்கும் (நா-3) இவரே அதிபர். குருபரம்பரையில் இவரும் உண்டு (நா-1)

5. ஏகதம்ஷ்ட்ர: - ஒரே தந்தமுள்ளவர். படைக்கப்பெற்ற பூமி நீரில்மேல் நிற்க இயலாமல் மூழ்கிக் கொண்டிருக்கையில் இவரது தந்தங்களாகிய முக்கிய ஆதாரத்திலேயே அது நிலைத்தது. ஆதிவராஹராகிப் பூமிக்குத் தந்தங்களை முக்கிய ஆதாரமாக்கித் தாங்கியவர். மஹாபாரதம் எழுதத் தன் இடது தந்தத்தை ஒடித்து எழுதுகோலாக்கியதால் ஒரே தந்தமுள்ளவர்.

பரசுராமருக்கும் கணேசருக்கும் நடந்த போரில் சிவபெருமான் அருளிய கோடாரியைப் பரசுராமர் ஏவிக் கணேசரின் இடது தந்தத்தை வேருடன் பிடுங்கி எறிந்தார். கணேசர் தன் தந்தையின் பரசு என்று மதித்து அந்த இழப்பை ஏற்றார். ஏகதந்தர் என்று அதர்வவேதம் குறிப்பிட்டபடி ஒற்றைக் கொம்பனாயிருப்பது ஏற்புக்குடையதே என எல்லோரும் வேண்ட, பரசுராமரிடம் ஏற்பட்ட கோபத்தைத் தணித்துக் கொண்டவர், அப்படி ஏகதந்தரானவர்.

யானைக்குத் தந்தமே முக்கியவலிவிடம். இரண்டாக அதனைப் பிரிக்க இடம் கொடாமல் ஒரே தந்தமாகக் கொண்டவர். ஆண் யானைக்குத் தந்தங்கள் உண்டு. பெண் யானைக்குத் தெற்றிப்பல் உள்ளடங்கி நிற்கும். உமையொருபாகனான தந்தைபோல் இவரும் இடப்புறத்தில்

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



பெண்யானையின் முக அமைப்பும் வலப்புறத்தில் ஆண் யானையின் முக அமைப்பும் கொண்டவர். விநாயக சக்தியை இடப்புறம் கொண்டவர் (ஏகதந்த: என்ற பாடமுண்டு. பொருள் இதே.)

6. வக்ரதுண்ட: - வளைந்த துதிக்கையையுள்ளவர். துதிக்கையும் அவருக்குக் கையே. அதனால் ஐங்கரன். (நா-863) விக்கினங்கள் தடையுண்டாக்கி நேர்ப்பாதையில் செல்லவிடாமல் தடுக்கின்றன அதனுல் அவை வக்கிரங்கள். அவற்றைத் துண்டிப்பவர். வக்கிரமாகச் செயல்படுபவரைத் துண்டிப்பவர். துராஸதன் என்ற அசுரன் காசியைக் கைப்பற்ற வந்தபோது பார்வதியின் முகத்திலிருந்து தோன்றிய கணேசர் துராஸதனுடன் போரிட்டு அவனை மாய்த்ததும் பார்வதி அவருக்கு இட்ட பெயர் வக்ரதுண்டர். வெற்றியுடன் திரும்பிய மகனின் வளைந்த துதிக்கையும் பார்வதிக்கு அழகாகத் தோன்றியது. அழகனின் கோணலும் அழகே. அன்புக்குரியவனின் கோணலும் அழகே . ஸ்ரீகணேசரின் அவதாரங்கள் எட்டு, வக்ரதுண்டர், ஏகதந்தர், மஹோதரர், கஜானனர், லம்போதரர், விகடர், விக்நராஜர், தூம்ரவர்ணர் என. இவர்கள் ஆவரண தேவதைகளாகவும் உள்ளனர்.

7. கஜவக்த்ர:- யானை போன்ற முகமுடையவர். யானை முகத்தைத் தன் முகமாக்கிக் கொண்டவர். பார்வதி தன் நாதரின் கணங்களின் பாதுகாப்பில் திருப்தியுருமல் தனக்கென ஒருவாயிற்காப்பாளரை நியமிக்க விரும்பினாள். நீராடுவதற்கு முன் எண்ணெய்க் காப்பை அகற்ற மஞ்சளாலான நறுமணத்தூளைத் தேய்க்கும்போது உருண்டையாக அது கையில் தங்கியது. அதில் பார்வதி தன் சக்தியைச் செலுத்த அழகிய வலிவுள்ள சிறுவன் தோன்றினான். (நா-133) அவனிடம் தன் சக்தியாயுதத்தைத் தண்டமாக்கித் தந்தாள். சிறுவன் வாயிற் காப்பானானான். சிவபெருமான் தேவியின் அந்தரங்க அறையில் நுழைவதைத் தடுத்தான். சிவகணங்கள் அவனிடம் போரிட்டுத் தோற்றன. சிவபெருமான் சினந்து அவன் தலையை வெட்டிச் சாய்த்தார். தேவி வெகுண்டெழுந்தாள். வடக்கில் இறந்த யானையின் தலையை வெட்டிச் சிறுவனின் உடலில் பொறுத்தி உயிரூட்ட யானை முகத்தவனாக பாலன் எழுந்தான்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



மற்ருெரு நிகழ்ச்சி. தேவி கங்கையில் நீராடும்போது எண்ணெய்யும் நறுமணத்தூளும் உருண்டு வந்தபோது அதனைப் பொம்மை போன்று உருவாக்கினாள். முகம் யானை போன்று நீண்டு பருத்திருந்தது. அதனைக் கங்கையில் விடக் கங்கை அதனை ஏற்று உயிரூட்டித் தனக்கு மகன் கிடைத்தான் என மகிழ்ந்தாள். பார்வதி அழகிய யானை முகமுடைய பாலனைக் கண்டு கங்கையிடம் அவனைத் தரவேண்ட, தன்னையும் இவனது தாயாக உலகம் மதித்தால் தருவேன் என்ருள். எல்லோரும் அதற்கு உடன்படப் பார்வதி அவனைத் தனது மகனாகவும் ஏற்ருள். அதனால் அவர் கங்கை பார்வதி என்று இரு தாய்களையுடையவராக ஆனார். (நா 133-135-835) (பத்மபுராணம்)

மற்ருெரு வரலாறு. தேவர்களைப் போன்று அசுரர்களும் பூஜையும் தவமும் செய்து தெய்வ அருளால் பெருவலிவு பெற்று உலகிற்குத் தீங்கிழைக்கையில், அசுரர்களின் தவம் முதலியவற்றிற்கு இடையூறு நேரிட்டுப் பங்கம் விளைவித்தாலன்றி உலகம் அசுரர்கள் கொடுமையிலிருந்து மீளாது எனத்தேவர் வேண்ட, சிவபெருமானின் ஸங்கல்பமே உருவாக, யானை முகத்தோன் தோன்றினார். நல்லவர்களது நற்பணிக்கு விக்கினம் ஏற்படாமல் காப்பவராகவும், கொடியவரின் பணிகளில் இடையூறு விளைவித்துக் கொடுமை இழைக்க முடியாமல் தடுப்பவராகவும் ஆனார்.

மற்ருெரு வரலாறு - பார்வதி கருத்தரித்து அழகிய மகனைப் பெற்ருள். பெற்றவளையும் சிசுவையும் பாராட்டத் தேவர் அனைவரும் வந்திருந்தனர். சனைச்சரனும் வந்தார். ஆனால் குழந்தை மேல் பார்வை படாதிருக்கத் தலை குனிந்து வந்தார். "உன் பார்வை மாந்தரிடம் பலிக்கலாம். என் மகனிடம் பலிக்காது" எனப் பார்வதி அவரைச் சீண்டக் கணநேரம் தலைநிமிர்ந்து குழந்தையைச் சனி பார்த்தார். சிவகுமாரனைப் பார்க்கக்கூட பாக்யமில்லாதவனானேனே என்ற சனியின் மனக்குறையும் நீங்கியது. ஆனால் சிசுவின் தலை அறுந்து விழுந்தது. அங்கு வந்திருந்த விஷ்ணு அருகிலிருந்த ஆண் யானையின் தலையை அறுத்துச் சிசுவின் உடலில் ஒட்ட வைத்து உயிரூட்ட கஜமுகன் தோன்றினார்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



மற்ெரு வரலாறு சிவபெருமானும் பார்வதியும் மனக்களிப்பு மிக்க வேளையில், சுவற்றில் காமவசப்பட்ட ஆண் யானையும் பெண் யானையும் ஒன்றையொன்று காமக்கண்களுடன் பார்ப்பதாக எழுதியிருந்த சிற்பத்தைப் பார்க்கும்போது, இருவரது உணர்வுகளும் இணைந்து ஒளிவடிவில் வெளியாகி அழகிய யானைத் தலையுடன் ஓர் அத்புத பாலகன் எதிரில் தோன்றினான். இப்படிப் பல வரலாறுகள் யானை முகத்துடன் கணபதி தோன்றிய சரித்திரத்தைக் கூறும்

யானைமுகம் நிர்க்குணப் ப்ரம்மத்தையும் மனித உடல் ஸகுணப்பிருமத்தையும் காட்டுவதாக ஞானிகள் கூறுவர். கஜ என்ற சொல்லில் ''க'' தன்னிடம் லயிக்கின்ற உலகையும், 'ஜ' தன்னிடமிருந்து வெளியான உலகையும் குறிப்பதால், உலகைத் தோன்றி மறையச்செய்வதைத்தன் தடஸ்தலட்சண மாகக் கொண்டநிர்க் குணப்ரம்மத்தைக் குறிப்பதாகப்புராணம் விளக்கும். மூளை தான் உணர்வுகளின் கேந்திரம். அதன் ஆணைக்குட்பட்டு இயங்கத்தான் கீழுள்ள உடற்பகுதி. யானையின் உணர்விற்கேற்ப மனித உடல் இயங்காது. மனித உடலிற்கேற்ப யானையின் உணர்வுகள் அமையாது. இந்த சேராச்சேர்க்கை மாயையின் சிறப்பு. கூடாததைக் கூட்டி வைப்பதே மாயை - கஜா - மாயை. அதனைத் தன் முகத்தில் கொண்ட மஹாமாயாவி இவர்

8. மஹோதர: - பெரு வயிறுள்ளவர். தாரகனை அழிக்கத் தேவர்கள் தவத்திலிருந்த சிவனை மயக்கப் பார்வதியைத் தூண்டினர். வேட்டுவப் பெண்ணாகிச் சிவனின் ஆசிரமத்தில் புகுந்து தேவி தவத்தைக் கலைத்தாள். சிவபெருமான் தன்னைக் கண்டதும் காமவசப்படுவதை உணர்ந்த தேவி மறைந்தாள். காமவசப்பட்ட சிவனின் உணர்வுகளிலிருந்து மோஹாஸுரன். தோன்றினான். காமம் நிறைவேருததால் சினந்து மோகத்திற்குக் காரணமான காமனைச் சிவன் சுட்டெரித்தார். மோஹாஸுரன் சுக்ரரிடம் உபதேசம் பெற்றுச் சூர்யனிடம் எங்கும் எதிலும் வெற்றி என்ற வரம் பெற்றான். மஹோதரராகத் தோன்றி கணேசர் மோஹாஸுரனை அடக்கித் தமது பக்தனாக்கிக் கொண்டார். சிவனால் எரிக்கப்பெற்ற காமனையும் உயிர்த்தெழச்

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



செய்து காமுகரின் மனத்தையும் நினைவையும் அவன் உடலாக்கி உலகை வெல்ல அருள் புரிந்தார் என மஹோதரரின் அவதாரக்கதை. இவர் ஆவரண தேவதையும் ஆவார். பல கோடிப் பிரும்மாண்டங்களையும் தன் வயிற்றில் தாங்கி வாழ வைப்பதால் பருத்த தொந்தி உள்ளவர்.

லம்போதரோ தூம்ரவர்ணோ விகடோ விக்க்நநாயக: ।
ஸுமுகோ துர்முகோ புத்த்தோ விக்க்நராஜோ கஜாநந: 7.

9. லம்போதர:- சரிந்து தொங்குகிற வயிறுள்ளவர். பலகோடி அண்டங்களுக்கு இடமளித்துப் பெருவயிறரான (நா-8) பின்னரும் மனநிறைவு பெறுமல் மேலும் தோன்றவிருக்கிற கோடிக்கணக்கான அண்டங்களுக்கும் இடம் தருகிற அளவில் வெற்றிடம் கொண்டிருப்பதால் வயிறு சரிந்து தொங்குவதால். தொந்திக்கணபதி எனச் செல்லமாக அழைக்கப்பெறுபவர். இவரும் அவதாரமாகவே வந்தவரே. சிவபெருமான் விஷ்ணுவின் மோகினி நிலையைக் கண்டு மோகித்தார். விஷ்ணு அந்நிலையை மாற்றத் தன் சுய உருவம் கொண்டார். வெகுண்ட சிவனின் கோபத்தில் உதித்தவன் குரோதாசுரன். சுக்ரன் காட்டிய வழியில் ஸுர்யனைக் குறித்துத் தவமிருந்து அவரருளால் வலிவு பெற்று மூவுலகத்தையும் வாட்டினான். அவனை அடக்க ஸ்ரீகணேசர் எடுத்த அவதாரம் லம்போதரர். பெருமெலி (பெருச்சாளி) வாகனம், யானைமுகம், முக்கண்கள், இரு பக்கங்களிலும் ஸித்தியும் புத்தியும் - குரோதாஸுரனுக்குப் பகவான் உண்மை நிலையைக் காட்டியதும் அவன் இவரைச் சரணடைந்து தன் குரோத நிலையை இழக்கிறுன். இவரே ஆதிசேஷனுக்கு மகனாகத் தோன்றி மாயாஸுரனை அழித்தார்.

10. தூம்ரவர்ண:- புகை வண்ணம் கொண்டவர். வாயுவின் பீஜாக்ஷரமான 'யம்' என்ற எழுத்து மந்திர சாஸ்த்ர உருவகத்தில் புகை போன்ற நிறம் கொண்டது. இவரும் வாயுவாக இருப்பதால் புகைநிறம் கொண்டுள்ளார். எந்நிறமும் அவரெதிரே மங்கிப்புகை நிறம் பெறும். அஹம்பாவாஸுரனை அடக்க எடுத்த தோற்றமிது.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



*11.* விகட: - மறைப்பில்லாதவர். எங்கும் நீக்கமற நிரம்பியவர். அவரை மறைக்க எதனாலும் இயலாது (கட - மறைப்பு) கணேச வழிபாட்டில் குரு பரம்பரையில் மூன்ருமவர். (நா 1) ஆவரணதேவதைகளில் ஒருவருமாவார். விஷ்ணுவிற்கு ஜலந்தரனின் மனைவி பிருந்தாதேவியைக் கண்டதும் காம மேற்பட அந்தக்காமத்தில் உண்டானவன் காமாஸுரன். தவத்தால் சிவனருள் பெற்று அண்டங்கள் அனைத்தையும் வென்ருன். அவனது கொடுமையிலிருந்தும் தப்ப தேவர்கள் மயூரேசத்தில் தவமிருக்க அங்கு தோன்றியவர் விகடர். மயிலை வாகனமாகக் கொண்டவர். காமாஸுரன் இவரது பெருமையறிந்து சரணடைந்து பக்தனானான்.

12. விக்க்நநாயக: - இடையூறுகளை அப்பாற்படுத்துபவர். தன்னை வழிபடுபவர்களிடமிருந்து இடையூறுகளை அப்புறப்படுத்துவார். தன்னை வழிபடாதவர்களை நோக்கி இடையூறுகளை இட்டுச் செல்வார். விக்கினங்களைத் தம் விருப்பப்படி ஆள்வார். இடையூறுகளுக்குத் தலைவர். தடையிலிருந்து பக்தனை விலகிச் செல்லச் செய்பவர்.

13. ஸுமுக: - நன்முகமுள்ளவர். இவரை உள்ளத்தில் கண்டு தொடங்கிய பணி நன்கு நிறைவேறும். பணியின் தொடக்கத்தை மங்களமானதாக்கி அதன் விளைவையும் மங்களமாக அமைப்பவர் . வழிபாட்டில் காந்திதேவியுடன் ஸுமுகராக ஆறு கோணச்சக்கிரத்தில் அமர்ந்திருப்பவர்.

14. துர்முக: - காண இயலாத தோற்றமுள்ளவர். அக்கினி போன்று நெருங்க இயலாததும் ஸூர்யனைப் போன்று உற்று நோக்க இயலாததுமான பேரொளி மிக்க முகமண்டலமுள்ளவர். வழிபாட்டில் ஆர்வமில்லாதவருக்கும் பகை கொண்டவருக்கும் மின்னல் போன்றும் அனல் போன்றும் தோன்றுபவர். ஆவரண தேவதைகளில் ஒருவராக மதநாவதீ தேவியுடன் துர்முகர் என்ற பெயருடன் அறுகோணத்தில் அமர்ந்துள்ளவர்.

15. புத்த: - முற்றுமறிந்தவர். புத்தராகத் தோன்றியவர். குரு பரம்பரையில் ஒருவர். பிறரது அறியாமையைப்

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



போக்குபவர். அறிவில் அமர்ந்து அறிவின் போக்கைக் கட்டுபடுத்துபவர்.

16. விக்க்நராஜ:- இடையூறு விளைவிப்பதால் சிறப்பு பெற்றவர். விக்கிநர்கள் என்று தடைவிளைவிக்கிற கணங்களின். எல்லாத் தடைகளையும் தமது வழிபாட்டுச் சிறப்பால் அகற்றித் தன்னிடம் குன்றாத பக்தியுள்ளவர்களுக்குத் தலைமை தாங்குபவர். (நா 12) அவர்களது மனத்தை ஈர்ப்பவர். காலமும் தேசமும் பொதுவாக இடையூறு விளைவிப்பவை. அவற்றைக் கட்டுப்படுத்துபவர். மமதாஸுரனை அடக்குவதற்காக எடுத்த தோற்றமிது .

17. கஜானன: - யானைகள் வாழ்விப்பவர். யானை முகம் கொண்டமையால் யானைகளிடம் பற்றுள்ளவர்.

பீம: ப்ரமோத ஆமோத: ஸுராநந்தோ மதோத்கட: ।
ஹேரம்ப: ஶம்பரஶ் ஶம்ப்புர் லம்பகர்ணோ மஹாபல: ॥ 8

18. பீம:- அச்சம் தருகிற தோற்றமுள்ளவர். தீயவருக்கு அச்சம் தருவார்.

19. ப்ரமோத:- மகிழ்ச்சி பெறச் செய்பவர் - விரும்பியதைப் பெற்று அனுபவித்ததால் ஏற்படுவது பிரமோதம் என்ற சுகம். அதனைத் தருபவர். அந்த சுகவடிவினர். ஸம்ருத்தி என்ற தேவியுடன் அறுகோணத்தில் வழிபடப்பெறுபவர். குரு பரம்பரையைச் சார்ந்தவர்.

20. ஆமோத:- எதிர்பார்க்கிற சுகமாயிருப்பவர். விரும்பியது கிட்டும் என்ற நம்பிக்கையே சுகம் தரும். அனுபவம் வரை நேராவிட்டாலும் விரும்பியதைப் பெற்றால் சுகம் தான். அந்த சுகமாக சுகம் தருபவராக உள்ளவர். ருத்தி என்ற தேவியுடன் அறுகோண ஆவரணத்தில் உள்ளவர்.

21. ஸுராநந்த: - தேவானந்த வடிவிலுள்ளவர். தேவர்கள் பெறுகிற ஆனந்தம் மனித ஆனந்தத்தை விட உயர்ந்தது. அந்த ஆனந்தமும், தேவர்களின் அருளால் மனம் பொறி உடல் இவற்றில் உள்ள தேவசக்தி (ஆதிதைவிக சக்தி) இணக்கத்துடன் பெறுகிற ஆனந்தமும் அவரே. போதைப் பொருளால் மோஹம் கலந்து பெறுகிற ஆனந்தமும் அவரே. கசியபருக்கு மகனாகத்

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



தோன்றிய இவருக்கு உபனயம் நடந்தபோது நன்றியுணர்வுடன், இந்திரன் ரத்னமாலையளித்து, ஸுராநந்தர் எனப்பெயரிட்டான்.

22. மதோத்கட:- மதக்களிப்பு மிகுதியால் தன் நிலை இழந்தவர். யானைக்கு வெறிக்களிப்பு கன்னங்களில் மதநீர் பெருக்கெடுத்தோடச் செய்யும். தன் வசமிழந்து அது கட்டுக் கடங்காமல் ஓடும். பகவானின் கன்னத்தில் மதநீர் பெருக, அதன் நறுமணத்தால் தேனீக்கள் ஈர்க்கப்பட்டு மொய்க்கும் என்பது பக்தர்கள் கண்ட கணேசரின் காட்சி. ஆத்மானந்தமும் அத்தகைய போதை தரும். ஆனந்த களிப்பு மிகுதியால் தன் நிலை மறந்து கட்டுக்கும் மறைப்பிற்கும் அடங்காதவர். மஹோத்கடர் என்ற பாடமுண்டு. மஹோத்கடர் என்ற அவதாரத்தில் தேவாந்தகன், நராந்தகன், ஜ்ரும்ப்பன் முதலிய அரக்கர்களை மாய்த்தவர், அடக்க இயலாதவர்.

23. ஹேரம்ப: - சிவனைப் பற்றி விளக்குபவர் - சிவனைப் பற்றி வழிபாட்டு முறைகளைத் தந்தவர். ஹே என்ற பரமாத்மாவாக வேற்றுமையற்ற அத்வைத நிலையை உணர்த்துபவர். உரக்கப்பிளிறுபவர். ஹேரம்பகணபதி என்ற தோற்றத்தில் சிங்கம் வாஹனமாக, முத்து, தங்கம், நீலம், முல்லைப்பூ, குங்குமப்பூ, இவற்றின் நிறமுடைய ஐந்து முகங்கள், ஒவ்வொன்றிலும் மூன்று கண்கள், நெற்றியில் பிறை, சூர்யனுக்கொப்பான ஒளி, வரத, அபய முத்திரையுள்ள இருகைகள், கொழுக்கட்டை, தந்தம், உளி, தலை, ஜபமாலை, சம்மட்டி (பாம்பு) அங்குசம், சூலம் ஏந்திய எட்டு கைகள், தடையறியாத வீர்யமுள்ளவர்.

24. ஶம்பர:- பேரின்பவடிவினர். பேரின்பம் நிறைந்தவர். மங்களம் தருபவர். வஜ்ராயுதம் ஏந்தியவர். இந்த்ரனுக்கு வஜ்ராயுதம் அளித்தவர். பஞ்சபூதங்களில் ஒன்றான நீர் தத்துவமானவர்.

25. ஶம்ப்பு: - மங்களம் தோன்றுமிடம். சிவனானவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



26. லம்பகர்ண: - நீண்ட காதுகளுள்ளவர் - அவரது காதுகள் விறைப்பின்றி தொங்குபவை. எப்போதும் நிலையற்று ஆடிக்கொண்டிருப்பவை. எந்த திக்கிலிருந்து எத்தனைத் தொலைவிலிருந்து கூப்பிட்டாலும், அருகில் இருப்பவர் போல் உடன் உணர்ந்து நலமளிப்பவர்

27. மஹாபல:- பெருவலிவுள்ளவர். பலன் என்ற அசுரனுக்கு வலிவூட்டியவர். பெருவலிவு பெற்றவரையும் அடக்குகிற பெருவலிவுள்ளவர்.

நந்தநோ(அ)லம்படோ(அ)பீருர் மேகநாதோ கணஞ்ஜய:।
விநாயகோ விரூபாக்ஷோ வீரஶ்ரோ வரப்ரத: ॥ 9.

28. நந்தந: - நிறைவு பெற்றவர். மன நிறைவால் அமைதியும் ஆனந்தமும் ததும்பக் காணப்படுபவர்.

29. அலம்பட:- மோஹமற்றவர். மனநிறைவு பெற்றமையால் ஆசையால் மனம் அலையாதவர். ஆடையை அழகாக அணிந்தவர்.

30. அபீரு:- பயமற்றவர் - எங்கும் எப்போதும் எதிலிருந்தும் பயமற்றவர். பெண்கள் தொடர்பில்லாத பிரும்மசாரி.

31. மேகநாத: - மேகம் போன்று தொனிஉள்ளவர். யானை முகத்திலிருந்து வரும் பிளிறல் மேகத்திலிருந்து மென்மையுடனும் அழுத்தத்துடனும் வருகிற ஒலிபோல் முழங்கும். மேகங்களை ஒலிக்கச் செய்பவர்.

32. கணஞ்ஜய:- கூட்டத்தை வெல்பவர்: கணம், கணமாகக்கூடி எதிர்த்தாலும் வெல்பவர். கட்டுப்பாடற்று கூட்டம் ஒன்றையே வலிவாகக் கொண்டு எதிர்ப்பவர்களை அடக்குபவர். மனித உள்ளத்திலமர்ந்து வெறிபிடித்து எதிர்க்கும் மனம் பொறி முதலியவற்றை வெல்பவர். கணன் என்ற அசுரனை வென்றவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



33. விநாயக:- பறவை போன்ற ஜீவர்களை வழி நடத்துபவர். ஜீவனாகிய பறவைக்குச் சிற்றின்பமும் பேரின்பமும் இரு இறக்கைகள். இரு இன்பங்களையும் அளித்துப் பெற்றோர் போல் குருபோல் நல்வழிப்படுத்துபவர். தனக்கு மேற்பட்டுத் தன் மீது ஆளுமை செய்கிற நாயகனற்றவர். அவருக்கு ஈடும் மிக்காரும் இல்லை. விநாயகர் என்ற பெயர் இந்திரனால் அளிக்கப்பட்டது.

34. விரூபாக்ஷ: - ஒவ்வாத கண்கள் உள்ளவர். அக்கினி ஸுர்யன் சந்திரன் என்ற மூன்று ஒளிகளும் இவருக்கு மூன்று கண்கள். இம்மூன்று ஒளிகளும் ஒன்றுக்கொன்று செயலாலும் வடிவாலும் வேறுபடுபவை. ஒன்று பகலில் ஒளிரும். மற்றொன்று இரவில். மாறுபட்ட பார்வை (சக்தி)யிருந்தும் நேராகப் பார்ப்பவர். கசிய:பர்மகனாக அவதரித்தபோது சிவபெருமான் தனது விரூபாக்ஷன் என்ற பெயரை உபயனத்தின் போது இவருக்கிட்டார்.

35. தீரஸுர:- நெருக்கடியால் கலங்காதவர்: - உறுதியும் வீரமும் மிக்கவர். கலங்காத மனத்தினர். செயலைத் திருந்தச் செய்பவர். தீரரும் சூரருமானவர்.

36. வரப்ரத:- உயர்ந்ததைத் தருபவர். கோரியதும் உயர்ந்ததும் இவரருளால் பெறத்தக்கவை.

மஹாகணபதிர் புத்த்திப்ரிய: க்ஷிப்ரப்ரஸாதந:
ருத்ரப்ரியோ கணாத்த்யக்ஷ: உமாபுத்ரோ(அ) கநாசந: ॥ 10.

37. மஹாகணபதி:- பெரும் கூட்டத்தலைவர். குல்மம், வரூதம், ஸேனை, அக்ஷௌஹிணீ என்று படைகளில் பல பிரிவுகள் உள்ளன. இவை ஒருங்கிணைந்திருப்பதும் ஒரே நோக்குடன் செயல்படுவதும் சிறப்பாகும். இப்படைகளின் தலைமை தாங்கி நிற்பவர். இவ்வுலகம் ஒரு மாபெரும் கூட்டம். (மஹாகணம்) அதனைக்காப்பவர். உலகமாகத் தோன்றுமுன் ப்ரகிருதியாக, விளக்கம் பெறாமலிருந்த ஆகாயம் முதலிய மூலதத்துவ கணங்களைக் காப்பவர் (நா-1) மாதுளை, கதை, கரும்புவில், சூலம், சக்கிரம், தாமரை (சங்கு) பாசம்,

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அல்லிப்பூ, நெற்கதிர், தந்தம், ரத்தினகலசம், இவைகளைப் பத்துகைகளிலும் துதிக்கை நுனியிலும் ஏந்தி, தாமரை ஏந்திய கைகளுடன் தன்னுடன் இணைந்துள்ள வல்லபாதேவியை அணைத்தவர். உலகைப் படைத்துக்காத்து ஒடுக்குவதைப் பணியாக் கொண்டவர். அந்த விரும்பியதை வழங்குகிற மஹா(வல்லபா)கணபதியாயிருப்பவர்.

38. புத்த்திப்ரிய:- புத்திதேவியிடம் பிரியமுள்ளவர். விச்வரூபன் எனும் விசுவகர்மாவின் இரு பெண்களில் ஒருவள் புத்திதேவி. ஸரஸ்வதியின் அம்சம் என்பர். (மற்றவள் ஸித்திதேவி) தர்மதத்தனின் மகள் என்றும் கூறுவர். பரம்பொருளைப் பற்றிய அறிவின் வடிவான புத்தி சிற்றின்ப நிறைவில் ஏற்படுகிற ஸித்திக்கு மாற்றாகும். பேரறிவிலும் புத்தி தேவியிடமும் இவருக்கு நாட்டமுண்டு. (புத்தி: ப்ரியா அஸ்ய) ஐயம் நீங்கி நிச்சயிக்க உதவுவதே புத்தி. அத்தகைய புத்தியுள்ளவரையும் நாடுபவர். க்ஷிப்தம், மூடம், விக்ஷிப்தம், ஏகாக்ரம், நிருத்தம் என ஐந்து சித்த நிலைகள். ரஜோகுணம் மிகுந்து அலைபாய்கிற சித்தம் க்ஷிப்தம். சோர்வும் சோம்பலும் மிக்க நிலை மூடம். மாறிமாறி அடங்குவதும் அலைபாய்வதுமான சித்தம் விக்ஷிப்தம். ரஜோ குணமும் தமோ குணமும் அடங்கி சுத்தஸத்வ நிலையில் ஒருமுனைப்புள்ளது ஏகாக்ரம், எல்லா சித்தப்போக்குமடங்கி வாஸனை அல்லது ஸம்ஸ்காரம் மட்டும் மீதமாகி, ஸமாதி கலைந்த நிலையில் சிறிது உலகப்பற்றும் மற்ற சமயத்தில் ஸமாதியும் பெறுவதான நிலை நிருத்தம். இந்த ஐந்து நிலைகளிலும் அதனைத்தூண்டிப் பெருநிலை பெறச் செய்பவர்.

39 க்ஷிப்ரப்ஸாதந:- விரைவில் அருள்பவர். தன்னைத் தியானிப்பவர்களுக்கு விரைவில் அருள்புரிகிற ஒரு தோற்றம் - க்ஷிப்ரப்ரஸாதன கணபதி. பாசம், அங்குசம், கற்பகக்கொடி, தன் தந்தம் இவை நான்கு கைகளில், துதிக்கையில் மாதுளை, நெற்றியில் பிறை, முக்கண்கள், செந்நிறம், யானைமுகம், பெருவயிறு, பத்மாஸனம், அமைந்த கோலம் கொண்டவர்.

40. ருத்ரப்ரிய:- ருத்திரரிடம் பிரியமுள்ளவர். ஸ்ரீ ருத்திரம் என்ற யஜுர்வேதப்பகுதியை ஓதிக் கேட்கப்பிரியமுள்ளவர். ருத்திரருக்குப் பிரியம் தருபவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



41. கணாத்த்யக்ஷ:- கணங்களின் மேற்பார்வையாளர். முப்பத்தாறு தத்துவங்களும், உலகம் ஜீவன் ஈச்வரன் என்ற மூன்றுகத் தோற்றமளிக்கின்றன. அவையாவன - சிவன், சக்தி, ஸதாசிவன், ஈச்வரன், சுத்த வித்யை, மாயை, கலா, வித்யா, ராகம், காலம், நியதி, புருஷன், பிரகிருதி, மஹத், அஹங்காரம், மனஸ், ஞானேந்திரியங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5, பஞ்சபூத தன்மாத்ரைகள் 5. பஞ்சபூதங்கள் 5 என்பவை. இவற்றின் தலைவர். இவற்றை ஒருங்கிணைத்துத் தன் மேற்பார்வையில் இயக்குபவர்.

42. உமாபுத்ர:- உமையின் புதல்வன்: புத் என்ற நிலை செல்ல நேராதபடி, புத்திரனாகப் பிறந்து உமாதேவியைக் காப்பாற்றியவர்.

43. அகநாசந: - பாபம் களைபவர். பாவம் அழிக்கவல்லது. அதனை அழிப்பவர். பெருவயிறனாயினும் கனத்த உணவு கொள்ளாதவர். அடியவர் சிறிதளவு அளிப்பதையும் ஏற்று மகிழ்பவர். (அ-கந-அசந:)

குமாரகுருரீஶாந புத்ரோ மூஷகவாஹந:.
ஸித்த்திப்ரியஸ் ஸித்த்திபதி: ஸித்த்த: ஸித்த்திவிநாயக: 11

44. குமாரகுரு:- குமரனுக்குக் குரு. குமார:- என்ற சொல்லிற்கு சுப்ரமண்யர், ஸனத்குமாரர், இளையவர். என்றபொருள் உண்டு. சுப்பிரமணியருக்கு மூத்தவர், ஸனத் குமாரராகி நாரதருக்கு உபதேசித்தவர், ஸனத்குமாரருக்கும் குரு. வயதில் இளைவராயினும் குருவானவர்.

45. ஈஶாந புத்ர:- சிவனின் புதல்வர். உலகின் பேராளுனரும் முழுமுதற்கடவுளுமான சிவனது புதல்வர்.

46. மூஷிக வாஹன: - எலியை வாகனமாகக் கொண்டவர். பெருச்சாளி எலிகளில் முரடும் பெரிதுமானது. மூஞ்சூறு எலிகளில் சிறிதும் மென்மை கொண்டதும் கூட. இவ்விரண்டையும் வாகனமாகக் கொண்டவர். திருட்டெண்ணம் கொண்டு உலகைத் தன் போகப்பொருளாக்க விழைகிற ஜீவனை அடக்கி வாகனமாக்கிக் கொண்டவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



47. ஸித்த்திப்ரிய: - ஸித்தியிடம் அன்புள்ளவர் - ஸித்திதேவி விச்வரூபன் என்ற விச்வகர்மாவின் இரு பெண்களில் ஒருவள். இவள் லக்ஷ்மியின் அம்சம் என்பர். (நா- 38) தர்மதத்தரின் பெண் என்பதும் உண்டு. விரும்பியதை உழைத்துப் பெறுவது ஸித்தி. அப்படிப்பெறப்படுகிற ஸித்தியில் பிரியமுள்ளவர். விளைகிற ஸித்தி, புத்திக்கு நிறைவும் மயக்கமும் தரும். அணிமாதி ஸித்திகள் அனைத்தும் மாயையின் விளைவே. அந்த மாயாமயமான ஸித்தியிடம் பிரியமுள்ளவர்.

48. ஸித்த்திபதி:- ஸித்திகளைக்காப்பவர். அணிமா, மஹிமா, கரிமா, லகிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈசித்வம், வசித்வம் என்ற எட்டு ஸித்திகளைக் காப்பாற்றுபவர்.

49. ஸித்த்த: - சித்தி பெற்றவர். விரும்பியதைச் செயல் நேர்த்தியால் நிறையப் பெற்று அனுபவிப்பவர். புசுண்டி, கோரக்கர் முதலிய சித்தர் வடிவில் இருப்பவர்.

50. ஸித்த்திவிநாயக:- சித்திகளை வழிப்படுத்துபவர். நற்பணிகளின் தொடக்கத்தில் வழிபட அப்பணிகள் நிறைவேறி அவற்றின் பயன் வழிபடுபவரைச் சென்றடையச் செய்பவர்.

அவிக்க்நஸ்தும்புரு: ஸிம்ஹவாஹநோ மோஹிநீப்ரிய: ।
கடங்கடோ ராஜபுத்ர: ஶாலகஸ் ஸம்மிதோ(அ)மித: ॥ 12

51. அவிக்க்ந:- பசுத்தன்மை நீக்குபவர். செம்மறியாடு (அவி) போன்று கடந்ததையும் நடப்பதையும் நடக்க விருப்பதையும் உணராத அடியார்களின் அறியாமையை அகற்றித் தெளிவு தருபவர். இடையூறில்லாமல் செய்பவர். மதத்திரவாசக்தியுடன் அவிக்கநர் என்ற ஆவரண தேவதையாக அறுகோணத்தில் அமர்ந்திருப்பவர்.

52. தும்புரு:- வீணையில் பாடுபவர். சுரைக்குடுக்கை (தும்ப) பொருத்திய வீணையில் கானம் செய்கிற தும்புரு ரிஷியால் பாடப்பெறுபவர். அறிவாளிகளால் பாடப்பெறுபவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



53. ஸிம்ஹவாஹன:- சிங்கத்தை வாகனமாகக் கொண்டவர். கிருத யுகத்தில் சிங்கமும், திரேதாவில் மயிலும், துவாபரத்தில் மூஞ்சூறும் கலியுகத்தில் குதிரையும் பகவானின் வாகனமாய் அமையும். ஹேரம்பகணபதியின் வாஹனம் சிங்கம. (நா 23) துராஸதன் என்ற அசுரனைக் கொல்லப் பார்வதி தன் வாகனமான சிங்கத்தைக் கணேசருக்குத் தந்தாள். (நா-6)

54. மோஹிநீப்ரிய: - மோகினியின் அன்பர். (தீவ்ரா ஜ்வாலினீ, மோஹினீ, போகதாயினீ, காமினீ, வஸுந்தரா என்ற ஆறு சக்திகள் ஆவரணத்தில் உள்ளவர்கள்.) அமிருதம் பகிர்ந்தளிக்க வந்த மோஹினியிடம் அன்பால் மயங்கிய பரமசிவனாக இருப்பவர்.

55. கடங்கட:- மறைப்பை அகற்றுபவர். அறியாமையால் ஆத்மா மீது ஏற்படுகிற மறைப்பை நீக்கி ஞான ஒளிபாயச் செய்பவர்.

56. ராஜபுத்ர:- குரு தேசத்து அரசன் வரேண்யனின் மகனாகப் பிறந்தவர். சந்திரனை (ராஜா) மகன்போல் மதித்துச் சிரசில் அணிந்தவர்

57. ஶாலக:- மணிமுடியால் கேசத்தை மறைத்தவர், புலன்களை அடக்கிய சாந்தர், புலனுக் கெட்டாதவர்.

58. ஸம்மித:- சிறிதிலும் அடங்கியவர். கொசுவிலும் யானையிலும் அததன் வடிவிற்கேற்ற அளவில் அடங்கியவர். எங்கும் நிறைந்த பரமாத்மாவாயினும் ஒவ்வொரு உடலிலும் குறுகி நிற்பவர். உள்ளத்தில் கட்டை விரலளவு இருப்பதாக உபநிடதம் கூறும்.

59. அமித:- அளவிடப்படாதவர். நீளம், குட்டை, பெரிது, சிறிது, என்ற எந்த அளவீட்டிற்கும் உட்படாமல் அணுவிலும் அணுவாகப் பெரிதிலும் பெரிதாக மூத்ததிலும் மூத்தவராக இருப்பவர்.

கூஶ்மாண்ட ஸாமஸம்பூதி: துர்ஜயோ தூர்வஹோ ஜய: ।
பூபதிர் புவநேஶாநோ பூதாநாம் பதிரவ்யய: ॥ 13

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



60. கூஶ்மாண்டஸாமஸம்ப்பூதி: - கூச்மாண்டம் என்ற மந்திரங்களின் சக்தியானவர். கூச்மாண்டமந்திரங்கள் யஜுர் வேதத்திலும் ஸாமவேதத்திலும் பாபம் நீக்கித் தூய்மை தருகிற ஹோமங்களில் பயன்படுபவை. அவை தூய்மை தருகிற சிறப்பு (ஸம்ப்பூதி) பகவானுடையதே.

61. துர்ஜய:- வெல்ல இயலாதவர். வலிவு மிக்க எதிரியும் இவரிடம் அடங்கிவிடுவான். இவரை எவனும் வெல்ல இயலாது.

62. துர்வஹ:- உலகைக் காக்கின்ற பொறுப்பை எளிதாகச் சுமப்பவர். தூர்ஜய: என்ற பாடமுண்டு. முன்னின்று வெல்பவர்.

63. ஜய:- வெற்றி வடிவினர். நல்லறிவு, தந்து தூண்டி வெற்றிப்பெறச் செய்பவர். ஜயம் எனும் இவர் எழுதிய மஹாபாரதமாக இருப்பவர்.

64. பூபதி:- உலகின் நாயகர். பூபதி புவனபதி பூதபதி என அக்கினிதேவனுக்கு மூன்று ஸஹோதரர்கள். அந்த பூபதியார்யிருப்பவர். வரேண்யனின் புதல்வராகப் பிறந்து குரு தேசத்தை ஆண்டவர்.

65. புவநேஶாந:- புவனபதியானவர். அக்னிதேவனின் சகோதரர். ஸ்வானந்த புவனம் என்ற தன் லோகத்தின் தலைவர். எங்கும் பரவிநின்று ஆள்பவர்.

66. பூதாநாம் பதி: - பூதபதியானவர். அக்கினிதேவரின் மற்றொரு சகோதரர். உலகின் அனைத்து உயிரினத்தின் ஈசன். பரமாத்மாவாக எல்லாப் பொருள்களிலும் உறைபவர்.

67. அவ்யய:- தேய்வுறுதவர்: குறைவோ தேய்வோ அழிவோ இல்லாதவர். எங்கும் நிறைந்திருப்பதால் எதனை விட்டும் அகலாதவர்

**விஶ்வகர்தா விஶ்வமுகோ விஶ்வரூபோ நிதிர்க்க்ருணி: ।**
**கவி: கவீநாம்ருஷபோ ப்ரம்ஹண்யோ ப்ரம்ஹணஸ்பதி: 14.**

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



68. விஶ்வகர்தா - அனைத்தையும் படைத்தவர். படைப்பு தொடங்குவதற்கு முன் அவர் மட்டும் இருந்தார். மாயையால் பலவாகப் பெருகி ஒவ்வொன்றினுள்ளும் புகுந்து (விச்வம்) தனித்தன்மை தந்து, எல்லாமாகி எல்லாவற்றையும் தன்னுள் புகச்செய்து உலகமாகப் படைத்தவர்.

69. விஶ்வமுக: - எல்லாவற்றையும் விழுங்கியவர். உலகின் தொடக்கம் (முகம்) அவரிடமிருந்தே உண்டானது. உலகம் அவர் வாயில் அடங்கும் பொருளானது. உலகின் தனித்தனி வாயாகி ஒவ்வொன்றும் தனித்தனியா யிருப்பதை உணர்த்தியவர். உலகின் வாயாகிப்பெற வேண்டியதைப் பெற்று நிறைவு காண்பவர்.

70. விஶ்வரூப: - உலக வடிவில் உள்ளவர். தன்னைத்தவிர வேறொன்றில்லாத நிலையில் தன்னிடமிருந்தே, தன்னையே மூலப் பொருளாகிக் கொண்டு உலகைப் படைத்தமையால் உலகம் அவரே. விச்வரூபர் என்ற தேவர்களின் புரோஹிதரா யிருந்தவர். துவஷ்டாவின் புதல்வர் இவர்.

71. நிதி:- எல்லாவற்றின் காப்பகம். காப்பகத்தில் வைத்துள்ள பொருள்போல் உலகம் இவரிடம் நன்கு பாதுகாப்புப் பெறுகிறது. பத்மம், மஹாபத்மம், சங்கம், மகரம், கச்சபம், முகுந்தம், குந்தம், நீலம், கர்வம் என்ற ஒன்பது நிதிகளாக இருப்பவர்.

72. க்க்ருணி:- சூர்ய ஒளியானவர் - ஒளிமிக்க சூர்யனானவர்.

73. கவி:- கவியானவர். காவியமியற்றுபவர். சுக்கிரரும் கவியே. இவரது ஆறெழுத்து மந்திரத்தின் குரு சுக்கிரர். அந்த குருவடிவினர். ஆழ்ந்து பரந்து நோக்குபவனே கவியாவான். அத்தகைய சிந்தனையாளர். கவி இயற்றுகிற காவியமும் இவரே.

74. கவீநாம்ருஷப:- கவிகளில் சிறந்தவர். 'கவீநாம் கவிம்' என இவரை வேதம் போற்றும். கவிக்குக் கவிதை புனையும் ஆற்றலைத் தருபவர். கவியின் உள்ளத்தில் அமர்ந்து

 https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



கவிதையை வெளிப்படுத்துபவர். அனைத்து உள்ளங்களிலும் சாட்சியாக அமர்ந்து சித் - மாயை இணைப்பால் உணர்வுகளைத் தூண்டுபவர்.

75. ப்ரம்ஹண்ய:- பிரும்மத்திற்கு இதமாயிருப்பவர். வேதம், வேதமோதுபவர், வேத வழியில் செய்கிற தவம், தவத்தால் நாடப்பெறுகிற பரம்பொருள், வேதத்தை உலகிற்குத் தருகிற பிரும்மதேவன் இவை அனைத்தும் பிரும்மமே. இவற்றிற்கு இதம்புரிபவர்.

76. ப்ரம்ஹணஸ்பதி:- வாக்கின் ஈசன். ஸித்த்தி தேவி பராவாக் எனும் பிரும்ம மூலஒலியின் வெளிப்பாடு. அவளே ஸரஸ்வதீ. அவளுக்குக் கணவர். வேதம், தவம், வேதமோதுபவர், பிரும்மா இவர்களின் தலைவர். ப்ரம்ஹணஸ்பதி என்ற பெயரில் தான் வேதம் கணேசரை அறிமுகம் செய்விக்கிறது.

ஜ்யேஷ்ட்ட ராஜோ நிதிபதிர் நிதிப்ரியபதிப்ரிய: ।
ஹிரண்மய புராந்தஸ்த்த: ஸூர்யமண்டல மத்த்யக: ॥ 15

77. ஜ்யேஷ்ட்டராஜ:- முதியவருக்கும் முதியவராக விளங்குபவர். உலகில் முதலில் தோன்றியவர்களாகக் கருதப்பெறுகிற பிரும்மா முதலானோருக்கும் முந்தியவர். ஜ்யேஷ்டம் என்ற ஸாம மந்த்ரத்தால் புகழப்பெறுபவர். சிவபெருமானின் புதல்வர்களில் மூத்தவர். இளவரசராகப் போற்றப்படுபவர். புத்திரர்களில் மதிப்பு மிகுதியால் பிள்ளையார். குருராஜனான வரேண்யனின் மூத்த புதல்வரானதால் இளவரசர்.

78. நிதிபதி:- மஹாபத்மம் முதலிய ஒன்பது நிதிகளையும் காப்பவர். ''நிதீநாம் த்வா நிதிபதிம் ஹவாமஹே'' என வேதத்தால் நிதிபதி எனக் கொண்டாடப்பெறுபவர் .(நா-71) ஸமுத்திரம் ஜலநிதி(தேங்குமிடம்)யாகும். தனநிதி (வைப்பிடம்) குபேரன். மக்கள் தலைவர்களின் நிதி (தங்குமிடம்) பிரும்மா. ஒளியின் நிதி (தோற்றுவாய்) சூர்யன். இத்தனை நிதிகளுக்கும் தலைவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



79. நிதிப்ரிய பதிப்ரிய:- குபேரன் முதலான நிதிபதிகளின் அன்புள்ள தலைவர். நிதியைக் கட்டிக்காக்கின்ற பேரரசர்கள், குபேரன் போன்றோரும் விரும்பி இவரைப் போற்றுவர்.

80. ஹிரண்மய புராந்தஸ்ஸ்த்த:- பொன்னகரத்தின் உள் அமர்ந்தவர். பொன்னகரம் போன்று ஒளிமிக்க இதயப்பெருவெளியை ஹிரண்யமயபுரம் என்பர். அதுவே பரமாத்மாவின் உறைவிடம். அந்த பரவெளியில் இருப்பவர்.

81. ஸூர்ய மண்டல மத்த்யக:- சூர்ய மண்டலத்தின் நடுவில் உள்ளவர். பிண்டத்தினுள் இதயப் பெருவெளியும் அண்டத்தில் ஸூர்ய மண்டலமும் பரம்பொருளை எளிதில் ''இதோ இருக்கிறான்'' எனக்காணச் செய்யுமிடங்கள். உபாஸகர்கள் ''த்த்யேய: ஸதா ஸவித்ரு மண்டலமத்த்யவர்தீ நாராயண: என நாராயணனையும் ''ஸௌரமண்டல மத்த்யஸ்த்தம்'' எனச் சிவபெருமானையும் ''பானுமண்டல மத்தயஸ்த்தா'' எனத்தேவியையும் தியானிப்பது போல் கணபதியையும் ஸூர்ய மண்டலத்தின் நடுவே இருப்பதாகத் தியானிப்பது வழக்கம். சித்சக்தி வடிவினரான பரம்பொருள் உறையுமிடம் சூர்யமண்டலம். ப்ரம்ஹபுரம் என்றும் அதற்குப் பெயருண்டு.

**கராஹதித்த்வஸ்தஸிந்த்துஸலில: பூஷதந்தப்பித் ।**
**உமாங்ககேலிகுதுகீ முக்தித: குலபாலந: ॥ 16**

82. கராஹதித்த்வஸ்தஸிந்த்து ஸலில:- கடலைத்துதிக்கையின் அடியால் கலக்குபவர். பாலகணபதி விளையாட்டாக, ஸிந்து நதியையும் கடலையும் அடைந்து நீண்டு பருத்த தன் துதிக்கையால் நீரை உறிஞ்சிக் குடிக்க நீர் வற்றிவிட்டது. உறிஞ்சிய நீரைக் கொப்புளித்துத் துப்ப, அடியில் படிந்திருந்த வண்டல் கலந்து நீர் குழம்பியது. இது விளையாட்டிற் கேற்றதல்ல என்று கடலை உறிஞ்சி வானில் தூவானம் போல் துப்பினார். கடலினுள்ளிருந்த சந்த்ரன், காமதேனு, ஐராவதம், அப்ஸரஸுகள் முதலானவர்கள் ஆங்காங்கு சிதறி விழுந்தனர். என இதனைக்கவிகள் வர்ணித்துள்ளனர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



83. பூஷ தந்தபித்- பூஷாவின் பற்களை உடைத்தவர். தக்ஷன் தன்வேள்வியில் சிவநிந்தை செய்ததால் சிவனின் கணங்கள் தக்ஷனின் வேள்விக்கூடத்தையும் அங்கு வந்திருந்தவரையும் அடித்து நொறுக்கியபோது இவரது கணங்கள் பூஷா என்ற ஆதித்யனின் பற்களை உடைத்தெறிந்தனர். அன்றிலிருந்து கடித்து உண்பதற்கு பூஷாவால் இயலவில்லை என அவரது மாதமான புஷ்ய (தை)த்தொடக்கத்தில் பொங்கல் அவருக்குப் படைக்கின்றனர்.

84. உமாங்க கேலிகுதுகீ- உமையின் மடியில் விளையாடுவதில் பேரார்வமுள்ளவர். முதியவருக்கு முதியவராயினும் தாயின் மடியில் அமர்ந்து விளையாடுவதில் உள்ள ஆனந்தத்தில் குழந்தையாகிவிடுகிறார்.

85. முக்தித:- விடுதலை தருபவர். அரசன் தருகிற தண்டனைத்தளை, விதி தருகிற வினைத்தளை இவைகளை நீக்கி துயரிலிருந்து விடுவிப்பவர். ஜனன - மரணத்தளை நீக்குபவர். வீடுபேறு பெறுபவர் சூர்ய மண்டலத்தைப் பிளந்து செல்வர். சூர்ய மண்டலம் மோக்ஷத்துவாரமாகும். (நா-81) அங்கிருக்கிற கணபதி அந்தத்துவாரத்தைத் திறந்து விடுகிறார்.

86. குலபாலந:- குலத்தை காப்பவர். தர்மத்தை வாழையடி வாழையாகக் காத்து வருகிற குலம் பெருக உதவுபவர். கௌல மார்க்கத்தைக்காப்பவர். தாய்வழியான இமவானின் குலப் பெருமையைக் காப்பவர்.

கிரீடீ குண்டலீ ஹாரீ வநமாலீ மநோமய: ।
வைமுக்க்ய ஹததைத்யஸ்ரீ: பாதாஹதி ஜிதக்ஷிதி: ॥ 17.

87. கிரீடீ- மணிமகுடம் சூடியவர்

88. குண்டலீ - குண்டலமணிந்தவர். வட்டமிட்ட மர்ந்த நாகம் குண்டலமாகிறது.

89. ஹாரீ - புஷ்பம் - ரத்னம் இவற்றாலான மாலையணிந்தவர். உள்ளம் கவர்கிற அழகர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



90. வநமாலீ - வனமாலேயணிந்தவர் - காட்டில் பூத்தபூக்கள், தாமரை இவற்றால் முழங்கால்வரை தொங்குகிற ஆளுயர மாலே, கடம்பப்பூவாலான குஞ்சம் கொண்டது வநமாலேயாகும்.

91. மநோமய:- விருப்பப்படி வடிவம் கொள்பவர். மேகம் போல் உருவம் மாறும். வடிவு முதலிய சிறப்புகள் காண முடியாத இவருக்கு நிலேத்த வடிவமைப்பு கிடையாது. எனினும் அடியவரின் மனத்தில் பதிவதற்காக விருப்பப்படி உருவமைத்துக் கொள்பவர்.

92. வைமுக்க்ய ஹததைத்யஸ்ரீ:- தனது பாராமுகத்தால் அசுரச்செழிப்பை மறையச் செய்தவர். பகவானின் அருட்பார்வை படாத இடம் பாழாகும்.

93. பாதாஹதி ஜித க்ஷிதி:- காலடி அழுத்தத்தால் பூமியை வணங்கச்செய்தவர். பூமியும் பூமியிலுள்ளவரும் இறுமாப்பால் நிமிரும்போது திருவடியால் அழுத்தி அடக்குபவர்.

ஸத்யோஜா தஸ்வர்ணமுஞ்ஜமேகலீ துர்நிமித்தஹ்ருத் ।
துஸ்ஸ்வப்நஹ்ருத் ப்ரஸஹநோ குணீ நாதப்ரதிஷ்ட்டித:18

94. ஸத்யோஜாதஸ்வர்ண முஞ்ஜமேகலீ- புதிதாக முளேத்த தங்கநிற முஞ்சைப் புல்லாலான அரை ஞாணே அணிந்தவர். பிரும்மசாரி முஞ்சைப்புல்லாலான அரைநாணேக் கட்டிக் கொள்வது மரபு.

95. துர்நிமித்த ஹ்ருத் - துர்நிமித்தங்களே அழிப்பவர். தனி ஒருவனுக்கும் சமுதாயத்திற்கும் பெருந்தீங்கு விளேயுமுன் அதற்கான அறிகுறிகள் காணப்படும். வழிபடுகிற தெய்வச்சிலே உடைதல், பூகம்பம், வானிலிருந்து தீக்கொழுந்துகள் விழுதல் முதலிய நிமித்தங்களேக் கொண்டு நாட்டிற்கு நேர இருக்கிற அபாயத்தை முன் உணர முடியும். கேடுகளே வராமல் தடுத்து, அபாய ஸூசனேகளால் வருகிற திகிலேயும் களேபவர்.

96. துஸ்ஸவப்நஹ்ருத்- கெட்டகனவை மாற்றுபவர். கேடுவருவதை முன் உணர்ந்த உள்மனம் அதனே சுட்டிக்காட்டுகிற முறை கெட்ட கனவாகும். முன்னதான

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



கெட்ட செயலின் பின் விளைவு கேடு. வினை தீர்த்து, வினைப்பயன் வராமல் தடுக்கிற கணபதி கெட்ட கனவு நேராமல், கெட்ட கனவின் சூசனைப்படி ஏதும் நேராமல் பாதுகாக்கிறார்.

97. ப்ரஸஹன:- பொறுத்தாள்பவர். அடியவரின் குற்றத்தைப் பொருட்படுத்தாதவர். அதனால் அது வினையாகாமல் தடுக்கிறார்.

98. குணீ - சிறப்பு மிக்கவர் - இறைவனிடம் எட்டு ஆத்மகுணங்கள் உள்ளன. அபஹதபாப்மா (பாபமற்றவர்) விஜர: (மூப்பற்றவர்) விம்ருத்யு: (மரணமற்றவர்) விசோக: (சோகமற்றவர்) விஜிகத்ஸ: (பசியற்றவர்) அபிபாஸ: (நீர் வேட்கையற்றவர்) ஸத்யகாம: (விருப்பங்களை ஸத்யமாக நிறைவேற்றிக் கொள்பவர்) ஸத்யஸங்கல்ப: (ஸத்யமாகின்ற செயல்திட்டமுள்ளவர்) என. இந்த எட்டு சிறந்த குணங்களுள்ளவர். எல்லாமறிந்தவர், எல்லாம் வல்லவர், எல்லாமானவர் முதலிய சிறப்புகளும் இதனுள் அடங்கும்.

99. நாதப்ரதிஷ்ட்டித: - நாதத்தில் நிலைபெற்றிருப்பவர். பிந்து, அர்த்தசந்திரன், ரோதினீ, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபிகா, ஸமனா, உந்மநீ, மஹாபிந்து என்று பிந்துவின் பத்து நிலைகளில் நாலாவதான நாதத்தில் நிலைத்தவர். சிகப்பு ரத்தின ஒளியுடன், பீஜகோசங்களின் இடையே உள்ள தையலைப்போன்ற வடிவுள்ள நாதம் 'ம்' என்ற எழுத்தின் கார்வையில் மிகமிக சூட்சமமான ஒலிவடிவம்.

ஸுரூப: ஸர்வநேத்ராதிவாஸோ வீராஸநாஸ்ரய: ।

பீதாம்பர: க்கண்டரத: க்கண்டேந்து க்ருதசேகர: ॥ 19.

100. ஸுரூப:- எழில் மிக்கவர். தத்துவங்களால் நன்கு விளக்கப்படுபவர்.

101. ஸர்வநேத்ராதிவாஸ:- அனைத்து உயிரினத்தின் கண்களிலும் குடியிருப்பவர். பார்வையும் அமைப்பும் இவரது இயக்கத்தாலானவை.

102. வீராஸநாஸ்ரய: - வீராஸனத்தில் அமர்ந்தவர். இடது முழங்கால்மேல் வலப்பாதத்தைப் பொருத்தி அமர்வது வீராஸனமாகும்

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



103. பீதாம்பர:- வெளிர்மஞ்சளாடை உடுத்தியவர். கடல் நீரைத் துதிக்கையால் உறிஞ்சிக்குடித்தவர் (நா82) பிரளயத்திற்கு முன் கடைசிபூதமாகிய வானையும் தன்னுட் செலுத்தியவர்.

104. க்கண்டரத: - துண்டாடிய தந்தமுள்ளவர்

105. க்கண்டேந்து க்ருதசேகர: - சந்திரனின் கீற்றைத் தலையில் அணிந்தவர்.

சித்ராங்க ஶ்யாமதஶநோ பாலசந்த்ரஶ் சதுர்ப்புஜ: ।
யோகாதிபஸ் தாரகஸ்த்த: புருஷோ கஜகர்ணக: ॥ 20.

106. சித்ராங்கஶ்யாமதஶந:- பல நிறப்புள்ளியால் நிறம் மங்கிய தந்தமுள்ளவர்.

107. ப்பாலசந்த்ர:- நெற்றியில் பிறையணிந்தவர். பாதிச்சந்திரன் போன்று வளைந்த நெற்றியுள்ளவர்

108. சதுர்ப்புஜ:- நான்கு கைகளுடையவர். ஸ்வஸ்திகச் சின்னம் நான்கு கைகளுள்ளது. அது விநாயகரின் அருள் பெற உதவும்.

109. யோகாதிப:- யோகிகள் வடிவில் இருப்பவர். யோக மார்க்கத்தின் காப்பாளர். லகுலீசர் முதலிய 28 யோகிகளின் வடிவில் இருப்பவர். லகுலீசர், சுவேதர், ருத்திரர், ஸுதாரர், மதனர், ஸுஹோத்திரர், கங்கணர், (கங்கர்) லோகாக்ஷி, ஜைகீஷவ்யர், ததிவாஹனர், ருஷபர், உக்ரர், அத்ரி, ஸுபாலகர் (பாலி) கௌதமர், வேதசீர்ஷர், கோகர்ணர், குஹாவாஸீ, சிக்கண்டப்ப்ருத், ஜடாமாலீ, அட்டஹாஸர், தாருகர், லாங்கலீ, மஹாகாயமுனி, சூலீ, முண்டீஶ்வரர், ஸஹிஷ்ணு, ஸோமசர்மா, என 28 யோகீச்வரர்கள் (லிங்கபுராணம் 1-7).

110. தாரகஸ்த்த:- பிரணவத்தினுள்ளிருப்பவர். பிரணவம் (தாரகம்) பிறவிக்கடலைத்தாண்டச் செய்யும்.

111. புருஷ:- உயிரினத்தின் உடல்களில் அவற்றின் செயல்களின் சாட்சியாக உறைபவர். புருஷன் என்ற 25வது தத்துவமானவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



112. கஜகர்ணக:- யானையின் செவி போன்ற செவி உள்ளவர். பெருங்காதுகள் எப்போதும் பனைவிசிறிபோல் அசைந்து கொண்டிருக்கும்.

கணாதிராஜோ விஜயஸ்த்திரோ கஜபதித்த்வஜீ।

தேவதேவ: ஸ்மரப்ராணதீபகோ வாயுகீலக: ॥ 21.

113. கணாதிராஜ: - கணங்களின் பேரரசன். சிருங்காரம், வீரம், கருணம், ரௌத்ரம், பீபத்ஸம், ஹாஸ்யம், அத்ப்புதம், சாந்தம், பயானகம், என்ற ஒன்பதும் ரஸகணம். யகணம், மகணம், தகணம், ரகணம், ஜகணம், பகணம், நகணம், ஸகணம் என்ற எட்டும் அக்ஷரகணம் (யமாதா. மாதாரா, தாராஜ, ராஜபா, ஜபாந, பாநஸ, நஸல, ஸலகம் என்றவாறு லகு குரு எழுத்து அமைப்புள்ளவை) நவரஸ கண அமைப்பாலும் இனிய அக்ஷரகண அமைப்பாலும் அழகுற்ற காவியத்தால் விளக்கப்பெறுபவர்.

114. விஜயஸ்த்திர:- வெற்றியில் நிலைத்தவர். அடியார்களின் வெற்றியே தன் நிலைப்பு எனக் கருதுபவர். அடியாரை வெற்றியில் நிலைக்கச் செய்பவர்.

115. கஜபதித்தவஜீ- பெரு யானையைக் கொடியாகக் கொண்டவர். (பெருச்சாளியும் கொடியில் உண்டு. நா-377)

116. தேவதேவ:- இந்திரன் முதலான தேவர்களுக்கும் தேவன்.

117. ஸ்மரப்ராணதீபக:- மன்மதனின் உயிரைத் தூண்டியவர். சிவபெருமானின் கோபத்தீயில் எரிந்த மன்மதனின் சாம்பலை உருட்டி உருவகப்படுத்தி கணபதி விளையாட தேவி காமேசுவரனின் அனுமதியுடன் அதனை உயிர்ப்பித்தாள் என்றும் வரலாறு.

118. வாயுகீலக:- வாயுவின் பீஜ எழுத்தான 'ய' வைக் கீலகமாகக் கொண்ட வக்ரதுண்டமந்திரவடிவினர். ஒன்பது ஓட்டைகள் கொண்ட உடலிலிருந்து வெளியேற நேரம் எதிர்பார்க்கிற உயிரை வெளியே செல்லாதபடி தாளிடுபவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



விபஸ்சித்வரதோ நாதோந்நாத பிந்ந பலாஹக: ।
வராஹரதநோ ம்ருத்யுஞ்ஜயோ வ்யாக்க்ராஜிநாம்பர: 22.

119. விபஸ்சித்வரத: - விபச்சித் என்ற மன்னனுக்கு வரமளித்தவர். அதற்காக அக்கினியிலிருந்து வஸிஷ்டகுமாரராகத் தோன்றியவர்.

120. நாதோந்நாத பிந்ந பலாஹக:- தனது பிளிறலாலும் அதன் எதிரொலியாலும் மேகவரிசையைச் சிதற அடித்துக் கலைத்தவர்.

121. வராஹ ரதந:- காட்டுப்பன்றியுடையது போன்ற தெற்றிப்பல் உள்ளவர். யஜ்ஞவராஹ மூர்த்தியாகிப் பூமியைச் சுமந்த அழகிய தெற்றிப்பற்களுள்ளவர்

122. ம்ருத்யுஞ்ஜய: - யமனை வென்றவர். யமனை அழித்த சிவனாயிருப்பவர். காலத்திலோ அகாலத்திலோ ஏற்படுகிற மரணம், மரணத்திற்கொப்பான கேடுவிளைவிக்கிற மெத்தனம், (ப்ரமாதம்) கவனக்குறைவு இவற்றைக் களைபவர்.

123. வ்யாக்க்ராஜிநாம்பர: - புலித்தோலாடையணிந்தவர். சிவனாகிய நிலை புலித்தோலாடையால் வலிவடைகிறது.

இச்சாஶக்திதரோதேவத்ராதா தைத்யவிமர்தந: ।
ஶம்புவக்த்ரோத்பவஶ் ஶம்புகோபஹா ஶம்பு ஹாஸ்யபூ: ॥ 23.

124. இச்சா ஶக்திதர:- இச்சா சக்தியுள்ளவர். உலகைப் படைக்குமுன் பகவானுக்கு எழுந்த ஸங்கல்பம் ஈச சக்தியின் முதற்பிரிவான இச்சா சக்தியாக வடிவெடுத்தது. அதுவே படைக்கும் ஆற்றலாகியது. ஸங்கல்பமே உலகாகியது.

125. தேவத்ராதா- தேவர்களைக் காப்பவர். அசுரர்களின் தவ வலிமை கொண்ட எதிர்ப்பால் உண்டான பயத்திலிருந்து காப்பவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



126. தைத்ய விமர்தன:- அசுரர்களை அழிப்பவர். தேவர் பயம் நீங்கி வாழத் தேவசக்திக்கு எதிரிகளை அழிப்பவர். (தேவர்களுக்கு உதவ சிவபார்வதி தம்பதிகளின் புதல்வனாகத் தோன்றிய சிறப்பு *127.135* நாமங்களில்)

127. ஶம்ப்புவக்த்ரோத்ப்பவ:- சிவனின் முகத்திலிருந்து தோன்றியவர். திரிபுரனை வெல்வதற்குச் சிவபெருமான் நூறுண்டுகள் தவமிருந்தார். அவரது முகத்திலிருந்து ஒரு ஜோதிமிக்க புருஷன் வெளிவந்தார். ஐந்து முகங்களும் பத்து கைகளும் நிலவொளி போன்ற மேனிவண்ணமும் கொண்ட அவரே மஹாகணபதியானார். (நா-37) (சு-2-5)

128. ஶம்ப்புகோபஹா - சிவனின் கோபத்தைத் தணித்தவர். தனது பாலலீலைகளால் சிவனின் மனத்தைக் கவர்பவர்.

129. ஶம்ப்பு ஹாஸ்யபூ: - சிவனைச் சிரிக்க வைப்பவர். அறியாப் பேதைச் சிறுவனாகக் கணபதி விளையாடுவதைக் கண்ட சிவன் மனமகிழ்ந்து சிரிப்பார்.

ஶம்ப்புதேஜா: - ஶிவாஶோகஹாரீ கௌரீஸுகாவஹ: ।
உமாங்கமலஜோ கௌரீதேஜோபூ: ஸ்வர்த்துநீபவ: ॥ 24.

130. ஶம்ப்பு தேஜா:- பரமசிவனது தேஜஸானவர். சிவபெருமானும் பார்வதியும் ஓங்கார சித்திரத்தைக் கண்டபோது பெண் யானையும், ஆண்யானையும் ஒன்றையொன்று பார்த்து நிற்பது போலத் தோன்ற, இருவரும் அந்த யானை உருவங்களில் மோகித்து நிற்க, சிவனது வீர்யம் கணபதியாயிற்று என்பர்

131. ஶிவாஶோகஹாரீ - பார்வதியின் துயர் துடைத்தவர். புண்யகம் என்ற பெருவிரதமிருந்து பார்வதி விநாயகரைப் பெற்றாள். பிள்ளைப் பேறில்லாத துயரம் அதனால் நீங்கியது. மஹிஷன் பண்டன் முதலிய அசுரர்களை அழிக்கத் தேவி எடுத்த பல அவதார நிலைகளில் விக்னங்களை அகற்றித் தேவிக்கு உதவித் துயர் துடைத்தவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



132. கௌரீஸுகாவஹ:- கௌரிக்கு இன்பமளித்தவர். விநாயகரைப் பெறப் பார்வதி தவமியற்றியபோது தரிசனம் தந்து மகிழ்வித்தவர்.

133. உமாங்கமலஜ:- உமையின் உடலழுக்கிலிருந்து உதித்தவர். பார்வதி நீராடுமுன் உடலில் தேய்த்துக் கொண்ட எண்ணெய் பூச்சும் நறுமணத்தூள் கலவையும் உருண்டையாகித் திரண்டன. தேவி அவற்றைத் திரட்டிச் சிறு பொம்மையாக்கினாள். சற்று முகம் நீண்டு யானைபோல் தோன்றிய பொம்மையை உயிரூட்டித் தன் வளர்ப்பு மகனாக, தனது அந்தரங்க காப்பாளனாகக் கொண்டாள். காப்பாளனாக இருந்த சிறுவன் சிவனென்றும் பாராமல் தடுக்க சிவகோபத்திற்காளாகித் தலையிழந்து யானைத்தலை பொருத்தப் பெற்று கஜானனன் ஆனார். (நா 7)

134. கௌரீதேஜோபூ:- கௌரீயின் தேஜஸ்ஸில் தோன்றியவர். எல்லா தேவர்களின் சக்தியும் உட்புக, சண்டிகையாகி அஸுரர்களை மாய்க்க முற்பட்டபோதும் லலிதையாகி பண்டாஸுரனைமாய்க்க முற்பட்டபோதும், நேரிட்ட இடையூறுகளைக் களையச் சிவனின் முகத்தை உற்றுநோக்கித் தன் தேஜஸை வெளிப்படுத்திய தேவியிடம் தோன்றியவர். துராஸதனைக் கொல்லப் பார்வதி தேவிக்கு உதவிய டுண்டி விநாயகர் (நா 6)

135. ஸ்வர்த்துநீபவ: - கங்கையிடம் தோன்றியவர் - தேவியின் உடலழுக்கைத் திரட்டிக் கங்கையில் விட, கங்கை அதற்கு உயிரூட்டக் கங்கையின் மகனானவர். கங்கையைத் தன்னிடமிருந்து பெருக வைத்தவர். கங்கையில் சரவணப் பொய்கையில் தோன்றிய முருகனானவர் (இனி 136.176 நாமங்களில் கணபதியின் விராட்வடிவம் விளக்கப்படுகிறது.)

யஜ்ஞகாயோ மஹாநாதோ கிரிவர்ஷ்மா ஶுபாநந: ।
ஸர்வாத்மா ஸர்வதேவாத்மா ப்ரம்ஹமூர்த்தா ககுப்ஶ்ருதி:॥ 25.

136. யஜ்ஞகாய: - அச்வமேதம் முதலிய வேள்விகளை உடலாகக் கொண்டவர். பிரும்மா உலகைப் படைக்க முதலில் நடத்திய வேள்வியில் விராட்புருஷனாக வெளிவந்தவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



பரம்பொருளின் ஸங்கல்பமும் மாயையும் கூடி உலகமாக வேண்டிய பொருள் ஓரிடத்தில் குவிந்தது. அதுவே விராட்புருஷன்.

137. மஹாநாத: - பேரொலி வடிவினர் - வேள்வி புரியும் போது சடங்குகளுக்கேற்ப - வஷட் அஸ்து ச்ரௌஷட் என்றவாறு உரக்க முழங்கித் தேவ சக்தியை வேள்விச் சாலைக்கு அழைப்பர். அந்தப் பெருமுழக்கமானவர்.

138. கிரிவர்ஷ்மா- மலைகளை உடலாகக் கொண்டவர். மலை போன்று வடிவமைப்புள்ளதாகவும் வடிவமைப்பில்லாததாயும் தோன்றுகிற உலக உடல் பெற்றவர்.

139. ஶுபாநந: - மங்களங்களுக்கு உயிர் தருபவர். பிரும்மமே மங்களம். அது நிர்குண நிலையிலிருந்து ஸகுண நிலைக்கு வருவதே மங்களம் உயிர்பெற்றது போலாகும். உயிருள்ளதே மங்களம். உயிரே மங்களம். அந்த உயிர்க்கு உயிர் தருபவர்

140. ஸர்வாத்மா- எல்லாமானவர். எல்லாமாகி எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவர். எல்லாம் (ஸர்வம்) என்பது பரம் பொருளே. மற்றதில் குறையுண்டு. குறையுள்ளவை எல்லாமாகிவிடமுடியாது.

141. ஸர்வ தேவாத்மா- எல்லா தேவதையுமானவர் . விராட்டாகியதும் இயக்கம் ஏற்படத் தேவதைகளாகி உட்புகுந்தவர் (நா 4) மனம் புத்தி மற்றும் பொறிகள் தனித்தியங்க ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு தேவராக உட்புகுந்தவர். அவையும் தனித்தியங்க இயலாதபோது, விராட்டிலும் இந்த தேவகணங்களிலும் ஆத்மாவாக உட்புகுந்து இயக்கியவர்.

142. ப்ரம்ஹ மூர்த்தா- பிரம்மாவை தலையாகக் கொண்டவர். பூமிக்குமேல் உள்ள மேல் உலகங்களின் மேலிருப்பது ஸத்யலோகம் எனும் பிரம்மாவின் உலகம். உலகத்தின் தலைப்பாகத்திலுள்ள அதன் தலைவர் பிரும்மா.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அவரே இந்த விராட்புருஷனின் தலை.

143. ககுப்ஸ்ருதி: - திசைகளைக் காதுகளாகக் கொண்டவர். திசை என்பது வெட்டவெளி, வெட்டவெளி ஒலியின் ஆதாரம். ஒலி வெளிப்படுமிடத்தில் விராட்டின் காதுகள் அமையும்.

ப்ரம்ஹாண்டகும்ப்ப: சித்வ்யோமபாலஸ் ஸத்யஶிரோருஹ:
ஜகஜ்ஜன்ம லயோன் மேஷ நிமேஷோ(அ)க்ந்யர்க ஸோம த்ருக் ॥ 26.

144. ப்ரும்ஹாண்ட கும்ப்ப:- பிரும்மாண்டமே மத்தகமானவர். யானையின் மத்தகத்தின் இருபுறத்திலும் இரண்டு முண்டுகள் இரு கப்பரைகள் கவிழ்த்திருப்பதுபோல் காணப்படும். அண்ட வடிவிலுள்ள உலகத்தை இருகூறுக்கி ஒவ்வொரு பாதியையும் தலையில் கவிழ்த்து வைத்தது போன்றுள்ளது மத்தக அமைப்பு.

145. சித்வ்யோமபால:- நெற்றியில் சிதாகாசம் கொண்டவர். பிரும்மாண்டமாகிற ஓட்டினுள் உள்ள வெட்டவெளி சிதாகாசமாகும். சித் என்ற சக்தி உருவமற்றது. அதனால் அதனை ஆகாசமாகக் கூறுவர். விராட் எனும் பரனின் உச்சிப்பொட்டு (பிரும்மரந்திரம்) சித்சக்தி துலங்குமிடமாகிறது.

146. ஸத்யஶிரோருஹ: - ஸத்யலோகத்தை கேசங்களாகக் கொண்டவர். ஸத்யமே சித்தின் ஆவரணமான கேசமாகும்.

147. ஜகஜ்ஜன்மலயோன்மேஷநிமேஷ:- உலகத்தின் தோற்றம், மறைவு, விளக்கம் என்ற மூன்றும் கண் இமைப்பதாகக் கொண்டவர். கண்ணிமைக்கும் நொடிப் பொழுதில் இம்மூன்றும் நடைபெறுகின்றன. தன்னிச்சையாக அல்லது அநிச்சையாகத் தானே நேர்வதாக இவை நிகழும்.

148. அக்ந்யர்க ஸோமத்ருக் - அக்னி சூர்யன் சந்திரன் இவர்களைக் கண்களாக கொண்டவர் (நா. 34)

கிரீந்தரைகரதோ தர்மாதர்மோஷ்ட்டஸ் ஸாமப்ரும் ஹித: ।
க்ரஹர் க்ஷத்ஶநோ வாணீஜிஹ்வோ வாஸவநாஸிக: ॥ 27.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



149. கிரீந்த்ரைகரத: - மேருமலையை ஒற்றைத்தந்தமாகக் கொண்டவர். வெளியே தெரிகிற பெருந்தந்தம் அது.

150. தர்மாதர்மோஷ்ட்ட:- தர்மத்தையும் அதர்மத்தையும் உதடுகளாகக் கொண்டவர். தர்மத்தின் விளைவான புண்ணியமும் அதர்மத்தின் விளைவான பாபமும் இவரது மேல்-கீழ் உதடுகள்.

151. ஸாமப்ரும்ஹித: - ஸாமவேத கானத்தைப் பிளிறலாகக் கொண்டவர்.

152. க்ரஹர்க்ஷதஶந: - கிரஹங்களையும் அசுவதி முதலிய நக்ஷத்திரங்களையும் ஒளிர்கிற பற்களாகக் கொண்டவர்.

153. வாணீஜிஹ்வ: - வாக்குகளை நாக்காகக் கொண்டவர். வேதம் புராணம் தரிசனம் முதலிய பலநூல்கள் அவரது வாக்குகள்.

154. வாஸவ நாஸிக: - இந்திரனை மூக்காகக் கொண்டவர்.

குலாசலாம்ஸ: - ஸோமார்க்க க்கண்டோ ருத்ர ஶிரோதர: ।
நதீநதபுஜ: ஸர்பாங்குலீகஸ் தாரகா நக: ॥ 28.

155. குலாசலாம்ஸ:- குலபர்வதங்களைத் தோளாகக் கொண்டவர். விந்தியம், மஹேந்திரம், மலயம், ஸஹ்யம் சுக்திமான், ருக்ஷம், பாரியாத்ரம் என்ற ஏழுமலைகளும் குலபர்வதங்கள்.

156. ஸோமார்க்க க்கண்ட:- சந்திரனையும் சூர்யனையும் கண்டிகைகளாகக் கொண்டவர். யானையின் கழுத்துக்கு மேல் பருத்து நிற்கிற இரு சதைப் பிண்டங்கள் கண்டிகைகள் எனப்படும். கண்டிகை என்பது யானையின் கழுத்தில் கட்டப்பெறும் இரு பெருமணிகள் என்றும் சொல்வர்.

157. ருத்ர ஶிரோதர:- ருத்திரர்களைக் கழுத்தாகக் கொண்டவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



158. நதீநதபுஜ: - நதிகளையும் நதங்களையும் கைகளாகக் கொண்டவர். கிழக்கே ஓடிக் கடலில் சேர்வது நதீ - கங்கை முதலியவை. மேற்கு நோக்கிச் செல்லும் ஆறு நதம் - சோணம் முதலியவை.

159. ஸர்பாங்குலீக: - ஆதிசேஷன் முதலிய நாகர்களை விரல்களாகக் கொண்டவர்.

160. தாரகாநக: - தாரகைகளை நகமாகக் கொண்டவர், துருவன், ஸப்தரிஷி மண்டலம், அகஸ்த்யர் முதலியவை தாரகைகள்.

ப்ப்ரூமத்த்ய ஸம்ஸ்த்தித கரோ ப்ரம்ஹ வித்யா மதோத்கட: ।
வ்யோமநாபி: ஸ்ரீஹ்ருதயோ மேருப்ருஷ்ட்டோऽர்ணவோதர: ॥ 29.

161. ப்ப்ரூமத்த்ய ஸம்ஸ்த்திதகர:- இருபுருவங்களிடையே உள்ள ஆஜ்ஞாசக்ரத்தைத் துதிக்கையாக கொண்டவர் . இரு புருவங்களிடையே ஜ்ஞானாக்னி உள்ளது.

162. ப்ரம்ஹவித்யா மதோத்கட: - பிரும்மஜ்ஞானமாகிற மதநீரால் மதர்த்திருப்பவர். தோன்றுகிற உலகிற்கப்பாற்பட்ட பரம்பொருளை உணர்கிற பேரறிவு - ஆனந்தவடிவம் கொண்டது. பேராநந்தத்தை உணர்பவன் உலகை மறந்து. பெருங்களிப்புடன் மதம் பிடித்தவனாக உலாவுவான்.

163. வ்யோமநாபி: - வானைத் தொப்புளாகக் கொண்டவர். அது வானம் போல் முடிவு தெரியாதது.

164. ஸ்ரீ ஹ்ருதய: - வேதத்தை இதயமாகக் கொண்டவர் ருக், யஜுஸ், ஸாமம் என்ற வேதங்கள் 'ஸ்ரீ' எனப்படும்.

165. மேருப்ருஷ்ட்ட: மேருமலையை முதுகாகக் கொண்டவர். ஒன்றே பல தோற்றங்களைப் பெறுகிறது. மேரு முன், ஒற்றைத் தந்தமாக, இங்கு முதுகாக. சந்திரசூர்யர்கள் கண்களாக, பற்களாக, கண்டிகைகளாகக் காட்டப்பட்டுள்ளது. விராட் என்னும் விசுவரூபத்தில் எல்லாம் பொருந்தும்).

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



166. அர்ணவோதர: - கடலை வயிற்று நீராக் கொண்டவர். வயிற்றிலுள்ள நீர்க்கோசங்கள், நீர்த்தாரைகள், அவைகள் மூலம் வெளியாகும் நீர் இவை அனைத்துமே கடல்தான்.

குக்ஷிஸ்த்தயக்ஷகந்த்தர்வ ரக்ஷ: கிந்நர மாநுஷ: ।
ப்ருத்வீகடி: ஸ்ருஷ்டிலிங்க: ஶைலோருர் தஸ்ரஜாநுக: ॥ 30.

167, குக்ஷிஸ்த்தயக்ஷ - கந்த்தர்வ - ரக்ஷ: - கிந்நர - மாநுஷ:- யக்ஷர் கந்தர்வர் ராக்ஷஸர் இந்திரர் என்ற தேவ கணங்களுக்கும் மனிதர்களுக்கும் வயிற்றினுள் இடமளித்தவர். இவர்கள் இரைப்பை குடல் முதலிய பல பகுதிகளான வயிற்றில் இடம் பெறுகின்றனர்.

168. ப்ருத்த்வீகடி:- பூமியை இடுப்பாக கொண்டவர். ஆதார சக்தியான மூலாதாரமே எல்லோருக்கும் ஆதாரமாகிறது. அது மிகப்பெரியது (ப்ருத்த்வீ) அது பூமிதத்துவம். உட்கார மிகவும் அவசியமான இடுப்பாக அது பகவானிடம் அமைகிறது.

169. ஸ்ருஷ்டிலிங்க:- படைப்பைக் குறியாகக் கொண்டவர். (படைப்பு) விராட்புருஷனின் விரிவே. உலகம் தனித்தனியாக உருப்பெற்றுத் தனிச்சிறப்புடன் இயங்குவதே அதன் இலட்சியம். தனித்தனி உருப்பெற ஆண் பெண் உறவு போன்ற ஒன்று தேவை. அதற்கு உதவுபவை. ஆண் - பெண் குறிகள். அவையே படைப்பின் அடையாளங்கள்.

170. ஶைலோரு:- மலைகளைத் தொடைகளாகக் கொண்டவர் குலபர்வதங்கள், உடலாக, தோளாக, தொடையாக - வலிவு மிக்க ஆதாரமாக விளங்குகின்றன (நா *138, 155)*

171. தஸ்ர ஜாநுக: - அசுவினி தேவர்களை முழங்காலாகக் கொண்டவர்.

பாதாலஜங்கோ முநிபாத் காலாங்குஷ்ட்டஸ்த்ரயீதநு: ।
ஜ்யோதிர் மண்டலலாங்கூலோ ஹ்ருதயாலாந நிஶ்சல: ॥ 31

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



172. பாதாலஜங்க்க: - பாதாலத்தைக் கணைக்காலாகக் கொண்டவர். பூமிக்குக் கீழே உள்ள அதலம் விதலம் ஸுதலம் தலாதலம், ரஸாதலம் மஹாதலம், பாதாலம் என்ற ஏழு உலகங்களுக்கும் பாதாலம் என்ற பொதுப்பெயர்.

173. முநிபாத்- முனிவர்களைப் பாதமாகக் கொண்டவர். திருவடிகளைச் சூழ்ந்தமர்ந்து தவமியற்றுகிற முனிவர்களே இவரது திருவடியாகத் தென்படுகின்றனர்.

174. காலாங்குஷ்ட்ட:- காலனைக் கட்டைவிரலாகக் கொண்டவர்.

175. த்ரயீதநு: - மூன்று வேதங்களை உருவமைப்பாகக் கொண்டவர். இதுவரை கூறப்பெறாத உடலவயவங்களில் வேதங்கள் தென்படுவதால் மற்ற அவயவங்களும் வேதங்களாகத் தானிருக்கும்.

176. ஜ்யோதிர் மண்டல லாங்கூல:- வானிலுள்ள ஒளி மண்டலங்களை வாலாகக் கொண்டவர். முழு யானை உருக்கொண்ட கணபதிக்கு சிம்சுமாரம் என்ற ஒளிமண்டலம் வாலாகின்றது. பெருமுதலை வடிவிலுள்ள சிம்சுமாரம், நக்ஷத்ரமண்டலத்திற்கும் அப்பால் ஸப்தரிஷி மண்டலத்தை ஒட்டிக் காணப்படும். (இனி அடியவர்களிடம் அன்பு பூண்ட கணபதியின் விளக்கம் நா *177. 180*)

177. ஹ்ருதயாலாநநிச்ஶ்ல:- உள்ளமாகிய கட்டுத்தரியில் அசையாமல் நிற்பவர். அடியவர்களின் உள்ளத்தில் அவர்களது அன்பாகிற கட்டுத்தரியில் கட்டுப்படுபவர்.

ஹ்ருத் பத்மகர்ணிகாஶாலி வியத்கேலி ஸரோவர: ।
ஸத்ப்பக்தத்த்யான நிகட: பூஜாவாரீநிவாரித: ॥ 32.

178. ஹ்ருத்பத்மகர்ணிகா ஶாலிவியத் கேலிஸரோவர:- இதயத்தாமரையின் மொக்கை விளையாடுகிற ஆகாச கங்கையாக்கியவர். இதயமாகிய தாமரையின் நடுவே ஆத்மாவை உணர்கிற தஹராகாசமெனும் பர வெளிதான் தாமரைமொக்கு. அந்தப் பரவெளியை ஆகாசகங்கையாக்கி அதில் அமிழ்ந்து குதித்து நீந்தி விளையாடுபவர்.


https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



179. ஸத்ப்பக்தத்த்யானநிகட:- நல்லடியார்களின் தியானத்தைத் தளையாகக் கொண்டவர். எங்கும் நிறைந்து எதிலுமடங்காத பரம்பொருளானவர், தியானம் செய்பவனின் உள்ளத்திலுள்ள சிறுவெளியில் சிறைப்பட்டாற்போன்று கட்டுண்டு அடங்கியிருப்பதுடன் தன் இச்சிறுமையைக் கண்டு ஆனந்திப்பவர்.

180. பூஜாவாரீநிவாரித: - வழிபாடாகிற தரியில் கட்டுண்டவர். அடியவர் வழிபடும்போது வழிபடுகிற மூர்த்தியாக அடங்கி, உபசாரம் முடியும் வரை தரியில் கட்டுண்டவர் போல் தடைபட்டவராகிறுர். தானே பக்தனைத் தூண்டி தன்னருளால் வழிபடச்செய்து தானே அதற்குக் கட்டுப்படுகிறுர். ''அவன் அருளால் அவன்தாள் வணங்கி''

ப்ரதாபீ கஶ்யபஸூதோ கணபோ விஷ்டபீ பலீ।

யஶஸ்வீ தார்மிகஸ்ஸ்வோஜா: ப்ரதம: ப்ரதமேஶ்வர: ॥ 33

181. ப்ரதாபீ- சுட்டெரிப்பவர். எதிரிகளைச் சுட்டெரிக்கிற வீர்ய வெம்மையுள்ளவர்.

182. கஶ்யபஸூத: - கசியபரின் புதல்வர். அவரது தவத்தின் பயனாக மகனாகப் பிறந்தவர்.

183. கணப: - வேள்வி புரிபவரின் கணத்தைக் காப்பவர். வேள்வியை நான்கு கணங்கள் நிறைவுறச் செய்கின்றனர். 1. அத்த்வர்யுகணம் - அத்த்வர்யு, ப்ரதிப்ரஸ்தோதா, நேஷ்டா, உந்நேதா என. 2. ஹோத்ரு கணம் - ஹோதா, மைத்ராவருணர், அச்ச்சாவாகர், க்ராவஸ்துத் என 3. ப்ரம்ஹகணம் - ப்ரம்ஹா, ப்ராம்ஹணாச்சம்ஸீ. ஆக்நீத்தரர், போதா என. 4. உத்காத்ருகணம் - உத்காதா, ப்ரஸ்தோதா, ப்ரதிஹர்தா, ஸுப்ரம் ஹண்யர் என, இவர்களில் அத்தவர்யு, ஹோதா, ப்ரம்ஹா, உத்காதா என்பவர் முக்கியர்கள், மற்றவர் அந்தந்த கணத்தின் துணைவர்கள். இக்கணங்களைக் காப்பவர்.

184. விஷ்டபீ - ஆதாரமாயிருப்பவர் - உலகின் ஆதாரம்.

185. பலீ - வலிமை மிக்கவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



186. யஶஸ்வீ - புகழ்மிக்கவர்

187. தார்மிக: - அறவழி செல்பவர் - அறம் வளர்ப்பவர்.

188. ஸ்வோஜா: - நல்ல உள்வலிவு கொண்டவர் - உடல் தாதுக்களின் மூலச்சத்தான ஓஜஸ் மிக்கவர்.

189. ப்ரதம: - முதலாமவர் - வழிபடத்தக்கவர்களில் மூத்தவரும் முதல்வருமானவர்.

190. ப்ரதமேஶ்வர: - மூத்த முதற்கடவுளர்க்கும் மூத்தவர், முதல்வர், முன்னவரானவர். பிரம்மா விஷ்ணு சிவன் என்ற மும்மூர்த்திகளுக்கும் ஈசன் (இனிவரும் *191-206* நாமங்களில் தன் லோகத்தில் பகவான் தருகிற திருக்காட்சியும் பகவானின் இருப்பிடமும்)

சிந்தாமணித்வீபபதி: கல்பத்ரும வநாலய: ।
ரத்ன மண்டபமத்த்யஸ்த்தோ ரத்னஸிம்ஹாஸனாஶ்ரய:॥ 34.

191. சிந்தாமணித்வீபபதி: - சிந்தாமணித்தீவின் அரசர். நினைத்ததை நினைத்தவுடன் நினைத்தவாறே நினைத்தவருக்கு அளிப்பது சிந்தாமணி எனும் தெய்வசக்திமிக்க இரத்னம். அதனைக் கொண்டு அமைந்த பெருந்தீவு சிந்தாமணித்துவீபம். ஜம்பூ முதலிய ஏழு தீவுகளுக்கும் அவற்றைச் சுற்றிப் பரந்துள்ள ஏழு கடல்களுக்கும் அப்பால் அம்ருதக்கடல் சூழ்ந்ததீவு இது.

192. கல்பத்ருமவநாலய:- கற்பகச் சோலையில் உறைவிடமுள்ளவர். சிந்தாமணி போன்றே விரும்பியதைத் தருகிற கற்பகத் தருக்கள் அடர்ந்த சோலையில் வசிப்பவர். ஒரு சிந்தாமணி ஒரு கற்பகமரம் இவற்றிடம் கோரிப் பெறுபவையை அனுபவிக்கப் பல்லாயிரம் வாழ்நாட்கள் தேவை. தீவும் சோலையும் நம் தியானத்துட்பட, அவற்றிடம் கோரி எதனைப் பெறுவது என்ற திகைப்பு உண்டாகலாம்.

193. ரத்னமண்டப மத்த்யஸ்த்த: - ரத்னமண்டபத்தின் நடுவே அமர்ந்துள்ளவர்.

194. ரத்னஸிம்ஹாஸனாஶ்ரய: - ரத்தினங்களாலான அரியணையை இருப்பிடமாகக் கொண்டவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



தீவ்ராஶிரோத்த்ருதபதோ ஜ்வாலிநீமௌலிலாலித: ।
நந்தாநந்திதபீடஶ்ரீ: போகதா பூஷிதாஸந: ॥ 35.
ஸகாமதாயினீபீட: ஸ்ப்புரதுக்ராஸநா ஶ்ரய: ।
தேஜோவதீஶிரோ ரத்னம் ஸத்யாநித்யாவதம் ஸித: ॥36.
ஸவிக்க்ந நாஶிநீபீட: ஸர்வஶக்த்யம்புஜாஶ்ரய: ।
லிபிபத்மாஸநாதாரோ வந்ஹி தாமத்ரயாஶ்ரய: ॥ 37.

195. தீவ்ராஶிரோத்ருதபத: - தீவ்ராசக்தியால் சிரம்மேல் தாங்கப்பட்ட திருவடியுள்ளவர். பகவான் அமர்ந்துள்ள இடம் நடுவில் பிந்து, அதனைச்சுற்றி திரிகோணம், அதன் வெளியில் ஆறு கோணங்கள், அதன் வெளியே எட்டிதழ் தாமரை, சுற்றிப் பிராகாரம். என்ற ஐந்து அமைப்புகள் கொண்டது. தாமரையின் மொக்கு ஸ்தானத்தில் அமைந்துள்ள பிந்துவைச் சுற்றித் தீவ்ரா, ஜ்வாலினீ, நந்தா, போகதா, காமதாயினீ, உக்ரா, தேஜோவதீ, ஸத்யா என்று எட்டு பீடசக்திகள் இதழ்களிலும், மொக்கில் விக்க்நநாசினி என்ற ஒன்பதாவது பீட சக்தியும் அமர்ந்து திருவடிகளைத் தாங்குகின்றனர் என்பதை இந்நாமத்திலிருந்து 206வது நாமம் வரை காணலாம்.

196. ஜ்வாலினீ மௌலிலாலித: - ஜ்வாலினியால் தலையால் லாலனை செய்யப்பெற்றவர். ஜ்வாலினீ என்ற பீட சக்தியால் தலைவணங்கி அரவணைக்கப் பெற்றவர்.

197. நந்தாநந்தித பீடஶ்ரீ: - நந்தா என்ற பீடசக்தியால் மகிழ்ந்து தாங்கப்பெற்ற எழில்மிக்க பீடமுள்ளவர்.

198. போகதாபூஷிதாஸந:- போகதா சக்தியால் அலங்கரிக்கப்பெற்ற ஆஸனம் உள்ளவர்.

199. ஸகாமதாயினீ பீட: - காமதாயினீ பீடசக்தியுடன் கூடிய ஆஸனமுள்ளவர்.

200. ஸ்ப்புரதுக்ராஸநாஶ்ரய: - மின்னல் போன்று ஒளித்துடிப்பு கொண்ட உக்ரா பீடசக்தியால் தாங்கப்பெற்ற ஆசனத்திலமர்ந்தவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



201. தேஜோவதீ சிரோரத்னம் - தேஜோவதியின் சிரசில் ரத்னமாக ஒளிர்பவர்.

202. ஸத்யாநித்யாவதம்ஸித: - ஸத்யா என்ற சக்தியால் மலர் மாலைபோல் சிரசில் சூடப்பெற்றவர்.

203. ஸவிக்க்ந நாஶிநீபீட: - விக்னநாசினியுடன் கூடிய பீடத்திலுள்ளவர்.

204. ஸர்வஶக்த்யம்புஜாஶ்ரய:- எல்லா பீட சக்திதேவியரும் சூழ எட்டிதழ் தாமரையில் அமர்ந்தவர்.

205. லிபிபத்மாஸநாதார: - உயிர் மெய்யெழுத்துக்களாலான பத்மாஸனத்தில் அமர்ந்தவர். பீடம் எட்டிதழ் கொண்ட தாமரைவடிவில் உள்ளது. எட்டிதழ்களின் வெளிப்புறத்தில் உயிர் எழுத்துக்கள் பதினாறும் இரண்டிரண்டாக இடம்பெறுகின்றன. இதழ்களின் உட்புறத்தில் கவர்கம் சவர்கம், டவர்கம், தவர்கம், பவர்கம், யரலவ, ஶஷஸஹ, ளக்ஷ, என்ற எழுத்துக்கள் வரிசையாக இடம்பெறுகின்றன.

206.. வந்ஹிதாமத்ரயாஶ்ரய: - தாமரை மொட்டின் மேல் அக்னிமண்டலம், சூர்ய மண்டலம். சந்திர மண்டலம் என்ற மூன்றையும் விரிப்பாகக் கொண்டவர்.

பகவானின் வடிவழகும் அணியழகும் 207-236 நாமங்களால் விளக்கப்பெறுகின்றன.

உந்நதப்ரபதோ கூடகுல்ப்ப: ஸம்வ்ருத்தபார்ஷ்ணிக:
பீநஜங்க்க: ஶ்லிஷ்டஜாநு: ஸ்த்தூலோரு: ப்ரோந்நமத்கடி: 38.

207. உந்நதப்ரபத: - மேடிட்ட புறங்காலுள்ளவர். ஆமை முதுகை இதற்கு இணையாகக் கூறுவர். (கூர்மப்ருஷ்ட்ட ஜயிஷ்ணு ப்ரபதாந்விதா - லலிதா ஸஹஸ்ர)

208. கூடகுல்ப்ப: - முண்டுகள் வெளியே தெரியாதபடி தசைப்பிடிப்பால் அழகுற மறைந்த கணுக்கால்கள் உள்ளவர். (கூடகுல்ப்பா - ல.ஸ)

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



209. ஸம்வ்ருத்தபார்ஷ்ணிக: - உருண்டு திரண்ட குதிகால்கள் உள்ளவர். ஸம்வ்ருத என்றும் பாடம் உண்டு

210. பீநஜங்க்க: - தசையால் பருத்த கெண்டைக் கால்களுள்ளவர்.

211. ஶ்லிஷ்டஜாநு: - அழகுற நன்கு பொருந்திய முழங்கால்களுள்ளவர்

212. ஸ்த்தூலோரு: - தடித்த தொடைகள் உள்ளவர்.

213. ப்ரோந்நமத்கடி: - எடுப்பாக நிமிர்ந்து சரிந்த இடையுள்ளவர்.

நிம்நநாபி: ஸ்த்தூலகுக்ஷி: பீநவக்ஷா ப்ருஹத்ப்புஜ: ।
பீநஸ்கந்த்த: கம்புகண்ட்டோ லம்போஷ்ட்டோ லம்பநாஸிக: ॥

214. நிம்நநாபி: - உள்ளாழ்ந்த தொப்புள் உள்ளவர்

215. ஸ்த்தூலகுக்ஷி: - பெருத்த வயிறுள்ளவர்

216. பீநவக்ஷா: - பருத்தகன்ற மார்புள்ளவர்

217. ப்ருஹத்ப்புஜ: - நீண்டு தடித்த கைகளுள்ளவர்

218. பீநஸ்கந்த்த: - தசைதடித்த தோளுள்ளவர்.

219. கம்புகண்ட்ட: - சங்கு போன்று வரைகளுள்ள கழுத்துள்ளவர்.

220. லம்போஷ்ட்ட:- தொங்குகிற கீழுதடுள்ளவர்

221. லம்பநாஸிக: - தொங்குகிற மூக்குள்ளவர். மூக்கும் மேலுதடும் துதிக்கையானது. துதிக்கையின் நுனியில் உள்ள துவாரம் மூச்சுக்காற்று உள்ளே வெளியே செல்கிற வழியானது.

ப்பக்நவாமரதஸ் துங்கஸவ்யதந்தோ மஹாஹநு: ।
ஹ்ரஸ்வநேத்ரத்ரய ஶ் ஶூர்பகர்ணோ நிபிடமஸ்தக: ॥ 40

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



222. ப்பக்நவாமரத: - ஒடிந்த இடப்பக்கத்து தந்தமுள்ளவர். மஹாபாரதம் எழுதவும் கஜாஸுரனை வதைக்கவும் அந்த தந்தம் பகவானாலேயே ஒடிக்கப்பட்டது. ஸ்ரீகணேசருக்கும் அர்த்தநாரீசுவர வடிவம் உண்டு. வலப்பக்கம் ஆண், இடப்பக்கம் பெண், பெண் யானைக்கு தந்தமில்லை. ஆணாகப் பார்க்கத் தந்தம் ஒடிந்தது. பெண் பாதியாகப் பார்க்கத் தந்தமில்லை.

223. துங்கஸவ்யதந்த:- நன்குயர்ந்த வலத்தந்த- முள்ளவர். வலது தந்தம் ஒடிந்து இடது தந்தம் பூர்ணமாக உள்ள தோற்றமும் உண்டு. எழுத ஒடிக்கும்போது வலக்கைக்கு வலத்தந்தமே கிடைத்ததென்பர்.

224. மஹாஹநு:- பெருந்தாவடை உள்ளவர்

225. ஹ்ரஸ்வநேத்ரத்ரய: - குறுகிய முக்கண்கள் உள்ளவர். யானையின் பெரும் வடிவிற்கேற்பாக இல்லாமல் கண்கள் குறுகியிருப்பது இயல்பு.

226. ஶூர்பகர்ண: - முறம் போன்ற விரிந்த செவிகள் உள்ளவர். விரிந்து எப்போதும் ஆடிக்கொண்டிருக்கின்ற காதுகள் பக்தனின் வேண்டுகோளைச் செவிமடுக்கவும், பக்தனுக்கு இனிய தல்லாததை அப்பாற்படுத்தவும் உதவும்.

227. - நிபிடமஸ்தக: - இறுக்கம் மிக்க மத்தகமுள்ளவர்.

ஸ்தபகாகாரகும்ப்பாக்ரோ ரத்நமௌலிர் நிரங்குஶ: ।
ஸர்பஹாரகடீ ஸூத்ர: ஸர்பயஜ்ஞோப வீதவான். ॥ 41.

228. ஸ்தபகாகார கும்ப்பாக்ர: - மலர்க்கொத்துபோல் நடுவில் மேடிட்டு ஓரத்தில் சரிவு கொண்ட இரு மத்தகமேடுள்ளவர்.

229. ரத்நமௌலி: - ரத்தினம் பதித்த கிரீடமுள்ளவர்.

230. நிரங்குச: - (யானையாயிருந்தும்) தொரட்டிபடாதவர் தன்னிச்சையாக நடப்பவர். தடையுறுதவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



231. ஸர்பஹாரகடீஸூத்ர:- பாம்பாலான மாலையும் அரைஞாணும் கொண்டவர்.

232. ஸர்பயஜ்ஞோபவீதவான்:- பாம்பாலான பூணூல் அணிந்தவர். நாகாபரணப் பிள்ளையார் என்ற தோற்றத்திற்கு இந்த இரு நாமங்களும் விளக்கம் தரும். உயிரற்றவை அணிகளாக இருப்பது இயல்பு. இறைவனிடம் உயிருள்ள சீற்றம் மிக்க பாம்புகளே அணியாகி அசைவற்றுள்ளன.

ஸர்பகோடீர கடகஸ் ஸர்பக்ரைவேயகாங்கத:।
ஸர்பகக்ஷோதராபந்தஸ் ஸர்பராஜோத் தரீயக:॥ 42.

233. ஸர்பகோடீர கடக: - பாம்பையே கிரீடமாகவும் கங்கணமாகவும் கொண்டவர்.

234. ஸர்பக்ரைவேயகாங்கத: - பாம்புகளைக் கழுத் தணியாகவும் தோள்வளைகளாயும் கொண்டவர்.

235. ஸர்ப கக்ஷோதராபந்த: - பாம்புகளை இடுப்புக்கச்சா கவும் வயிற்றுக்கச்சாகவும் அணிந்தவர்.

236. ஸர்பராஜோத்தரீயக: - பாம்பரசனான வாஸுகியையே மேலாடையாகக் கொண்டவர்.

பகவானது தியான வடிவங்களில் ஆடை அணி மேனி நிறம் என அனைத்தும் சிவந்தோ வெளுத்தோ கருத்தோ உள்ள சில உண்டு. அவைகளைக் குறிப்பிட்ட பயனைக் கருதி வழிபடுவர். ஸம்பத்து பெற எல்லாவற்றிலும் சிவந்தவரையும் ஞானம் பெற எல்லாவற்றிலும் வெளுத்தவரையும் வழிபடுவது நல்லதென்பர். (கணபதியின் தியான வடிவம் பற்றிய ஸ்தோத்ரம் பார்க்க) அந்தத் தோற்றங்களை 237 - 247 நாமங்கள் விளக்குகின்றனர்.

ரக்தோ ரக்தாம்பரதரோ ரக்தமால்ய விபூஷண:।
ரக்தேக்ஷணோ ரக்தகரோ ரக்ததால்வோஷ்ட்ட பல்லவ:॥ 43.

237. ரக்த: - சிவந்த மேனியுள்ளவர்

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



238. ரக்தாம்பரதர: - செவ்வாடையுடுத்தியவர்

239. ரக்தமால்ய விபூஷண: - சிவந்த மலர்களாலான மாலைகள், சிவந்த ரத்னங்கள் பதித்த ஆபரணங்கள் அணிந்தவர்.

240. ரக்தேக்ஷண:- செவ்வரி நிறைந்த கண்கள் உள்ளவர்.

241. ரக்தகர: - சிவந்த கைகள் உள்ளவர்.

242. ரக்ததால்வோஷ்ட்ட பல்லவ: - இளந்துளிர் போல் சிவந்த தாவடைகளும் உதடுகளும் உள்ளவர்

ஶ்வேதஶ் ஶ்வேதாம்பரதரஶ் ஶ்வேதமால்ய விபூஷண: ।
ஶ்வேதா தபத்ர ருசிரஶ் ஶ்வேத சாமர வீஜித: ॥ 44.

243. ஶ்வேத: - வெண்ணிற மேனியுள்ளவர்.

244. ஶ்வேதாம்பரதர: - வெண்ணிற ஆடை உடுத்தியவர்.

245. ஶ்வேதமால்ய விபூஷண: - வெண்ணிறப் பூக்களாலான மாலையும் வெண்ணிற ரத்தின அணிகளும் பூண்டவர்.

246. ஶ்வேதாதபத்ரருசிர: - வெண்குடையின் கீழ் அழகுற அமர்ந்தவர்.

247. ஶ்வேதசாமரவீஜித:- வெண் சாமரம் வீசப்பெற்றவர். இவருக்கு இதுதான் விருப்பிற்குக் குரியது என்றில்லை. எல்லாமும் இவருக்கு இனியதே. எல்லாமும் இவரிடம் அழகுடன் பொருந்தும் என 248 - 252 நாமங்கள் விளக்குகின்றன.

ஸர்வாவயவஸம்பூர்ண ஸர்வலக்ஷணலக்ஷித: ।
ஸர்வாபரண ஶோபாட்ட்யஸ் ஸர்வஶோபாஸமந்வித: ॥ 45

248. ஸர்வாவயவஸம்பூர்ண ஸர்வலக்ஷண லக்ஷித: - உடலமைப்பை வனப்புடன் காட்டுகிற ஸாமுத்ரிக சாஸ்திரம் கூறும் அனைத்து லக்ஷணங்கள் பொருந்தியவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



249. ஸர்வாபரண ஶோபாட்ட்ய: - எல்லா ஆபரணங்களும் அணிந்து எழில் நிரம்பித் திகழ்பவர்.

250. ஸர்வஶோபாஸமந்வித: - மற்ற எல்லா இயற்கை அழகும் ஒருங்கே பொருந்தியவர்.

**ஸர்வமங்கள மாங்கள்யஸ் ஸர்வகாரண காரணம் ।**

**ஸர்வதைககரஶ் ஶார்ங்கீ பீஜாபூரீ கதாதர: ॥ 46.**

251. ஸர்வமங்கள மாங்கள்ய: - அனைத்து மங்களப் பொருள்களின் மங்களத் தன்மையானவர். அவற்றை மங்களத்தன்மை பெறச் செய்தவர். அனைவருக்கும் மங்களம் நல்கி நல்வாழ்வு பெறச் செய்பவர்

252. ஸர்வகாரண காரணம். அனைத்தின் காரணமான மூலப்ரகிருதிக்கும் காரணமானவர்.

மஹா(வல்லபா)கணபதி முதலிய பல தியான வடிவங்களின் அடையாளங்கள் 253-305 வரை, ஆயுதம், அணிகள், தேவிகள், ஆவரண தேவதைகள் முதலியவற்றுடன் விளக்கப்படுகின்றன. பத்து கைகளிலும் துதிக்கையிலும் ஆயுதங்கள் முதலியவற்றை ஏந்திய மஹாகணபதியின் வடிவம் முதலில் இடம் பெறுகிறது.

253. ஸர்வதைககர: - அனைவருக்கும் அனைத்தையும் விரும்பியவாறு வழங்குகிற ரத்தினகலசம் ஏந்திய துதிக்கையுள்ளவர்.

254. சார்ங்கீ - சார்ங்கம் என்ற வில்லேந்தியவர். சார்ங்கம் கொண்ட விஷ்ணுவாயிருப்பவர்

ஶ்ரீமஹாகணபதி தன்னிடமிருந்து லக்ஷ்மீ - விஷ்ணு, கௌரீ - சிவன், ரதி - மன்மதன், பூதேவி - வராஹர், மஹாலக்ஷ்மி - மஹாகணபதி என்ற ஐந்து தம்பதியினரை வெளிப்படுத்தினார். தன் பத்து கைகளில் பத்து ஆயுதம் முதலானவற்றை ஏந்தி, அவற்றில் ஒவ்வொன்றை அந்த பத்து

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



தேவ தேவியருக்கும் அருட்சக்தியாகத் தந்தார். லக்ஷ்மீ - தாமரை, விஷ்ணு - சக்கிரம், கௌரீ - பாசம், சிவன் - சூலம், ரதி - நீலோத்பலம், மன்மதன் - கரும்பு. வில், பூமி - நெற்கதிர், வராஹர் - கதை, மஹாலக்ஷ்மீ - மாதுளை, மஹாகணபதி - தந்தம் இந்த பத்தின் ஸமஷ்டிசக்தியாகிய ரத்தினகலசத்தைத் தனது துதிக்கையில் தாங்கினார் என்று வல்லபோப நிஷத்து கூறும். ஸர்வதைககர: என்று கலசத்தை விளக்கி மற்ற பத்தையும் இனிவரும் நாமங்கள் காட்டுகின்றன.

255. பீஜாபூரீ - மாதுளம் பழம் உள்ளவர்

256. கதாதர: - கதை ஏந்தியவர்

இக்ஷுசாபதர: - ஶூலீ சக்ரபாணி: ஸரோஜப்ப்ருத் ।
பாஶீ த்த்ருதோத்பலஶ் ஶாலி மஞ்ஜரீப்பருத் ஸ்வதந்தப்ப்ருத். 47.

257. இக்ஷுசாபதர: - கரும்பு வில்லேந்தியவர்

258. ஶூலீ - சூலம் உள்ளவர்

259. சக்ரபாணி: - சக்ரத்தைக் கையில் கொண்டவர்.

260. ஸரோஜப்பருத் - தாமரையைக் கொண்டிருப்பவர். ஸரோஜம் - சங்கு எனக் கொள்வதுண்டு.

261. - பாஶீ - பாசாயுதமுள்ளவர்

262. த்த்ருதோத்பல: - நீலோற்பலமேந்தியவர்

263. ஶாலிமஞ்ஜரீப்ப்ருத் - நெற்கதிர்க் கொத்தைத் தாங்குபவர்.

264. ஸ்வதந்தப்ப்ருத் - தன் தந்தத்தை ஏந்தியவர். இடதில் ஐந்து கைகளில் மேலிருந்து கீழ்வரை, மாதுளை, வில், தாமரை (சங்கு) பாசம், நெற்கதிர்க்கொத்து என்ற ஐந்தையும், வலதில் ஐந்து கைகளில் மேலிருந்து கீழ்வரை, கதை, சூலம், சக்கிரம், நீலோத்பலம், தந்தம் என்ற ஐந்தையும் ஏந்தி நிற்கிறார் என ராமேச்வரர் பரசுராமகல்ப ஸூத்ரத்திரன் உரையில் விளக்கியுள்ளார்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



கல்பவல்லீதரோ விஶ்வாபயதைககரோ வஶீ ।
அக்ஷமாலாதரோ ஜ்ஞானமுத்ராவான் முத்கராயுத: ॥ 48.

265. கல்பவல்லீதர: - கற்பகக் கொடி ஏந்தியவர். க்ஷிப்ர கணபதி கற்பகக் கொடியேந்தியவர்.

266. விஶ்வாபயதைககர: - உலகிற்குப் பயமின்மையைத் தருகிற கையுள்ளவர். வக்ரதுண்டர், ஹேரம்பர் வடிவில் அபயகரம் உண்டு.

267. வஶீ- சராசரத்தைத் தன் வசத்தில் கொண்டவர். தன்னைத் தன் வசத்தில் வைத்திருப்பவர், பிறர் விருப்பத்திற்கு வசமாகாதவர்.

268. அக்ஷமாலாதர: - அ முதல் க்ஷ வரை உள்ள 51 எழுத்துக்களை நினைவூட்டுகிற மாலையைக் கையில் கொண்டவர். த்விஜகணபதி, உச்சிஷ்டகணபதி, ஹேரம்ப கணபதி, இவர்கள் அக்ஷமாலை ஏந்தியவர்கள்.

269. ஜ்ஞானமுத்ராவான் - வலக்கையின் கட்டை விரலையும் ஆட்காட்டி விரலையும் இணைத்த ஞான முத்திரை கொண்டவர். கட்டை விரல் ஆத்மா. மற்ற விரல்கள் உலகம். அவற்றில் தனிமை எனும் அஹங்காரம் மிக்கது ஆட்காட்டி விரல். ஆட்காட்டி விரல் (அஹங்காம்) கட்டை விரலுடன் (ஆத்மாவுடன) இணைந்து அடங்கினால் மற்றவை தானே செயலிழந்து விடும். உள்ளுணர்வு வலிவு பெற்றதும் புற உணர்வுகள் மங்கி விடும் என்பதே ஞானமுத்ரையின் விளக்கம்,.

270. முத்கராயுத:- உலக்கை அல்லது சம்மட்டியை ஆயுதமாகக் கொண்டவர். பக்தர்கள் மனமடங்கி ஜபம் செய்கிற மந்த்ரங்களை ஆயுதமாகக் கொண்டவர்.

பூர்ணபாத்ரீ கம்புதரோ வித்த்ருதாலிஸமுத்கக: ।
மாதுலங்கதரஶ் சூதகலிகாப்ப்ருத் குடாரவான் ॥ 49.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



271. பூர்ண பாத்ரீ - நிறைந்த பாத்திரம் ஏந்தியவர். வேள்விகளில் 128 படி நெல் அல்லது யவை நிரப்பிய கலசம், அலங்காரமாக வைக்கப்பட்டிருக்கும். அது பூர்ண பாத்திரம். அமுதம் நிரம்பியதும் பெரியோர்களை எதிர்கொள்வதற்கென அக்ஷதை அல்லது நீர் நிரப்பி மாவிலைக் கொத்து முதலியவற்றால் அலங்கரித்ததும் பூர்ணபாத்திரம். தேன் நிரம்பிய பாத்திரமும் இவ்வாறே. இந்த பூர்ண பாத்திரத்துடன் எதிர் கொள்ளப்படுபவர். ரத்தினம் அமுதம் தேன் பாயஸம் முதலியவை நிரம்பிய பாத்திரத்தைக் கையிலேந்தியவர். பக்த கணபதி, த்விஜகணபதி, க்ஷிப்ரகணபதி, மஹாகணபதி, முதலிய தியான வடிவங்களில் பூர்ண பாத்திரமுண்டு.

272 - கம்பு தர: - சங்கு ஏந்தியவர். விக்நராஜகண பதி, மஹாகணபதி, புவநேசகணபதி, இவர்கள் சங்கு ஏந்தியவர்கள்.

273. வித்ருதாலி ஸமுத்கக: - கன்னத்தில் மொய்த்திட்ட தேனீக் கூட்டத்தைச் சுமப்பவர்.

274. மாதுலிங்கதர: - மாதுளங்கனி ஏந்தியவர். மஹாகணபதி, உச்சிஷ்ட கணபதி, ஹேரம்பர், லக்ஷ்மீ கணபதி இவர்கள் மாதுளங்கனி ஏந்தியவர்கள்.

275. சூதகலிகாப்ப்ருத்: - மாம்பழக் கொத்தைத் தரிப்பவர். ஸித்திகணபதியில் இது உண்டு. இடும்பாவனத்தில் இந்த கணேசர் உள்ளார்.

276. குடாரவான் - கோடரி ஏந்தியவர். துறவியின் தண்டத்தில் கஷாயத் துணியால் கோடரி முடிச்சு ப்போடுவர். இந்த பரசுமுத்திரை ஏந்தியவர். பரசு - எனும் கோடரி அறியாமையை பிளக்கிற சுத்த சைதன்ய உணர்வாகும். அதன் ஸாக்ஷியாக விளங்குபவர், வீர கணபதி, ஸித்தி கணபதி, நிருத்தகணபதி முதலிய தியான வடிவங்கள் கோடாரி ஏந்தியிருக்கிறன.

புஷ்கரஸ்த்த ஸ்வணகடீ பூர்ண ரத்நாபிவர்ஷக: ।
பாரதீ ஸுந்தரீ நாதோ விநாயகரதிபரிய: ॥ 50.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



277. புஷ்கரஸ்த்த ஸ்வர்ணகட பூர்ணரத்நாபிவர்ஷக:- துதிக்கை நுனியில் அமைந்த தங்கக் குடத்தில் நிறைந்த ரத்தினங்களைத் தொடர்ந்து பொழிபவர்.

278. பாரதீ - ஸுந்தரீ நாத- ஸரஸ்வதீ, லக்ஷ்மீ, பார்வதி இவர்கள் இவர்களின் நாதர்களான பிரும்மா சிவன் விஷ்ணு என்ற வடிவில் இருப்பவர்.

279. விநாயகரதிப்ரிய: - விநாயகர்களுடன் கேளிக்கை விரும்புபவர் - இடையூறு விளைவித்தும் இடையூறுகளைக்-களைந்தும் உலகைக் கட்டுப்படுத்துகிற விநாயகர்கள் ஸ்ரீகணேசரின் நண்பர்கள். விநாயகர், விரூபாக்ஷர், க்ரூர கர்மா, அபராஜிதர், கஜக்ரீவர், சண்டவேகர், பராக்ரமர் என்ற எண்மர் மூன்றாம் ஆவரணத்தில் உள்ளனர் (விநாயகரஹஸ்யம்) வி என்ற பறவைகளின் நாயகரான கருடன், மயில் இவர்களுடன் விளையாட விரும்புவர்.

மஹாலக்ஷ்மீப்ரியதமஸ் ஸித்த்திலக்ஷ்மீ மனோரம:।
ரமா ரமேஶபூர்வாங்கோ தக்ஷிணோமா மஹேஶ்வர: ॥ 51.

280. மஹாலக்ஷ்மீப்ரியதம: - மஹாலக்ஷ்மியிடம் மிக்க அன்புள்ளவர். மஹாகணபதி என்ற தோற்றத்தில் அவரது சக்தி மஹாலக்ஷ்மியானவள், கமலா, வல்லபா, லக்ஷ்மீ, சக்தி என்ற பல வடிவங்கள் உள்ளவள். ஸித்தி புத்தி என்ற இரு தேவியரில் ஸித்திதேவியை மஹாலக்ஷ்மி என்பர்

281. ஸித்த்தலக்ஷ்மீ மநோரம: - ஸித்தலக்ஷ்மீயின் மனத்தை மகிழ்விப்பவர். ஸித்தி என்றும் இவளைக் குறிப்பிடுவர்.

282. ரமாரமேஶபூர்வாங்க: - லக்ஷ்மியும் நாராயணனும் தன் முன்னிருக்கச் செய்பவர். ஸ்வாநந்தபுவன வடிவில் உள்ள யந்திரத்தின் முதல் ஆவரணத்தில் மஹாகணபதிக்குக் கிழக்கில் இவ்விருவரும் வில்வமரத்தின் அடியில் இருப்பர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



283. தக்ஷிணோமாமஹேஶ்வர: - தன் வலப்புறத்தில் உமையையும் மகேசனையும் கொண்டவர். யந்திரத்தின் முதல் ஆவரணத்தில் ஆலமரத்தினடியில் இருவரும் இருப்பர்.

மஹீவராஹவாமாங்கோ ரதி கந்தர்பபஶ்சிம: ।
ஆமோதமோதஜநநஸ் ஸப்ரமோதப் பரமோதந: ॥ 52.

284. மஹீவராஹவாமாங்க: - தன் இடப்புறத்தில் பூதேவியையும் வராஹரையும் கொண்டவர். ஞாழல் மரத்தினடியில் இவர்கள் இருப்பர்.

285. ரதிகந்தர்பபஶ்சிம: - தன் பின்புறத்தில் (மேற்கில்) ரதியையும் மன்மதனையும் கொண்டவர். லக்ஷ்மீ - விஷ்ணு, கௌரீ - சிவன், ரதி - மன்மதன், பூதேவி - வராஹர் என்ற நான்கு தம்பதியரும் முதல் ஆவரணமான பிந்து த்ரிகோணங்களின் நாற்புறங்களிலும் இருப்பர். இரண்டாவது ஆவரணமான ஷட்கோணத்தின் தேவதைகள் ஆமோதர், பிரமோதர், ஸுமுகர், துர்முகர், விக்க்நர், (அவிக்க்நர் என்றும் பெயருண்டு) விக்கநக்ருத் என்று ஆறு கணபதிகள். இவர்களின் சக்திகள் முறையே, ருத்தி, ஸம்ருத்தி, காந்தி, மதநாவதி, மதத்ரவா, திராவிணீ என்கிற அறுவர். இவர்கள் பகவானை வழிபடுவதை இனி நாமங்கள் (286-297) விளக்குகின்றன.

286. ஆமோதமோதஜனன: - ஆமோதருக்கு மகிழ்ச்சியுண்டாக்குபவர்.

287. ஸப்ரமோதப்ரமோதந: - ப்ரமோதருடன் அனைவரையும் மகிழ்விப்பவர்.

ஸமேதிதஸம்ருத்த்தி ஸ்ரீ: ருத்த்திஸித்த்திப்ரவர்தக: ।
தத்தஸௌமுக்ய ஸுமுக: காந்தி கந்தளிதாஶ்ரய: 53.

288. ஸமேதித ஸம்ருத்த்தி ஸ்ரீ: - ஸம்ருத்தி தேவியின் பெருமையை வளர்ப்பவர்.

289. ருத்த்திஸித்த்திப்ரவர்தக: - ருத்திதேவியைக் காரிய நிறைவிற்குத் தூண்டுபவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



290. தத்த ஸெளமுக்ய ஸுமுக: - ஸுமுகருக்கு முக சோபையைத் தருபவர். ஸுமுகரை அடியார்களுக்கு அருள்புரிவதில் ஸுமுகமாக இருக்கச் செய்பவர்.

291. காந்திகந்தலிதாஶ்ரய: - காந்திதேவியின் பெருமைகளை கொழுந்துவிடச் செய்பவர்.

மதநாவத்யா ஶ்ரிதாங்க்ரி: க்ருத்ததௌர்முக்யதுர்முக:।
விக்நஸம்பல்ல வோபக்ந: ஸேவோந்நித்ரமதரத்வ:॥54

292. மதநாவத்யாஶ்ரிதாங்க்ரி:- மதநாவதி சரண் புகுந்த திருவடிகள் உள்ளவர்.

293. க்ருத்த தௌர்முக்யதுர்முக:- துர்முகரின் முகவாட்டத்தை நீக்குபவர். துர்முகர் விளைவிக்கிற கொடுமையையும் அகற்றுபவர்.

294. விக்க்ந ஸம்பல்லவோபக்ந:- விக்கினரின் பெருமையெனும் கொடி படரக் கொழு கொம்பானவர்.

295. ஸேவோந்நித்ர மதத்ரவ:- மதத்ரவாதேவியின் தளர்வற்ற ஸேவையை ஏற்பவர்.

விக்நக்ருந்நிக்ந சரணோ த்ராவிணீ ஶக்திஸத்க்ருத:।
தீவ்ராப்ரஸன்நநயநோ ஜ்வாலிநீ பாலிதைகத்ருக்॥55

296. விக்கநக்ருத் நிக்ந சரண: - விக்கின கர்த்தாவால் இறுகப்பற்றப்பெற்ற திருவடிகள் உள்ளவர்.

297. த்ராவிணீ சக்தி ஸத்க்ருத: - திராவிணியால் போற்றி வழிபடப்பெற்றவர்.

அறுகோணத்தில் உள்ள பீட தேவதைகளான தீவ்ரா ஜ்வாலினீ, மோஹினீ, போகதாயினீ, காமிநீ, வஸுந்தரா என்ற ஆறு சக்திகள் ஸ்ரீகணபதியை வழிபடுகின்றனர். (நா. 298-303)

298. தீவ்ராப்ரஸந்நயந: - தீவ்ரா சக்தியை அருளுடன் நோக்குபவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



299. ஜ்வாலிநீபாலிதைகத்ருக்- ஜ்வாலினியைக் காப்பதில் கருத்துள்ளவ்.

மோஹிநீமோஹநோ போகதாயினீ காந்திமண்டித: ।

காமிநீகாந்தவக்த்ரஸ்ரீ: அதிஷ்ட்டித வஸுந்தர: ॥ 56

300. மோஹினீ மோஹந: - மோஹினியை மயக்குபவர்

301. போகதாயிநீகாந்தி மண்டித:- போகதாயினியின் ஒளியால் சூழப்பட்டவர்.

302. காமிநீகாந்தவக்த்ரஸ்ரீ: - காமினீ சக்தியைக் கவர்கிற முக அழகுள்ளவர்.

303. அதிஷ்ட்டித வஸுந்த்தர: - வஸுந்தராசக்தியை அடக்கி ஆள்பவர்.

அறுகோணத்தின் வடக்கிலும், பகவானின் வலத்திலும் இடத்திலும் வஸுதாரா - சங்கநிதி, வஸுமதீ- பத்மநிதி என்ற நிதிதேவதை தம்பதிகள்.

வஸுதாராமதோந்நத்த மஹாசங்க்க நிதிப்ரபு:

நமத்வஸுமதீமௌளி மஹாபத்மநிதிப்ரபு: 57

304. வ்ஸுதாராமதோந்நத்த மஹாசங்க்கநிதிப்ரபு:- வஸுதாரா தேவியுடன் இணைந்து மதர்த்து நிற்கிற மஹாசங்க நிதியின் மேலாளர்.

305. நமத் வஸுமதீமௌளி மஹாபத்மநிதிப்ரபு: - வணங்கி வழிபடுகின்ற வஸுமதிக்கு - முன் நிற்கிற மஹாபத்மநிதியின் மேலாளர்.

ஸர்வஸத்குருஸம்ஸேவ்யஶ் ஶோசிஷ்கேஶஹ்ருதாஶ்ரய: ।

ஈஶாநமூர்த்தா தேவேந்த்ரஶிக்கா பவநநந்தந: ॥58

306. ஸர்வஸத்குருஸம்ஸேவ்ய: - கணேசர் முதல் தன் குருவரை உள்ள திவ்யர், ஸித்தர், மாநவர் என்ற முக்குரு பரம்பரையைச் சார்ந்தவரும் மற்றவருமான எல்லா ஸத் குருக்களாலும் நன்கு வழிபடத்தக்கவர். யந்த்ரத்தில் பகவானின் இருப்பிடத்திற்குப்பின் திரிகோணத்தில் குரு மண்டலம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



வழிபடப் பெறுகின்றது. வெளியில் இந்த்ரன் முதலான திக்தேவதைகள், அவர்களின் ஆயுதங்கள் மற்றும் வாஹனங்கள் வழிபடப்பெறுகிறுர்கள். இவற்றைக் குறிக்கின்ற நாமங்கள் இனி வருகினறன.

307. ஶோசிஷ்கேஶஹ்ருதாஶ்ரய: - அக்கினியின் இதயத்தை இருப்பிடமாகக் கொண்டவர். கார்ஹபத்யம், ஆஹவநீயம், தக்ஷிணாக்கினி, உக்த்யம், ஆவஸத்த்யம் என்ற சுரௌத முறையில் வழிபடப்பெறுகிற அக்கினி ஜ்வாலையின் நடுவில் அமர்ந்தவர். தென்கிழக்கதிபர் அக்கினி.

308. ஈஶாநமூர்த்தா - வடகிழக்கதிபரான ஈசானரின் தலையாக நிற்கிற தலைவர்

309. தேவேந்த்ரஶிகா - கிழக்குதிக்கதிபனான தேவேந்திரனுக்குத் தலைமுடிபோல் பெருமை தருபவர்.

310. பவநநந்தன: - வடமேற்குதிக்கதிபனான வாயுவை மகிழச் செய்பவர். பிராண வாயு என்ற உயிர்க்கும் உயிரானவர்.

அக்ரப்ரத்யக்ர நயநோ திவ்யாஸ்த்ராணாம் ப்ரயோகவித் ।
ஐராவதாதி ஸர்வாஶாவாரணா வரணப்ரிய: ॥ 59.

311. அக்ரப்ரத்யக்ரநயந: - சிறந்த ஸூக்ஷ்மநோக்குள்ள புத்தொளி வீசுகிற பார்வையுள்ளவர்.

312. திவ்யாஸ்த்ராணாம் ப்ரயோகவித் - தெய்வத்தன்மை மிக்க அஸ்திரங்களைச் செலுத்துமுறை அறிந்தவர்.

313. ஐராவதாதிஸர்வாஶா வாரணாவரணப்ரிய:- ஐராவதம் முதலிய திக்கஜங்களின் சூழலை விரும்புபவர். ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்ஜனம், புஷ்பதந்தம், ஸார்வபௌமம், ஸுப்ரதீகம் என கிழக்கு முதலிய எட்டு திக்குகளில் நின்று பூமியைத் தாங்குகிற திக்கஜங்கள். இவர்களின் மனைவிகளான அப்ப்ரமு, கபிலா, பிங்களா, அனுபமா, தாம்ரகர்ணா, சுப்ப்ரதந்தீ, அங்கநா, அஞ்ஜநாவதீ என்ற எட்டுப் பெண் யானைகள். இவர்கள் ஆவரணக் காப்பாளர்களாக எட்டுத் திசைகளிலும் உள்ளனர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



வஜ்ராத்யஸ்த்ர பரீவாரோ கணசண்டஸமாஶ்ரய: ।
ஜயாஜயபரீவாரோ விஜயா விஜயாவஹ: ॥ 60

314. வஜ்ராத்யஸ்த்ர பரீவார: - வஜ்ரம் முதலிய அஸ்திரதேவதைகளால் சூழப்பெற்றவர். வஜ்ரம், சக்தி, தண்டம், கத்தி, பாசம், கொடிமரம், (துவஜம்) சங்கு, திரிசூலம் என்ற எட்டும் வரிசையாக இந்திரன் முதலான எட்டு திக்பாலர்களின் ஆயுதங்கள்.

315. கணசண்டஸமாஶ்ரய: - தன் கணங்களான சண்டன் ப்ரசண்டன் முதலியவர்களுக்குப் புகலிடமானவர்.

பகவானின் ப்ராண சக்திகளான ஜயா, அஜயா, விஜயா அபராஜிதா, நித்யா, விலாஸினீ, செளண்டீ, அநந்தா, மங்களா என்று எண்மரால் வழிபடப்பெறுவதை இனி நாமங்கள் விளக்குகின்றன.

316. ஜயாஜயபரீவார: - ஜயா அஜயா என்ற இருவரைப் பரிவாரமாகக் கொண்டவர்.

317. விஜயா விஜயாவஹ: - விஜயாவிற்கு வெற்றி யளிப்பவர்.

அஜிதார்ச்சித பாதாப்ஜோ நித்யா நித்யாவதம்ஸித: ।
விலாஸிநீக்ருதோல்லா ஸஶ்ஶௌண்டீ ஸௌந்தர்ய மண்டித: ॥ 61

318. அஜிதார்ச்சிதபாதாப்ஜ: - அஜிதாவால் திருவடிகளில் அர்ச்சிக்கப் பெற்றவர்.

319. நித்யா நித்யாவதம்ஸித: - நித்யாவால் தினமும் போற்றப்பட்டவர்.

320. விலாஸிநீக்ருதோல்லாஸ: - விலாஸினியின் பணி விடையால் உல்லாஸமடைபவர்.

321. ஶௌண்டீஸௌந்தர்ய மண்டித: - செளண்டீ தேவியின் அழகால் அழகு பெற்றவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அநந்தா நந்தஸுகத: ஸுமங்கள ஸுமங்கள: ।
இச்சா ஶக்திஜ்ஞான ஶக்திக்ரியா ஶக்தி நிஷேவித: ॥ 62.

322. அநந்தாநந்தஸுகத: - அநந்தாவிற்கு அளவற்ற சுகம் தருபவர்.

323. ஸுமங்கள ஸுமங்கள:- மங்களமிக்க ஸுமங்களாவைத் தன் பிராணசக்தியாகக் கொண்டவர்.

324. இச்சா ஶக்திஜ்ஞான ஶக்திக்ரியா ஶக்திநிஷேவித: - உலகைப் படைக்கிற பகவானது விருப்பம் இச்சாசக்தியானது. அதுபற்றிய திட்டமும் செய்முறை வகுத்தலும் ஜ்ஞான சக்தியானது. செயல்முறை கிரியா சக்தியானது. அம்மூன்றாலும் பணிவிடை செய்யப்பெறுபவர். இம்மூன்று சக்திகளே செயல் முறைகளால் பிரிந்து ஸுபகா முதல் ரௌத்ரி வரையுள்ள பல தோற்றங்களைப் பெற்றனர். அவர்களைப் பற்றி இனி நாமங்கள் விளக்கும்.

ஸுபகாஸம்ஶ்ரிதபதோ லலிதா லலிதா ஶ்ரய: ।
காமிநீகாமந: காமமாலினீ கேலிலாலித: ॥ 63

325. ஸுபகாஸம்ஶ்ரிதபத:- ஸுபகா என்ற இச்சா சக்தி தம் திருவடிகளைப் புகலிடமாகக் கொண்டதை ஏற்றவர்.

326. லலிதாலலிதாஶ்ரய:- கணேசஸுந்தரீ என்ற மந்த்ர தேவதையான லலிதா தேவியின் விளையாடுமிடமானவர். இவள் ஞான சக்தியின் விரிவு.

327. காமிநீகாமந: - காமிநீ சக்தியை மகிழ்விப்பவர். காமகலா என்றும் இவளுக்குப் பெயருண்டு.

328. காமமாலிநீ கேலிலாலித: - காமமாலினியுடன் விளையாட்டில் மனநிறைவு பெறுபவர். காமேசீ என்று பெயருண்டு

ஸரஸ்வத்யாஶ்ரயோ கௌரீநந்தந: ஶ்ரீநிகதந: ।
குருகுப்த- பதோ வாசாஸித்த்தோ வாகீஶ்வரீ பதி: ॥ 64

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



329. ஸரஸ்வத்யாஶ்ரய:- ஸரஸ்வதிக்குப் புகலிடம்

330. கௌரீநந்தந: - கௌரியை மகிழ்விப்பவர்.

331. ஸ்ரீநிகேதந: - லக்ஷ்மிக்கு இருப்பிடமானவர்.

332. குருகுப்தபத: - கணக்ரீடர் முதலிய (நா 2) ஆசார்யர்களால் மிக்க ரகசியமாகக் காக்கப்பெற்ற வழிபாட்டு முறையுள்ளவர். பகவானின் அருள்பெறும் வழி குருமூலமே அறியத்தக்கது.

333. - வாசாஸித்த்த: - வாக்கால் அடையப்பெறுபவர். அவரருள் பெற்ற வாக்கு அவரை அடைவிக்கும்.

334. - வீகீஶ்வரீபதி: - நாகுலீ என்ற வாக்தேவிக்கும் வசினீ முதலிய வாக்தேவிகளுக்கும் தலைவர்.

நலினீகாமுகோ வாமாராமோ ஜ்யேஷ்ட்டாமநோரம: ।
ரௌத்ரீமுத்ரித பாதாப்ஜோ ஹூம்பீஜஸ் துங்கசக்திக: ॥ 65

335. நலீனி காமுக: - நலீனி என்ற கங்கை நதிப்பிரிவிடம் விருப்பமிக்கவர்.

336. வாமாராம: - வாமா என்ற ஸ்ருஷ்டிசக்தியிடம் ஆர்வமுள்ளவர்.

337. ஜ்யேஷ்ட்டாமநோரம: - ஜ்யேஷ்ட்டா என்ற காத்தல் சக்தியிடம் மனம் மகிழ ஈடுபடுபவர்.

338. ரௌத்ரீ முத்ரிதபாதாப்ஜ: - ரௌத்திரி என்ற ஸம்ஹார சக்தியால் திருவடி வழிபடப்பெற்றவர்.

இனி பகவானது மந்திரவடிவம் விளக்கப்பெறுகிறது.

339. ஹூம் பீஜ:- ஹூம் என்ற பீஜாக்ஷரத்தின் பொருளானவர். வக்ரதுண்டமஹாகணபதியின் ஆறக்ஷர மந்திரத்தின் கடை எழுத்தான ஹூம் அந்த மந்த்ரத்தின் பீஜமுமாகும். மந்திரமெனும் பெருமரத்தின் விதை போன்று எல்லா சக்திகளும் ஸூக்ஷ்மமாகக் கொண்டுள்ளது பீஜம்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



340. துங்கஶக்திக:- 'தும்' 'கம்' என்ற இரண்டைச் சக்தியாகக் கொண்டவர். வக்ரதுண்ட மந்திரத்திலுள்ள தும்மும், மஹாகணபதின் 28 அட்சரமந்த்ரத்தின் 'கம்'மும் சக்தியானவை. ஸ்தூலப்பொருளின் வித்தான பீஜம்போல், ஸூக்ஷ்மப்பொருளின் வித்து சக்தியாகும்.

விஶ்வாதிஜநத்ராண: ஸ்வாஹா ஶக்திஸ்ஸகீலக:।
அம்ருதாப்த்திக்ருதாவா ஸோ மதகூர்ணித லோசந: ॥ 66

341. விஶ்வாதிஜநத்ராண: - உலகைப் படைக்க முற்பட்ட பரம்பொருள் ஸ்தூல மூலப்பொருளை 'விராட்' ஆகவும் ஸூக்ஷ்ம மூலப்பொருளை 'ஹிரண்யகர்ப்பர்' ஆகவும் முதலில் படைத்தார். அவ்விருவரும் உலகின் ஆதி-விச்வாதி. அவர்களைப் படைத்துக் காப்பவர்.

342. ஸ்வாஹாசக்தி: - ஸ்வாஹா என்பதை மந்திர சக்தியாகக் கொண்டவர். ஸ்வாஹா என அக்கினியில் இடப்பட்டதன் தெய்விக சக்தியானவர். ஸ்வாஹா என ஹோமம் செய்யப்பெறுவதன் மூலம் அருள் புரிபவர்.

343. ஸகீலக: - கீலகத்துடன் கூடியவர். பீஜமும் சக்தியும்போல் கீலகம் மந்திரசக்தி சிதறுமல், தவறாகப் பாயாமல் பாதுகாப்பது. ஸ என்பதைக்கீலகமாகக் கொண்ட மிருத்யுஞ்ஜய மந்திரம், காயத்ரீ மந்திரம் இவற்றைத் தன் மந்திரமாக்கியவர்.

344. அம்ருதாப்த்திக்ருதாவாஸ: - அமுதக்கடலில் வாசம் கொண்டவர். ஆழி சூழ்ந்துநிற்கிற கடல்களில் ஸுரா (மது) கருப்பஞ்சாறு அமுதம் இவற்றை நீராகக் கொண்ட கடல்களை அமுதக்கடல் என்பர்.

345. மதகூர்ணிதலோசந: - அமுதக்கடல் நீரைப்பருகிய விளைவாக மதம் கொண்டு கிரங்கிய கண்கள் உள்ளவர்.

உச்சிஷ்டகண உச்சிஷ்டகணேஶோ கண நாயக:
ஸார்வகாலிக ஸம்ஸித்திர் நித்யஶைவோ திகம்பர: ॥ 67

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



346. உச்சிஷ்ட கண:- சிறந்த ஒழுக்கமிக்கவரைத்தம் கூட்டத்தில் கொண்டவர். கட்டுப்பாட்டால் சிறப்புபெற்ற கண ங்களைக் கொண்டவர்.

347. உச்சிஷ்டகணேஶ: - அதர்வ வேதத்தில் *(11-7 2-27)* உள்ள உச்சிஷ்ட ப்ரமஹஸூக்தத்தின் உட்பொருளானவர். ஒன்பது அக்ஷரமுள்ள மந்த்ரத்தால் வழிபடப்பெறுபவர். குவளைமலர், மாதுளம்பழம், வீணை நெற்கதிர், பாசம், அக்ஷமாலை இவற்றைத் தரித்து பசுமை நிறத்தில் உள்ளவர். மடியில் அமர்ந்துள்ள தேவியின் மறைவிடத்தில் தன் துதிக்கையைப் பதித்தவராக இவரைத் தியானிப்பதுண்டு. இவரை வழிபடப்பல மந்திரங்கள் உண்டு. தியானத்திற்கும் பல வடிவங்கள் உண்டு. இரு தடவைகளாக வேக வைக்கிற எல்லா உணவுப்பொருளும் மிக உயர்ந்த உணவுப்பொருளும் உச்சிஷ்டம். கொழுக்கட்டை முதலியவை அத்தகையவை. இவற்றை நிவேதனப் பொருளாக ஏற்பதால் உச்சிஷ்டர் என்றும் கூறுவர். அதனால் நிவேதனத்திற்கு இருதடவை ஆவியில் வெந்ததும் ஹோமத்திற்கு நெய்யில் பொரித்ததும் ஏற்றதென்ற கருத்தும் உள்ளது. வித்யா வான் என்ற வரபலம் மிக்க அசுரனை மாய்க்கத் தேவர்களின் வேள்வித்தீயில் இக்கோலத்தில் தோன்றியவர்.

348. கண நாயக: - குணங்களைத் திரும்ப திரும்பக் கூறுவதால் எளிதில் அடையப்பெறுபவர். மங்களமான குணங்கள் எண்ணற்றவை. அவை ஒருங்கே சேருமிடம்.

349. ஸார்வகாலிகஸம்ஸித்த்தி: - எப்போதும் நிலைத்திருக்கிற - காலத்தால் தரம் குன்றாத - சித்திகளைத் தருபவர்.

350. நித்யஶைவ: - சிவபெருமானையே என்றும் வழிபடுபவர். சிவபெருமானுக்கு என்றும் இனிய புதல்வர்.

351. திகம்பர: - திசைகளை ஆடையாகக் கொண்டவர். ஆடை உடலை மறைக்க உதவும். இவர் ஆடையற்றவர். நீக்கமற நிரம்பி நிற்கிற பகவானுக்குப் பரவெளியே ஆடையாகி மறைப்பாகிறது. ஆடையற்றவராக - பாலகணபதியாகப் பல

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



திருக்கோயில்களில் இவரைக் காணலாம்.

இனி அகாராதிவரிசையில் (352-667) நாமங்கள் இடம் பெறுகின்றன.

அநபாயோऽநந்தத்ருஷ்டி ரப்ரமேயோऽஜராமா:।
அநாவிலோऽப்ரதிரதோ ஹ்யச்யுதோऽம்ருதமக்ஷரம்॥ 68

352. அநபாய: - இடம் விட்டகலாதவர், அழிவற்றவர், தடையின்றி நற்பணிகளை நிறைவேற்றுபவர்.

353. அநந்தத்ருஷ்டி: - எல்லையும் முடிவுமற்ற நோக்குள்ளவர். எண்ணற்ற கண்களுள்ளவர் (ஸஹஸ்ராக்ஷ:) அழிவற்ற ஞானக்கண்ணோட்டமுள்ளவர்

354. அப்ரமேய: - புலன்கள் வாக்கு எண்ணம் இவற்றால் அளவிடவோ இவர் தான் எனக் குறிப்பிடவோ இயலாத பெருமையுள்ளவர்.

355. அஜராமர: - எப்பொருளும் தோன்றி முதிர்ந்து தேய்ந்து மறையும். இவர் நரை திரை என்ற தேய்வும் மரணம் என்ற மறைவும் அற்றவர். காலத்தால் அழிக்க முடியாதவர்.

356. அநாவில:- குழப்பமில்லாதவர். மாசற்றவர். அறியாமை காரணமாக ஒட்டிக் கொண்டிருக்கிற இயல்புகளே அழுக்காகிப் பேரொளியை மறைக்கும். இக்குறை பேரறிவே வடிவான பகவானிடம் இல்லை.

357. அப்ரதிரத: - எதிர்ப்பில்லாதவர். இவர் உட்புகுவதால் உடலும் மனமும் இயங்கும். அந்த இயக்கம் இவரையே எதிர்க்கப் பயன்படாது.

358. அச்யுத: - தன்னிலையிலிருந்து நழுவாதவர். தன்னையண்டியவரை நிலை நழுவவிடாமல் காப்பாற்றுபவர். அச்யுதர் என்ற நாராயணனாக இருப்பவர்.

359. அம்ருதம்:- அழிவற்ற பெருநிலையானவர். அமுதமானவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



360. அக்ஷரம் - தேய்வுறுதவர், குறையாதவர். எங்கும் பரவி நிற்பவர்.

அப்ரதர்க்யோऽக்ஷயோऽஜய்யோऽநாதாரோऽநாமயோऽமல: ।
அமோக ஸித்திரத்வைத மகோரோऽப்ரமிதாநந: ॥ 69

361. அப்ரதர்க்ய: - யுக்தியால் உணரமுடியாதவர். காரண-காரிய ஒப்பீடுமூலம் யுக்தியால் பலவற்றை உணரமுடியும். இவரது காரணநிலையும் காரிய நிலையும் அறியவொண்ணாதவை. அதனால் யுக்திக்கு இடமில்லை. வேதம் இவ்விருநிலைகளையும் காட்டும். வேதத்தை ஒட்டி மேற்கொண்டு இவரைப் பற்றி ஆராயலாம். வேதத்தைச் சாருத குயுக்திகளால் உணர இயலாதவர்.

362. அக்ஷய:- தேயாதவர். க்ஷய: - இருப்பிடம். இருப்பிட மற்றவர். இவர் இங்குதான் உள்ளார் என குறிப்பிட முடியாது. எங்குமிருப்பவர். இங்கு - அங்கு இருப்பவர் என தேசக்குறிப்பீடு மூலம் உணர்கிற சிற்றிறவாளரால் உணர முடியாதவர்.

363. அஜய்ய:- வெல்ல இயலாதவர். ஓரிடத்தில் ஒருவரைக் கட்டுபடுத்துவது தான் வெற்றி. எங்கு மிருப்பவரைக் கட்டுப்படுத்த இயலாது.

364. அநாதார: - தமக்கெனத்தனித்த ஆதாரமில்லாதவர். குறுகிய வடிவுள்ளதற்கு ஆஸனம், இருப்பிடம், தரை என்றவாறு ஆதாரம் உண்டு. இவருள் அனைத்துமிருப்பதால் இவருக்கென ஆதாரம் இருக்காது.

365. அநாமய: - நோயற்றவர். நோய்வருமிடமான உடலும் மனமும் இல்லாதவர்.

366. அமல:- மாயை எனும் மாசு பற்றாதவர். ஆகாயம்போல் எதனோடும் ஒட்டாத இவரிடம் எதுவும் ஒட்டாது. அப்பும் அழுக்கும் இல்லாதவர். இயல்பாக இல்லாததொன்று பின் ஒட்டினால் அழுக்காகும்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



367. அமோகஸித்தி: - வீணாகாத சித்தியுள்ளவர். செயலின் நிறைவானது செயலின் விளைவாகப் பூர்ணபலன் பெறுவதே. அதுவே ஸித்தியாகும். இவரை நினைத்தால் செயல் தடையின்றி நிறைவுறும். செயல்நிறைவுறு முன்னரே பலன் கிட்டும். அதனால் செயலோ சித்தியோ வீணாவதில்லை.

368. அத்வைதம் - த்வைதப் ப்ரபஞ்சம் இவருள் ஒடுங்கி மறைவதால் இவர் அத்வைதமாக உணரப்படுபவர்

369. அகோர: - கோரவடிவமற்றவர். மனத்திற்கு இனியதாக இல்லாதது கோரமாகிறது. ஆத்மாவே மிகமிக இனியது. அதனால் ஆத்மாவாக உணரப்பெறுகிற இவர் மிக இனியவர். ஸத்யோஜாதர், வாமதேவர், அகோரர், தத்புருஷர், ஈசானர் என்ற சிவபெருமானது ஐந்து தோற்றங்களில் அகோரராக இருப்பவர். இனியவராகிப் பயத்தைப் போக்குபவர்.

370. அப்ரதிமாநந:- ஈடற்ற இன்பத்தை அருகில் கொணர்பவர். ஈடற்ற முகப்பொலிவுள்ளவர். எண்ணற்ற முகங்கள் உள்ளவர்.

அநாகாரோऽப்த்திபூம்யக்னிபலக்க்நோऽவ்யக்தலக்ஷண: ।
ஆதாரபீட ஆதார ஆதாராதேயவர்ஜித: ॥ 70

371. அநாகார:- உருவகப்படுத்த இயலாதவர். ஸாதகனின் மனத்தை ஈர்க்கப் பல வடிவங்களில் தோன்றினாலும் வெண்மேகம் போல் நொடியில் உருமாறி மறைபவர். இவ்வாறிருப்பவர் எனக் குறிப்பிட இயலாதவர். எல்லாமாயிருப்பவரை இதுவாக மட்டுமிருப்பவரெனக் குறுக்க இயலாது.

372. அப்த்திபூம்யக்னிபலக்க்ந: - கடல் பூமி நெருப்பு ஆகியவற்றை வலிமை குன்றச்செய்பவர். பூமி உருவைத் திடப்படுத்தித் தடுக்கும். நீர் நனைத்து கலகலக்கச் செய்து உருமாற்றும், நெருப்பு பக்வப்படுத்தி வரளச்செய்யும். இவற்றின் இயல்பாக அமைந்த சக்தி பகவானிடம் வலிவிழக்கும். நீரால் நனையாதவர். பூமியால் தடையுறுதவர். நெருப்பால் உருமாறுதவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



373. அவ்யக்தலக்ஷணா: - பொறிகள் மூலம் புலப்படாத அமைப்புள்ளவர். வேதம் கூறுகிற இவரது ஸத்-சித் ஆனந்தம் என்ற பெருநிலைகளோ படைப்பு காப்பு மறைப்பு என்ற செயல் முறைகளோ ஒரு கண்ணோட்டமாக மேல் எழுந்தவாரியாக இவரைக்காட்ட இயலும். ஆனால் பொறிகளால் வெளிப் பொருளாக வியக்தமாக உணர்த்த முடியாது.

374. ஆதாரபீட:- உலகின் மூலதத்துவங்களின் ஆதாரபீடமானவர். மூலதத்துவங்கள் 36. பூதங்கள் 5. பூதகுணங்களான சப்தம் - ஸபர்சம் - ரூபம் - ரஸம் - கந்தம் என்ற ஐந்து, ஞான - கர்மேந்திரியங்கள் பத்து, அஹங்காரம், புத்தி, மனம், பிரகிருதி என ஜடதத்துவங்கள் 24, ஜீவன், நியதி, காலம், ராகம், கலா, வித்யா, மாயா என்ற வித்யாதத்துவங்கள் ஏழு, சுத்த வித்யை, ஈச்வரன் ஸதாசிவன், சக்தி, சிவன் என்ற ஆத்மதத்துவங்கள் 5 இவையே உலகின் மூலதத்துவங்கள். இவை இவரிடமிருந்து. தோன்றி இவரிடமே வாழ்ந்து இவருள் அடங்குவதால் இவரே உலகின் ஆதாரபீடம். கண்ணாடியில் ப்ரதிபிம்பமாக தெரிபவை கண்ணாடியையே ஆதாரமாகக் கொண்டவை. அவற்றிற்கு த்தனித்த இருக்கை இல்லை.

375. ஆதார:- எல்லா வற்றிற்கும் ஆதாரமானவர். தாங்கு மிடம் ஆதாரம். தத்துவங்களை ஆதாரமாகக். கொண்டவரே. அத்தத்துவங்களின் ஆதாரமாயிருப்பது விந்தை. தத்துவங்களைத்தமது வெளிப்பாடாகக் கொள்வதால், அவை தம் மை அடையாளம் காட்டச்செய்வதால், அவை ஆதாரம் போலத் தோன்றுகின்றன. உண்மையில் இவரே ஆதாரம்.

376. ஆதாராதேய வர்ஜித: - தனக்கெனத் தனித்த ஆதாரமில்லாதவர். கண்ணாடி தன்னிலும் வேறுபட்ட தனித்த எதனையும் தன்னுள் தாங்குவதில்லை. அதனால் ஆதாரபீடமானவரே எதனையும் தாங்காதவரும் கூட. இவருக்கு ஆதாரமோ, இவரை ஆதாரமாக்கி அதனுள் அமைகிற பொருளோ இல்லாதவர். தத்துவங்கள் இவரை ஆதாரமாகக் கொண்டுள்ளன. இவர் அத்வைதமானதால் தனித்த பொருள் இல்லாததால் ஆதாரமாக இயலாது.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



ஆகுகேதன ஆஶாபூரக ஆகுமஹாரத: ।
இக்ஷுஸாகர மத்த்யஸத்த இக்ஷுபக்ஷணலாலஸ: ॥ 71

377. ஆகுகேதந: - பெருத்த எலியைத் தமது வெற்றிக் கொடியில் கொண்டவர். பெருமெலி - பெருச்சாளி. பெருஉருவமும் பெருவலிவும் முரட்டுத்தனமும் திருட்டுத் தனமும் வஞ்சகமும் மெத்தனமும் உருவான எலி இது. இதற்கு மாறுக மென்மையும் சிறு உருவமும் பரபரப்பும் எளிமையும் பேதைமையும் உருவான மூஞ்சூறும் இவருக்கு உவப்பானதே.

378. ஆஶாபூரக:- பெருவெளியில் நிறைந்து நிற்பவர். ஆசா - எங்கும் பரந்த பெருவெளி - ஆகாயவெளி. இவர் அதனை நிரப்புகிற பெருவடிவமுள்ளவர். இவர் சின்னஞ்சிறிய எலியை வாகனமாக்கிக் கொண்டார். நம் ஆசையும் பெருவெளிபோல் எல்லையற்றதே. அதையும் தடையின்றி நிரப்புவார். ப்ருசுண்டி என்ற முனிவர் தன் தவத்தால் கண்டுணர்ந்த பகவானுக்கு 'ஆசாபூரகர்' எனப் பெயரிட்டார்.

379. ஆகு மஹாரத: - பெருச்சாளி இழுக்கிற பெருந்தேர் கொண்டவர். கருடருக்கும் நந்திக்கும் போல் இந்த எலிக்கும் தனிக்கோயில் சில இடங்களில் உள்ளது.

380. இக்ஷுஸாகரமத்த்யஸ்த்த: - கருப்பஞ்சாற்றுக் கடலின் நடுவே இருப்பவர். ஏழு தீவுகளும் அவற்றைச் சுற்றி அமைந்த ஏழு கடல்களுமாக நமது பூமண்டலம் அமைந்துள்ள பெருவெளியில் மேலும் பல பூமண்டலங்கள் உள்ளன. அவை எல்லாவற்றையும் சுற்றி உள்ள கடல் அமுதக்கடல், திருப்பாற் கடல், இக்ஷுஸாகரம் எனப்படும். இப்பூமண்டலங்களைப் படைத்தவரின் தனித்த நிலைத்த முகவரி அது.

381. இக்ஷு பக்ஷணலாலஸ: - கரும்பைச் சுவைப்பதில் ஆர்வமுள்ளவர். சக்கை மிக்கதிலிருந்தும் இனிய சுவையைப் பிரித்தனுபவிப்பவர்.

இக்ஷுசாபாதிரேகஶ்ரீ ரிக்ஷுசாபநிஷேவித: ।
இந்த்ரகோபஸமாந ஶ்ரீரிந்த்ர நீலஸமத்யுதி: ॥72

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



382. இக்ஷுசாபாதிரேகஸ்ரீ: - கரும்பை வில்லாகக் கொண்ட மன்மதனை விஞ்சிய பேரழகு பெற்றவர்.

383. இக்ஷுசாபநிஷேவித: - கரும்பு வில்லோனான மன்மதனால் வழிபடப்பெற்றவர். இவர் கையிலுள்ள கரும்பு வில் ஆயுததேவதையாக நின்று தன் திறமையின் தோற்றுவாயான இவரை வழிபடும்.

இனி பகவானின் மேனி நிறம் பற்றிய நாமங்கள்.

384. இந்த்ரகோபஸமானஸ்ரீ: - தம்பலப்பூச்சி போன்ற செவ்வண்ணமேனி எழில் பெற்றவர். வக்ரதுண்டர் முதலிய தியான வடிவங்கள் செந்நிறமுள்ளவை.

385. இந்த்ரநீலஸமத்யுதி: - நீலரத்தினம் போன்று. ஒளிர்பவர். செவ்வண்ணரே நீலவண்ணராவதும் உண்டு.

இந்தீவரதளஶ்யாம இந்துமண்டலநிர்மல: ।
இத்த்மப்ரிய இடாபாக இராதாமேந்த்திராப்ரிய: ॥ 73

386. இந்தீவரதளஶ்யாம: - கருங்குவளை மலர்போன்ற கருநீலவண்ணம் படைத்தவர்

387. இந்து மண்டல நிர்மல: - சந்திர மண்டலம் போன்று நிர்மலமானவர். மாசற்ற இனிய நிறம் இது. சிவப்பு, நீலம், கருநீலம், சந்திரனின் நிறம் என்று யுகத்திற்கு யுகம் மாறுபட்ட நிறமுள்ளவராக இறைவன் தோன்றுவார். ஞானம் பெற இடையூறு நீங்கி அமைதி பெறச் சந்திரனின் வெண்ணிறமும் (ஶஶிவர்ணம் சதுர்ப்புஜம்) விருப்பம் நிறைவேறச் செவ்வண்ணமும், இடையூறு விலக நீலநிறமும் கருநீலநிறமும் கொண்டவராகத் தியானித்து வழிபடுவர்.

388. இத்த்மப்ரிய: - அக்னி வடிவில் வழிபடப் பெறுபவரானதால் ஸமித்துகளை விரும்பி ஏற்பவர்.

389. இடாபாக: - இடா - பூமி, வேள்வியில் ஆஹுதியாகும் பொருள், பசு, வேள்வி புரிபவர். இவர்களைத் தம்பங்காகக் கொண்டவர். பூமியாக அக்னிக்கு ஆதாரமாகிறார்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



ஆஹுதிப்பொருளாகி அக்கினியையும் அக்கினியில் ஆவாஹனம் செய்யப் பெற்றவர்களையும் மகிழ்விக்கிறார். முக்யமான ஆஹுதிப் பொருளான பாலையும் அக்னி தோன்றுமிடமான கோமயத்தையும் தருகிற பசுவாகி உதவுகிறார். வேள்வி புரிபவராகி வழிபாட்டை நிறைவுறச் செய்கிறார். அக்கினி வடிவிலிருந்து அனைத்தையும் ஏற்கிறார். இப்படிப் பல பங்குகளை நிறைவுறச் செய்கிறார்.

390. இராதாம - பூமியை இருப்பிடமாகக் கொண்டவர். மூலாதாரமான பூமிதத்துவத்தைத் தன் இருப்பிடமாகக் கொண்டவர். பூமியின் அந்தர்யாமியாகி அதனை இயக்குபவர்.

391. இந்திராப்ரிய:- திருமகளிடம் அன்புள்ள விஷ்ணுவானவர்.

இக்ஷ்வாகுவிக்ந - வித்த்வம்ஸீ இதிகர்தவ்ய தேப்ஸித: ।
ஈஶாநமௌலிரீஶாந ஈஶாநஸூத ஈதிஹா ॥ 74.

392. இக்ஷ்வாகுவிக்நவித்த்வம்ஸீ - இக்ஷ்வாகு என்ற ஸூர்யவம்சத்து மூத்த அரசனின் வேள்விக்கு நேர்ந்த இடையூறுகளை அழித்து வேள்வி நிறைவு பெறச் செய்தவர். இக்ஷ்வாகு - பேய்ச்சுரை - பெரும் கசப்புள்ள காய். இடையூறு நேரும்போது பேய்ச்சுரை போல் கசக்கும். இடையூறு நீங்கியதும் இனிக்கும். இனிக்கச் செய்பவர்.

393. இதிகர்தவ்யதேப்ஸித: - வழிகாட்டுவதற்கு எதிர்பார்க்கப்படுபவர் - பெரும்பணிகள் செய்கையில், இப்படிச் செய்யலாம் அல்லது செய்யக் கூடாதென்று நிர்ணயிக்க இயலாதபோது கல்ப சூத்திரங்கள் முதலானதன் மூலம் செய்முறை தெரிவிப்பவர். செய்முறை நன்கு அமைந்ததால் கிட்டுகிற நற்பயனாக இருப்பவர்.

394. ஈஶாநமௌலி: - பேராளுனர்களின் தலைவர். ஆளுமை மிக்க தேவர் முதலானோரின் தலைவர். ஈசான திக்கில் தலைவைத்துப்படுத்துள்ள வாஸ்து புருஷராயிருப்பவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



395. ஈஶாந: - வடகிழக்கு திக்கின் அதிபரான ஈசானர் இவர். பேராளுமையுள்ள ஈசர்களை இயக்குபவரும் வாழ வைப்பவருமாவார்.

396. ஈசாநஸுத:- பரமேசுவரனின் புதல்வர். ஈசானராலும் வேள்வி புரிபவர்களாலும் வேள்வியில் வேண்டப் பெறுபவர்

397. ஈதிஹா - ஈதிபாதை நீக்குபவர். மக்கள் வாழ்விற்கு இன்றியமையாத தான்யப்பயிர் விளைவதற்கு இடையூறுன அதிகமழை, மழையின்மை, எலி, வெட்டுக்கிளி, கிளி முதலானவற்றால் பயிரழிவு அரசரால் தொந்தரவு முதலியவை ஈதிபாதையாகும்.

ஈஷணாத்ரயகல்பாந்த: ஈஹாமாத்ரவிவர்ஜித: ।
உபேந்த்ர உடுப்ப்ருன் மௌளி ருண்டேரக பலிப்ரிய: ॥ 75.

398. ஈஷணாத்ரய கல்பாந்த: - உலகம், மக்கள், செல்வம் என்ற மூன்று பற்றுகளையும் அழிப்பவர். மறுவாழ்வு. மறுபிறப்பு, சுவர்க்க சுகம், இவை பற்றிய கற்பனையால் அமைந்த பற்று லோகேஷணா. நன்மகன். நற்சந்ததி அவனால் கடைத்தேறுதல் என்ற கற்பனையில் அமைந்த பற்று, புத்ரேஷணா. செல்வம், செல்வத்தால் பெறுகிற வாழ்க்கை வசதி, சுகம், என்ற கற்பனையால் விளைந்த பற்று தனேஷணா. இப்பற்றுகள் அளவற்ற துன்பத்தின் விளைநிலம். அதனை நல்வைராக்கியம் அளிப்பதன் மூலம் சுட்டெரிப்பவர்.

399. ஈஹாமாத்ர விவர்ஜித:- தேவையுணர்ச்சி யற்றவர். உலகமே கைவசமிருந்தாலும், போதுமென்ற மனமில்லாதவன் தேவையுணர்ச்சியால் ஆவலால் பறப்பான். தன் நிறைவு மிக்கவராகையால் வெளிநாட்ட மற்றிருக்கிறுர்.

400. உபேந்த்ர: - இந்திரனுக்குத் துணைவராக இருப்பவர். இந்திரனது மூவுலகப் பேராளுமைக்கு உதவுபவர். அதிதியின் மகனாக, இந்திரனது உதவுகிற தம்பியாக வாமனராகத் தோன்றியவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



401. உடுப்ப்ருந்மௌளி: சந்திரனை முடியணியாகக் கொண்டவர். நக்ஷத்ர மண்டலத்தைத் தாங்குகிற மேல் வானத்தையே சிரஸில் கொண்டவர்.

402. உண்டேரக பலிப்ரிய: - அப்பம், உண்ணியப்பம், பொருள் விளங்கா உருண்டை என்றபல உருண்டை வடிவில் தனக்குப் படைத்த பணியாரங்களை விரும்பி ஏற்பவர்.

உந்நதாநந உத்துங்க உதாரத்ரிதஶாக்ரணீ: ।
ஊர்ஜஸ்வா நூஷ்மலமத ஊஹாபோஹதுராஸத: ॥ 76

403. உந்நதாநந: - உயர்ந்தவர்களை வாழ வைப்பவர். உயர்நிலையிலுள்ள பிரும்மா முதலிய தேவர்களும் இவரருளால் இயங்குகின்றனர். யானை வடிவில் மனிதனுக்கு எட்டாத முக அமைப்பு கொண்டவர்.

404. உத்துங்க:- மிக உயரமுள்ளவர். துங்கா என்ற நதி பூமியைப் பிளந்து வெளிவர இயலாதிருக்கையில் வராஹராகிப் பூமியை நோண்டி நதியை வெளிக் கொணர்ந்தவர்

405. உதாரத்ரிதசாக்ரணீ: - பெருவள்ளல்களான தேவர்களின் முன் நின்று வழிகாட்டுபவர். கொடையில் நிகரற்ற தலைவர். பெருவள்ளலும் மஹாதேவருமான சிவபெருமானுக்கு முன் செல்பவர்

406. ஊர் ஜஸ்வான்: - பேராற்றல் மிக்கவர்

407. ஊஷ்மலமத:- கதகதப்புடன் உள்ள மத நீர்ப்பெருக்-குள்ளவர்.

408. ஊஹாபோஹதுராஸத: - தத்துவ ஆராய்ச்சியின் பயனான ஏற்பிற்கோ மறுப்பிற்கோ உட்படாதவர். ஏற்பிற்கான ஆய்வு ஊஹம். மறுப்பிற்கான ஆய்வு அபோஹம். இவற்றிற்கு அப்பாற்படுவதால் எவ்வித ஆய்விற்கும் உட்படாதவர்.

ருக்யஜுஸ்ஸாம ஸம்ப்பூதி: ருத்த்திஸித்த்திப்ரவர்தக: ।
ருஜுசித்தைகஸுலப: ருணத்ரயவிமோசக: ॥ 77.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



409. ருக்யஜுஸ்ஸாம ஸம்ப்பூதி: - ருக்வேதம் யஜுர்வேதம், ஸாமவேதம் இவற்றைத் தான் தோன்றுமிடமாகக் கொண்டவர். மூன்று வேதங்களுக்கும் தோற்றுவாய்.

410. ருத்த்தி - ஸித்த்தி - ப்ரவர்தக: - செல்வம், செல்வத்தின் பயனைப் பெறுதல் இரண்டையும் இயக்குபவர். பேரரசு அணிமா முதலிய யோக முறைப்பயிற்சி, அதன் பலன் இவற்றைத் தருபவர். ருத்திதேவி, ஸித்திதேவி இவர்களை அடியார்களுக்கு அருள் புரியத்தூண்டுபவர்.

411. ருஜுசித்தைக ஸுலப:- நேர்மனம் உள்ளவருக்கு மட்டும் எளிதில் கிட்டுபவர். உடலும் உள்ளமும் வாக்கும் ஒருங்கே இணைந்து செயல்படுபவர் ருஜு - நேர்மனமுள்ளவர்.

412. ருணத்ரயவிமோசக: - முக்கடன்களிலிருந்து விடுவிப்பவர். பித்ருருணம் - தன்னை மகனாகப் பெற்று வளர்த்து ஆளாக்கிய பெற்றோரிடம் பட்ட கடன் - அவர்களைப் போன்று நற்சந்ததியைப் பெற்று வளர்ப்பது மூலம் இது தீரும். தேவருணம் - மழை வெயில், காற்று ஒளி எனப்பலவற்றை அளித்த தேவர்களிடம் பட்ட கடன், வேள்வி நற்பணி முதலியவற்றால் இது தீரும். ருஷிருணம் - தன்னலமின்றி ஆராய்ந்து கண்டவற்றை நூலுருவில் தந்த அறிஞர்களிடம் பட்ட கடன். பிறருக்கு நூலறிவால் சுய அறிவை வளர்ப்பதால் இது தீரும். இறையருளால் தான் மூன்று கடன்களிலிருந்தும் விடுபட இயலும்.

லுப்தவிக்க்நஸ் ஸ்வபக்தாநாம் லுப்த சக்தி: ஸுரத்விஷாம் ।
லுப்தஸ்ரீர் விமுகார்சாநாம் லூதாவிஸ்போடநாஶந: ॥ 78.

413. லுப்தவிக்க்நஸ் ஸ்வபக்தாநாம் - ஸ்வபக்தாநாம் லுப்தவிக்க்ந:- தன்னடியார்களுக்கு நேர்கிற தடைகளைப் போக்கடிப்பவர். (ரு என்ற ஸம்ஸ்கிருத எழுத்தில் தொடங்குகிற சொல் இல்லாமையால் ஸமமாக ஒலிக்கின்ற லு என்ற ஸம்ஸ்கிருத எழுத்தில் தொடங்குகிற நாமங்கள் மூன்று. அவற்றைப் பொருள் கூறுமுறையையொட்டி ஸ்வபக்தாநாம் லுப்தவிக்கந: என்றவாறு விளக்கப்படுகிறது. ரு வின் நெடில்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அட்சரத்திலும் சொல்லில்லாததால் ௡ என்று தொடங்குகிற சொல் ஏற்கப்பட்டுள்ளளது).

414. லுப்தஶக்தி: ஸுரத்விஷாம் - ஸுரத்விஷாம் லுப்த ஶக்தி: - தேவ எதிரிகளான அஸுரர்களின் வலிமையைப் போக்கடிப்பவர்.

415. லுப்தஶ்ரீ: விமுகார்சாநாம் - விமுகார்சாநாம் லுப்தஶ்ரீ:- தன் வழிபாட்டில் ஆர்வமற்றவர்களின் பெருமையை மங்கச் செய்பவர். (ஸ்வபக்தாநாம் லுப்தவிக்க்நாய நம:, ஸுரத்விஷாம் லுப்தஶக்தயே நம:, விமுகார்சாநாம் லுப்த ஶ்ரியே நம: என்று அர்சனைக்கான நாமம்).

416. லூதா விஸ்ப்போடநாசன: - சிலந்தி விஷம் காணாக்கடி, என விஷத்தீண்டலால் நேர்கிற கொப்புளங்களைப் போக்குபவர்.

ஏகாரபீட மத்த்யஸ்த்த ஏகபாதக்ருதாஸந: ।
ஏஜிதாகிலதைத்யஶ்ரீ ரேதிதாகிலஸம்ஶ்ரய: ॥ 79

417. ஏகாரபீடமத்த்யஸ்த: - 'ஏ' என்ற எழுத்தின்மூல வடிவான திரிகோண பீடத்தில் நடுவில் பிந்துவில் அமர்ந்தவர்.

418. ஏகபாதக்ருதாஸந: - ஒற்றைக்காலில் நிற்பவர். காசியில் துராஸதன் என்ற அசுரனால் ஏற்பட்ட துயரை நீக்க ஒரு திருவடியை அசுரனின் தலையில் வைத்து அவன் கொழுப்பை அடக்க மற்றொரு காலை ஊன்றி நின்றவர்.

419. ஏஜிதாகில தைத்யஶ்ரீ: - அசுரர்களின் பெருமையைக் குலைத்தவர்.

420. ஏதிதாகிலஸம்ஶ்ரய: - தன்னைப்புகலடைந்தவரை ஓங்கச் செய்தவர்.

ஐஸ்வர்ய நிதிரைஸ்வர்யம் ஐஹிகா முஷ்மிகப்ரத: ।
ஐரம்மதஸமோந்மேஷ: ஐராவதநிபாநந: ॥ 80

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



421. ஐஸ்வர்யநிதி: - பக்தர்களுக்கு வழங்க, பேராளுமைக்கும் செல்வத்திற்கும் காப்பிடமானவர்.

422. ஐஸ்வர்யம் - பேராளுமையும் செல்வமுமானவர்

423. ஐஹிகாமுஷ்மிகப்ரத: - இம்மையிலும் மறுமையிலும் நலன்களை வழங்குபவர்.

424. ஐரம்மதஸமோந்மேஷ: - மின்னல் போன்று கணத்தில் உலகை ஒளிர வைப்பவர்.

425. ஐராவதநிபாநந: - ஐராவதத்தின் முகம் போன்று முகமுள்ளவர்.

ஓங்காரவாச்ய ஓங்கார: ஓஜஸ்வாநோஷதீபதி: ।
ஔதார்ய நிதிரௌத்தத்யதுர்ய ஔந்நத்யநிஸ்வந: 81

426. ஓங்காரவாச்ய: - ஓங்காரம் என்ற எழுத்தின் நேரிடைப்பொருளானவர்

427. ஓங்கார: - இறைநிலை உணர்த்துகிற ஓங்காரமானவர். ஓங்காரமும் அதன் உட்பொருளான கடவுளுமானவர்.

428. ஓஜஸ்வான் - ஓஜஸ்மிக்கவர். உடலின் அனைத்து தாதுக்களின் உட்சாரம் ஓஜஸ் எனப்பெறும் (இது குறைந்தால் உயிரே போகும்). ஓஜஸ் எனப்பெறும் இதுவே வீரத்தின் மூலம்.

429. ஓஷதீபதி: - காய்த்தவுடன் அழிகிற பயிரினம் ஓஷதியாகும். உயிர்பிரியும் வரை உடற்சூடு சமநிலையில் இருக்க உதவுவதால் ஓஷதி (ஓஷம் - உடற்சூடு) நெற்பயிர் முதலானவை. அவைகளின் பதி சந்திரன் - சந்திரனாயிருப்பவர்.

430. ஔதார்யநிதி: - வள்ளல் தன்மையின் கருவூலம். செல்வநிறைவும் கொடையால் மனநிறைவும் பெற்றவர்.

431. ஔத்தத்யதுர்ய: - தன் அடியார்களைக் காப்பாற்றத்தன் முரட்டுத்தனத்தை முன் நிறுத்துபவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



432. ஔந்நத்ய நிஸ்வந:- கம்பீரமான பிளிறலால் வானை நிரப்புபவர். உரத்து ஒலிப்பவர்.

அங்குஶ: ஸுரநாகாநாம் அங்குஶ: ஸுரவித்விஷாம்.:
அ:ஸமஸ்த விஸர்காந்த பதேஷு பரிகீர்தித: 82

433. அங்குஶ:- ஸுரநாகாநாம் - ஸுரநாகாநாம் அங்குஶ: தேவர்களையும் நாகர்களையும் கட்டுப்படுத்துபவர். தேவர்களாகிய யானைகளுக்கு துரட்டி போன்றவர். தேவர்கள் வானிலும் நாகர்கள் பாதாளத்திலும் வீர்யமிக்கவர்கள். அவர்களைக் கட்டில் அடக்கத் துரட்டி போன்றவர். யானையை அடக்கத் துரட்டியின் அருகாமையே போதும். அதனால் தாக்க அவசியமில்லை. யானையின் காலின் மேல் அதன் பாகன் துரட்டியைச் சாற்றி வைத்திருப்பார். யானை கட்டுக்கடங்கும். பகவானின் பெயரும் அருகாமையும் தேவர்களையும் நாகர்களையும் கட்டில் வைக்கும். தேவர்களும் நாகர்களும் அடங்கும்போது நடுவிலுள்ள மனிதன் முதலானோரும் அடங்குவர். அம் அ: என்பது அனுஸ்வாரம் விஸர்கம் என்ற இரு எழுத்துக்களின் வரி வடிவம். இந்த மூன்று நாமங்கள் அவ்விரண்டினிடத்தில் வருகின்றன. ஸுரநாகாநாம் அங்குஶாயநம:

434. அங்குஶ: ஸுரவித்விஷாம் - ஸுரவித்விஷாம் அங்குஶ: தேவசத்ருக்களுக்கு அஸுரருக்கு அங்குசமானவர். ஸுரவித் விஷாம் அங்குசாய நம:.

435. அ: ஸமஸ்த விஸர்காந்த பதேஷு பரிகீர்தித: - அ: ஆ: என்று தொடங்கி ஒ: ஔ: என்ற விஸர்கத்தில் முடிகிற எல்லா பதங்களுக்கும் பிரதிநிதியாக அ: என்ற விஸர்கமாக இருப்பவர். விஸர்கம் தனித்து உச்சரிக்க முடியாத எழுத்து. काम: रामा: हरि: என்று தொடங்கி शंभो: द्यौ: என்பது வரை தாம் சேர்ந்த உயிர் எழுத்திற்கு ஏற்பத் தனித்து விஸர்கம் ஒலிக்கும். விஸர்கம் ஒன்றேயாயினும் உச்சரிப்பில் மாற்றம் உண்டு. ராம: (ஹ) ஹரி: (ஹி) ஶம்பு: (ஹு) என்று விஸர்கம் தனி ஒலி பெறுவதைக் காணலாம். பகவானும் தாம் சேர்ந்த பொருளுக்கேற்ப பல வடிவங்களைப் பெறுகிறார்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



கமண்டலுதர: கல்ப: கபர்தீ கலபாநந: ।

கர்மஸாக்ஷீ கர்மகர்தா கர்மாகர்மபலப்ரத: ॥ 83

436. கமண்டலுதர: - துதிக்கை நுனியில் அமுதகலசமாகிற கமண்டலு ஏந்தியவர்

437. கல்ப: - சிறந்த அமைப்பாளர். உலகைப் படைப்பதிலும் காப்பதிலும் ப்ரளயத்தில் ஒடுக்குவதிலும் இவரது அமைப்புத் திறனேக் காணலாம்.

438. கபர்தீ - சடைமுடியர். கபர்தி என்ற சிறப்புப் பெயர் பெற்ற சிவனானவர். கபர்தம் - சோழி. மல்லன் என்ற அசுரனே அடக்கச் சோழிகளாலான மாலேயுடன் தோன்றியவர். மல்லனே அடக்கியதால் மல்லாரி என்று பெயர் பெற்றவர்.

439. கலபாநந: - யானேமுகத்தோன். ஒலியும் (கல) ஒளியும் (பா) உயிரும் (அநநம்) அளிப்பவர்.

440. கர்மஸாக்ஷீ - நம் செயல்களனேத்தையும் கண்காணிப்பவர். வெளியில் சூர்யன் சந்திரன் முதலானோராகவும் உள்ளத்தில் அந்தர்யாமியாகவும் உள்ளும் புறமும் நின்று கண்காணிப்பவர்.

441. கர்மகர்தா - உள்ளத்தில் உறைந்து கெட்ட எண்ணமுற்றவரைக் கெட்ட செயலில் தூண்டி வீழ்த்துபவர். நல்லெண்ணமுள்ளவரை நற்செயலில் தூண்டி ஏற்றம் தருபவர். கருமத் தொடர்பற்றவர். கர்மஸாக்ஷியாக கர்ம கர்த்தாவாக இருப்பது உலகக் கட்டுப்பாட்டிற்காக.

442. கர்மாகர்ம பலப்ரத: - நல்வினேக்கும் கெட்ட வினேக்கும் தக்க பலனளிப்பவர்.

கதம்பகோலகாகார: கூஶ்மாண்ட கணநாயக: ।

காருண்ய தேஹ: கபில: கதக: கடிஸூத்ரப்ப்ருத் ॥ 84

443. கதம்ப கோலகாகார: - கடம்பு மொட்டு போன்ற குண்டலினீ சக்தியாக விளங்குபவர். கடம்பு மொக்குகள் சேர்ந்தே விரியும். சேர்ந்தே சுருங்கும் - குண்டலினியின்

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



ஆதாரமான மூலாதாரத்தின் அதிஷ்டான தேவதை ஸ்ரீமஹாகணபதி. இவரது அருள்பாயும்போது மூலாதாரம் முதல் துவாதசாந்தம் வரையுள்ள அனைத்து குண்டலினி கேந்திரங்களும் சேர்ந்தே விரியும். அருள்பாயாத போது அனைத்தும் சுருங்கிவிடும். யோகப்பயிற்சி மூலம் இறைவன் அருளால் குண்டலினீ சக்தி மலரும்போது அமுதம் பொங்கி நிர்விகல்பஸமாதி கூடும் என்பர்.

444. கூஃமாண்டகணநாயக:- கூச்மாண்டர்கள் என்ற கெட்ட கிரஹங்களின் கூட்டத்தைக் கட்டுபடுத்துபவர். அவற்றின் தீமை விளைவிக்கிற சக்தி இவரது கட்டுப்பாட்டிற்குள் உள்ளது.

445. காருண்யதேஹ: - கருணையே வடிவானவர்.

446. கபில: - கருஞ்சிவப்பு நிறமுள்ளவர். கபிலமுனி வராகத் தோன்றி ஸாங்கிய தரிசனம் கண்டவர்.

447. கதக: - ஸம்பிரதாய வழிமுறைகளைக் கூறுபவர். கபிலர் முதலிய ஆசார்யர்களாகத் திகழ்ந்தவர்.

448. கடிஸூத்ரப்பருத்: - ரத்னமிழைத்த அரை ஞாண் அணிந்தவர் (இனி கவர்கத்தின் இரண்டாம் எழுத்து ख வை முதல் எழுத்தாகக் கொண்டநாமங்கள்.

க்கர்வ: க்கட்கப்ரிய: க்கட்கக்காந்தாந்தஸ்த்த: க்கநிர்மல: ।

க்கல்வாட ஶ்ருங்க நிலய: க்கட்வாங்கீ க்கதுராஸத: ॥ 85

449. க்கர்வ: - குள்ளர். கசியபரின் புதல்வராக வாமனவடிவில் வந்தவர்.

450. க்கட்கப்ரிய:- காண்டாமிருகத்திடம் பிரியமுள்ளவர். வாளில் ஆர்வமுள்ளவர்.

451. க்கட்க க்காந்தாந்தஸ்த்த: - க்கட்க என்ற (खड्ग) சொல்லில் கடைசியிலுள்ள ग என்ற எழுத்தினுள் சக்தியாக இருப்பவர். (கணபதியின் பீஜமந்திரத்தை வெளிப்படையாகவும் நேரிடையாகவும் கூறுமல் சுற்றி மறைத்துச் சொல்வர்).

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



452. க்கநிர்மல: - ஆகாயம் போன்று மாசற்றவர்.

453. க்கல்வாடஶ்ருங்க நிலய: - மொட்டையான மலைச் சிகரத்தில் இருப்பவர். மரங்களே முளைக்காத மலைச்சிகரம் வழுக்கைத்தலை (மொட்டை) போலுள்ளது.

454. க்கட்வாங்கீ - உறைவாள் கொண்டவர். கட்வாங்கம்- வீரர் இடுப்பின் கச்சைக்குள் செறுகிய குத்துக்கத்தி அல்லது உறைவாள். முழங்கால் முட்டிபோலும் கட்டிற்கால் போலும் பிடி சிறுத்து அடிக்கும் பகுதி உருண்டு பெரிதாக உள்ள குருந்தடி கட்வாங்கம் என்பர் சிலர்.

455 - க்கதுராஸத: - ஆகாயம் போல் எட்ட முடியாதவர். நெருங்க நெருங்க விலகுவது ஆகாயத்தின் இயல்பு. பகவானும் இத்தகையவர். இனி (ग என்ற மூன்றும் எழுத்தை முதல் எழுத்தாகக் கொண்ட நாமங்கள்).

குணாட்ட்யோ கஹநோ கஸ்த்தோ கத்யபத்ய ஸுதார்ணவ: ।

கத்ய காநப்ரியோ கர்ஜோ கீதகீர்வாண பூர்வஜ: ॥ 86

456. குணாட்ட்ய: - எண்ணற்ற சிறப்புகள் நிரம்பியவர்

457. கஹந: - வெளி ஒளியால் காண இயலாதவாறு மறைவில் இருப்பவர். உள்ளொளியால் மட்டும் காணப் பெறுபவர்.

458. கஸ்த்த: - ग (க) என்ற பீஜாக்ஷரத்தினுள் பதிந்தவர்

459. கத்ய பத்ய ஸுதார்ணவ: - வசனமாகவும் செய்யுளாகவும் உள்ள காவியத்தின் சுவையமுதமானவர்.

460. கத்யகாநப்ரிய:- சொல்லவும் கேட்கவும் இனிய ஸாமவேத கானத்தில் பிரிய முள்ளவர்.

461. கர்ஜ: - மேகம் போன்று இனிது முழங்குபவர்.

462. கீதகீர்வாணபூர்வஜ: - நாதத்திலிருந்து எழும் கீதம். 'அதனல் துதிக்கப்பெறுகிற தேவர்கள். இவர்களுக்கு முன்னவர்.

குஹ்யாசாரரதோ குஹ்யோ குஹ்யாகமநிரூபித: ।

குஹாஶயோ குஹாப்த்திஸ்த்தோ குருகம்யோ குரோர்குரு: ॥ 87.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



463. குஹ்யாசாரரத:- ரகசிய வழிபாட்டில் நாட்டமுள்ளவர். உள்ளமென்ற குகையில் (மறைவிடத்தில்) தங்கியுள்ள ஜீவன், அந்தர்யாமி இவ்விருவருடன் தொடர்பு கொள்வதில் களிப்புறுகிற பரமாத்மாவாக உள்ளவர்.

464. குஹ்ய:- குகப் பெருமானுக்கு இதமானவர். வெளி நாட்டமற்ற தனிமையில் உணரத்தக்கவர். மறை பொருள்.

465. குஹ்யாகம நிருபித: - மறை பொருளை விளக்குகிற ஆகமங்களாலும் வேதங்களாலும் சான்றுகளுடன் விளக்கப் பெற்றவர்.

466. குஹாஶய: - இதய குகையில் ஓய்வு பெறுபவர்.

467. குஹாப்த்திஸ்த்த:- விளக்கப் பெருத ஆகாயப் பெருவெளியாகிய பெருங்கடலில் உள்ளவர். நாம் காண்கிற விண்வெளிக்கப்பாலுள்ள பெருவெளி எவ்வகையிலும் உணரப் பெருதது. பகவானின் கால்பங்கே விண்வெளியிலும் அதில் அடங்கிய உலகங்களிலும் வெளிப்பட்டுள்ளது. மற்ற முக்கால் (பெரும்) பகுதி அந்தப் பரவெளியில் பரவியுள்ளது. "பாதோ(அ)ஸ்ய விஶ்வா பூதாநி. த்ரிபாதஸ்யாம்ருதம் திவி" (புருஷஸூக்தம்)

468. குருகம்ய:- குருவின் உபதேசத்தால் உணரப் பெறுபவர்.

469. குரோர் குரு:- தந்தைக்கு ப்ரணவ உபதேஶம் செய்த குமர குருவிற்கும் ஸ்ருஷ்டித் தொடக்கத்தில் பிரும்மாவைப் படைத்து அவருக்கு வேதம் தந்த நாராயணனுக்கும் குரு. (இனி घ 'க்க' வை முதல் எழுத்தாகக் கொண்ட நாமங்கள்)

**க்கண்டா க்கர்க்கரிகாமாலீ க்கடகும்ப்போ க்கடோதர: ।**
**சண்டஶ் சண்டேஶ்வர ஸுஹ்ருத் சண்டீஶஶ் சண்டவிக்ரம: ॥ 88.**

470. க்கண்டாக்கர்க்கரிகாமாலீ- இனிது ஒலிக்கின்ற சதங்கைகள் உள்ள மாலே தரிப்பவர். (பால கணேசராகத் த்யானத்தில் இது அதிகம் பொருந்தும்).

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



471. க்கடகும்ப்ப:- கவிழ்த்த இருபானைகள் போன்ற இரு முண்டுகளுள்ள மத்தக முடையவர்.

472. க்கடோதர:- குடம் போன்று முன் தள்ளிய வயிறுள்ளவர்.

473. சண்ட:- முரடர். அடங்காத வீர முள்ளவர்.

474. சண்டேஸ்வர ஸுஹ்ருத்- சிவபக்தரரான சண்டே-சுவரரது தோழர்.

475. சண்டீஶ:- சண்டிகை தேவியின் ஈசன்.

476. சண்ட விக்ரம:- கோப வெறிமிக்க சண்டர் எனும் கணத்தை வலிவ்வால் அடக்கியவர். மிக்க வலியவரிடத்தில் செல்வாக்கு உள்ளவர்.

சராசரபதிஸ் சிந்தாமணி சர்வணலாலஸ: ।
ச்சந்தஸ் ச்சந்தோ வபுஸ் ச்சந்தோ துர்லக்ஷ்யஸ் ச்சந்தவிக்ரஹ: ॥

477. சராசரபதி:- அசைவதும் அசையாததுமானவற்றின் இறைவன். (சரம் அசரம் என உலகைப் பிரிப்பர்.).

478. சிந்தாமணி சர்வணலாலஸ:- விரும்பியதைத் தருகிற சிந்தாமணி, காமதேனு, கற்பகமரம் முதலானதன் செருக்கை விழுங்குவதில் நாட்டமுள்ளவர். (இனி ஹ 'ச்ச' வை முதல் எழுத்தாகக் கொண்ட (நாமங்கள்)

479. ச்சந்த:- காயத்ரி அனுஷ்டுப் என்றவாறு சந்த அமைப்பாக உள்ளவர்.

480. ச்சந்தோவபு:- வேதத்தை வடிவமாகக் கொண்டவர்.

481. ச்சந்தோ துர்லக்ஷ்ய:- வேதத்தால் அடையாளம் காட்ட இயலாதவர்.

482. ச்சந்த விக்ரஹ:- விரும்பியவாறு வடிவெடுப்பவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



ஜகத்யோநிர் ஜகத் ஸாக்ஷீ ஜகதீஶோ ஜகந்மய: ।
ஜபோ ஜபபரோ ஜப்யோ ஜிஹ்வாஸிம்ஹாஸநப்ரபு:॥ 90

483. ஜகத்யோநி:- உலகின் தோற்றுவாய், ஒன்றோடொன்று இணைய இயலாத இயல்புடைய ப்ரக்ருதியும் புருஷனும் இணைந்து உயிரினமாக உருவடைகிற இடமானவர். (யோநி)

484. ஜகத்ஸாக்ஷீ- உலகின் இயக்கமனைத்தையும் கண்காணிப்பவர்.

485. ஜகதீஶ:- உலகை வரையறைக்குட்படுத்தி ஆள்பவர்.

486. ஜகந்மய:- எங்கும் நிறைந்துள்ளமையால் உலகமானவர்.

487. ஜப:- மந்திர ஜபம் என்ற செயல் வடிவானவர்.

488. ஜபபர:- ஜபத்தில் முனைந்த ஸாதகரானவர்.

489. ஜப்ய:- ஜபத்தால் உணரத்தக்க தேவதையானவர். மந்திரம் அதன் ஜபம், அதன் தேவதை, ஜபிப்பவன் என எல்லாம் அவரே. பக்தியுடன் ஜபிப்பவன் தன்னை மறந்து இறைவனுடன் ஒன்றிப் போவதால் அத்தேவதையாகவே மாறுகிற அத்புதம் நேர்கிறது.

490. ஜிஹ்வாஸிம்ஹாஸநப்ரபு:- மனமொன்றி ஜபிப்பவனின் நாக்கே ஸிம்ஹாஸநமாக, அதில் அமர்ந்து ஸாதகன் விரும்பியதை அளிக்கிற ப்ரபு. (இனி झ 'ஜ்ஜ' வை முதல் எழுத்தாகக் கொண்ட நாமங்கள்.)

ஜ்ஜலத்ஜ்ஜலோல்லஸத் தாநஜ்ஜங்காரி ப்ரமராகுல: ।
டங்காரஸ்ப்பாரஸம்ராவஷ்டங்கார மணிநூபுர: ॥ 91

491. ஜ்ஜலத்ஜ்ஜல்லோல்லஸத்தாநஜ்ஜங்காரி ப்ரமராகுல:- கன்னங்களிலிருந்து சல சல என்று பெருகுகிற மதநீரைப் பருக ரீங்காரமிட்டுச் சுற்றி வருகிற தேனீக்களால் பரபரப் படைந்தவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



492. டங்காரஸ்ப்பாரஸம்ராவ:- வெண்கல ஒலி போன்று கணீர் ஒலியுடன் பிளிறுபவர்.

493. டங்கார மணிநூபுர:- டங்டங் என்றொலிக்கிற ரத்தினக் கால் சிலம்புள்ளவர். (இனி ठ 'ட்ட' வை முதல் எழுத்தாகக் கொண்ட நாமங்கள்)

ட்டத்வயீபல்லவாந்தஸ்த்தஸர்வமந்த்ரைகஸித்தித:।
டிண்டி முண்டோ டாகிநீஶோ டாமரோ டிண்டிமப்ரிய: ॥ 92

494. ட்டத்வயீ பல்லவாந்தஸ்த்தஸர்வமந்த்ரைகஸித்தித:- ஸ்வாஹா என்று முடிவுறுகிற அனைத்து மந்திரங்களின் ஜபத்தின் ஸித்தியைத் தருபவர். (இனி ड वை முதல் எழுத்தாகக் கொண்ட நாமங்கள்).

495. டிண்டிமுண்ட:- கவிழ்ந்த டமாரம் போன்ற தலை முண்டுகளுள்ளவர்.

496. டாகிநீஶ:- டாகினீ முதலான யோகினிகளின் தலைவர். ஸாகிநீ, ராகிநீ, லாகிநீ, காகிநீ, டாகினீ, ஹாகிநீ, யாகிநீ என்று யோகினி தலைவிகள் ஏழு. இவர்களை ஷோடாநியாஸ முறையில் யோகிநீ ந்யாஸத்தில் வழிபடுவர்.

497. டாமர:- டாமர தந்திரத்தால் விளக்கப் பெறுபவர். டாமர தந்திர வடிவினர்.

498. டிண்டிமப்ரிய:- பறைவாத்ய ஒலியில் விருப்ப முள்ளவர். (இனி ढ 'ட்ட' வை முதல் எழுத்தாகக் கொண்ட நாமங்கள்).

ட்டக்காநிநாதமுதிதோ ட்டௌகோ ட்டுண்டிவிநாயக:।
தத்வாநாம் பரமம் தத்வம் தத்த்வம்பதநிரூபித: ॥ 93

499. ட்டக்காநிநாத முதித:- உடுக்கை ஒலி கேட்டு மகிழ்பவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



500. ட்டௌகஃ- உயிரினத்தின் உள்ளத்தில் மறைந்து நின்று கண்காணிப்பவர். எல்லா மறிந்தவர். எங்கு முள்ளவர்.

501. ட்டுண்டி விநாயகஃ- பக்தர்கள் தேடிப் பெறப் பெறுகிற விநாயகர். தன்னைக் கட்டுப்படுத்த தனக்கு மேல் எவருமில்லாதவர். தனிச் சிறப்புள்ள தலைவர். காசியிலுள்ளவர்.

502. தத்த்வாநாம் பரமம் தத்த்வம்:- தத்துவங்களில் மூத்த பெரும் தத்துவம். அனைத்துத் தத்துவங்களையும் தோற்றுவித்த மூல தத்துவம். தத்துவம் - நிலைத்த சூட்சுமப் பொருள். ஆத்ம தத்துவம் வித்யாதத்துவம் சிவ தத்துவம் என்று தத்துவங்கள் மூவகைப்படும். முன்னிரு தத்துவங்கள் *24* ஜட தத்துவங்களாகும். ஜட தத்துவத்திற்கு அப்பாலான சிவ தத்துவமாக இருப்பவர். மூன்று தத்துவ நிலைக்கும் அப்பாற்பட்டவரும் கூட *(நா. 374)*.

503. தத்த்வம் பத நிரூபித:- தத் - பரம்பொருள். த்வம் - ஜீவன். தத்-த்வம் என்று சொற்களால் வகைப்படுத்தப்பட்டவர். சொல்லளவில் வேறுபட்ட இவை ஞானியின் உணர்வில் ஒன்றே என்று தத்த்வமஸி என்ற உபநிடத மஹாவாக்யம் நிரூபித்து உணர்த்தப் பெறுபவரும் இவரே.

**தாரகாந்தரஸம்ஸ்த்தாநஸ் தாரகஸ்தாரகாந்தகஃ।**
**ஸ்த்தாணுஸ் ஸ்த்தாணுப்ரியஸ்ஸ்த்தாதா ஸ்தாவரம் ஜங்கமம்**
**ஜகத்॥ 94**

504. தாரகாந்தரஸம்ஸ்த்தாந:- கண்விழிகளின் இடையே அமர்ந்தவர். யோகி தியான யோகத்தில் இரு புருவங்களிடையே இரு விழிகளும் குவியும்படித் தன் பார்வையைச் செலுத்தித்தியானம் செய்யும்போது அவருக்குப் புலப்படுபவர். கண்ணினுள்ளே பார்க்கும் சக்தியாக உணரத்தக்கவர்.

505. தாரகஃ- துயர்ச் சூழலிலிருந்து கரையேற்றுபவர். தாரகம் என்ற ஓங்கார வடிவினர். நற்கதிக்கு இட்டுச் செல்பவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



506. தாரகாந்தகः- தாரகாசுரனை மாய்த்த குமரக் கடவுளானவர். (இனி थ த்த எழுத்தில் தொடங்குகிற சொற்களில்லாததால் स्थ வை முதல் எழுத்தாகக் கொண்ட நாமங்கள்).

507. ஸ்த்தாணுः- பிரளய காலத்தில் காற்று, தீ, வெள்ளம் இவற்றால் பாதிப்புறாமல் நிலைத்திருப்பவர். வைரம் பாய்ந்து முதிர்ந்த மரம் துளிர்க்காமல் கிளை பரவாமல் உருமாற்றமிராமல் இறுகியிருப்பது போல் நிலைத்தவர்.

508. ஸ்த்தாணுப்ரியः- ஸ்தாணு என்ற சிவ பெருமானுக்கு இனியவர்.

509. ஸ்த்தாதா- என்றும் நிலைத்திருப்பவர். எதிர்த்து நின்று நிலைத்தவர். போரோ பிரளயமோ எதுவும் இவர் நிலையைப் பாதிக்க இயலாது.

510. ஸ்த்தாவரம் ஜங்கமம் ஜகத்- அசையாததும் அசைவதும் உயிர்த் திருப்பதுமான உலகமானவர். இது மூன்று தனிப் பதங்கள் கொண்ட நாமம். ஸ்த்தாவராய ஜங்கமாய ஜகதே நமः என்று அர்ச்சனை. (இனி द தொடங்குகிற நாமங்கள்)

தக்ஷயஜ்ஞப்ரமதநோ தாதா தாநவமோஹநः।
தயாவாந் திவ்ய விபவோ தண்டப்ப்ருத் தண்டநாயகः॥ 95

511. தக்ஷயஜ்ஞப்ரமதநः- தக்ஷனுடையே வேள்வியை அழித்தவர். அதனைச் செய்த சிவ பெருமானாக வீர பத்திரராக ஆனவர்.

512. தாதா- பாபம் நீக்கிப் புனிதப்படுத்துபவர்.

513. தாநவ மோஹநः- அசுர இனத்தை அவர்களது குரூர இயல்பை யொட்டி நல்வழி செல்ல முடியாதவாறு குழப்புபவர். அமுதத்தைப் பங்கிடுகையில் அசுரர் பங்கு பெறாமல் பெண்வடிவெடுத்து தன்வனப்பால் மயக்கிய நாராயண மோஹினியும் இவரே.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



514. தயாவாந்- பரிவு மிக்கவர். தன் பக்தர் துயர் நீக்க பேரிரக்கம் கொள்பவர்.

515. திவ்யவிபவஃ- தெய்விகப் பெருமை மிக்கவர். பெருஞ் செல்வமளிப்பவர்.

516. தண்டப் ப்ருத்- தண்டாயுதம் ஏந்தியவர். அரச நீதியைக் காப்பவர்.

517. தண்ட நாயகஃ- செங்கோலாட்சி நன்கு நடைபெறச் செய்பவர். யமன் இந்திரன் முதலிய கோலாட்சி புரிபவரையும் கட்டுப்படுத்துபவர்.

தந்தப்ரபிந்நாப்ப்ரமாலோ தைத்யவாரணதாரண:।
தம்ஷ்ட்ராலக்நத்விபக்கடோ தேவார்த்தந்ருகஜாக்ருதிஃ ॥ 96

518. தந்தப்ரபிந்நாப்ப்ரமாலஃ- தலையசைத்துத் தந்தங்களால் மோதி மேகவரிசையைச் சிதற அடிப்பவர். (நா.120).

519. தைத்யவாரண தாரணஃ- அசுரர்கள் அணிவகுத்து முன்னேறுவதைத் தடுத்து பிளப்பவர்.

520. தம்ஷ்ட்ராலக்நத்விபகடஃ- தெற்றிப்பல்லில் இடுக்கி யானைப் படையை நசுக்குபவர்.

521. தேவார்த்த ந்ருகஜாக்ருதிஃ- தேவர்கள் வேண்ட யானை - மனித உருவெடுத்தவர். பரம் பொருள் தனக்கெனத் தனித்து வடிவமைப்பு கொள்ளாத போதும் பக்தர்களுக்கு நேர்கிற நெருக்கடியை மாற்ற - இயல்பாகக் கூடாததையும் கூட்டி வடிவெடுப்பதுண்டு. மனித உடலில் யானைமுகப் பொருத்தமும் இத்தகையதே. மனித உடலுக்கு இதத்தை யானையின் தலை (மூளை) சிந்தியாது. யானை சிந்திப்பதை மனித உடல் நிறை வேற்ற இயலாது. இந்தச் சேராச் சேர்க்கையே இறைவனின் லீலை. (இனி ध வின் தொடங்குகிற நாமங்கள்).

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



த்தநத்தாந்யபதிர் த்தந்யோ த்தநதோ த்தரணீ தரஃ।
த்த்யாநைகப்ரகடோ த்த்யேயோ த்த்யாநம் த்த்யான பராயணஃ ॥ 97

522. த்தநத்தாந்யபதிஃ- பொருளேயும் பொருளால் பெறப் பெறுவதையும் தருபவர். தநம்-செல்வம், தான்யம்-செல்வத்தைப் பயன்படுத்திப் பெறுகிற வாழ்க்கை வசதி - அரிசி முதலியவை. இவற்றைத் தன் பொறுப்பில் கொண்டு தக்கவருக்கு வழங்குபவர்.

523. த்தந்யஃ- செயல் நிறைவால் மகிழ்பவர். செல்வமும் செல்வத்தைப் பெற உதவுகிற புண்யமுமுள்ளவர்.

524. த்தநதஃ- செல்வமும் புண்யமும் வழங்குபவர்.

525. த்தரணீத்தரஃ- பூமியைத் தன் நிலேயில் நிற்கத் தாங்குபவர். பூமியைத் தாங்குகிற ஆதிஶேஷன், திக்கஜங்கள் முதலான வற்றின் ஆற்றலாக விளங்குபவர்.

526. த்த்யாநைகப்ரகடஃ- தியானத்தால் மட்டும் புலப் படுபவர்.

527. த்த்யேயஃ- தியானிக்கத் தக்கவர்.

528. த்த்யாநம்- தியானம் எனும் ஒரு முனேப்பட்ட சித்தப் போக்கானவர்.

529. த்த்யாநபராயண:- தியானத்தில் ஆழ்ந்த கருத்துள்ளவர். தியானிக்கத் தக்க தேவன். தியான மெனும் சித்த ஆற்றல், தியானம் செய்பவர், என்ற திரிபுடி வடிவானவர். (நா. *527-529*).

நந்த்யோ நந்திப்ரியோ நாதோ நாதமத்த்யப்ரதிஷ்ட்டிதஃ।
நிஷ்கலோ நிர்மலோ நித்யோ நித்யாநித்யோ நிராமயஃ ॥ 98

530. நந்த்யஃ- மகிழ்விக்கத் தக்கவர். மேலான சுகம் பெற உதவுபவர். நந்தஃ என்றும் பாடம். ஆனந்தமே உருவானவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



531. நந்திப்ரியஃ- நந்திகேசுவரரிடம் பிரியமுள்ளவர், நந்திகேசுவரருக்குப் பிரியமானவர்.

532. நாதஃ- உள்ளத்தில் எழும் சூட்சும ஒலிவடிவானவர்.

533. நாதமத்த்யப்ரதிஷ்ட்டிதஃ- நாதயோகத்தால் நாத மத்தியில் இருப்பவராக உணரப்படுபவர். நாதயோகத்தால் மனம் நாதத்தில் லயிக்க நாதம் விரிந்து வேறொன்றும் புலப்படா நிலையில் நடுவே கீற்றொளிபோல் துலங்குபவர்.

534. நிஷ்கலஃ- உருவகப்படுத்த உதவுகிற அவயவ அமைப்பில்லாதவர்.

535. நிர்மலஃ- மாசு மருவற்றவர்.

536. நித்யஃ- தேய்வும் அழிவுமற்ற பூர்ண நிலையுள்ளவர்.

537. நித்யாநித்யஃ- அழிவுறுவதும் அழிவற்றதுமான அனைத்துமானவர்.

538. நிராமயஃ- பிணியற்றவர். (நா. 365) வினை, அறியாமையெனும் பெரும் பிணியற்றவர்.

**பரம் வ்யோம பரம் தாம பரமாத்மா பரம் பதம். ।**
**பராத்பரஃ பஶுபதிஃ பஶுபாஶவிமோசகஃ ॥ 99**

539. பரம் வ்யோம- பர வெளியாயிருப்பவர். ஊழிக் காலத்தில் எல்லாம் ஒன்றுக்குள் ஒன்றாக அடங்கி உருவிழந்து ஆகாயமும் லயமடைந்து, பரவெளி மட்டும் மீதமாகும். அந்தப் பரவெளியானவர்.

540. பரம் தாம- பெருஞ் சோதியானவர். இதனை யடைந்தவர் திரும்பப் பிறக்கமாட்டார். தத் தாம பரமம் மம (கீதை).

541. பரமாத்மா- ஜீவர் அனைவருக்கும் மூலமான ஆத்மா.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



542. பரம் பதம்- அனைத்திற்கும் மேலான இடம். அடைய வேண்டிய உயர் நிலை. பலவற்றிற்கும் மேலான நிலை.

543. பராத்பர:- முன்னதற்கும் முன்னவர், மேலானதற்கும் மேலானவர், அப்பாற்பட்டதற்கும் அப்பாற்பட்டவர். அனைத்தையும் சூழ்ந்திருப்பவர், தேவர் முதலானோருக்கும் மூத்தவர்.

544. பஶுபதிः- உயிரின மனைத்திற்கும் தலைவர். தன் நிலை உணராமல் உணர்ச்சிவசப்பட்டு உழல்கிற ஜீவர் பசு. அவர்களைக் கட்டுக் குட்படுத்தி வழி நடத்துபவர்.

545. பஶு பாஶ விமோசநः- பிரமன் முதல் புழுவரை அனைவரும் பசுக்களே. அவர்களைக் கட்டியுள்ள பிணைக் கயிறுகள் பாசங்கள் - அறியாமை, அஹங்காரம், சுகம்-துக்கம் முதலிய துவந்துவங்கள். விருப்பு - வெறுப்பு, புண்யம், பாபம் வாஸனை, ஸம்ஸ்காரம் என்று பலவாறு கட்டுப்படுத்துபவை, இவற்றிலிருந்தும் விடுவிப்பவர். வினையெனும் கயிற்றைக் கொண்டு ஜீவர்களைக் கட்டுகிற இறைவனே அவர்களைக் கட்டிலிருந்தும் விடுவிக்கிறார்.

பூர்ணாநந்தः பராநந்தः புராண புருஷோத்தமः ।
பத்மப்ரஸந்நநயநः ப்ரணதாஜ்ஞாநமோசநः ॥ 100

546. பூர்ணாநந்தः- நிறைந்து தளும்புகிற ஆனந்த வடிவினர். ஆனந்தத்தை விளைவிப்பவர், விளைவு, விளைவிக்கப்பட்ட ஆனந்தம் என்ற திரிபுடியால் பெற்ற ஆநந்தம் பூர்ண மாகாது. விளைவிப்பவனது குறை, விளையும் முறையில் குறை இவை இதன் மூலம் பெறுகிற ஆனந்தத்தில் குறை ஏற்படுத்தும். மனித ஆனந்தம் தேவ ஆனந்தம் முதலியவை குறையுள்ளவை. ஆனந்தமே வடிவான பரம் பொருள் மட்டும் பூர்ணமான ஆனந்தம்.

547. பராநந்தः- மனித ஆனந்தம் முதலான பல ஆனந்தங்களுக்கும் மேம்பட்ட ஆனந்தமானவர்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



548. புராணபுருஷோத்தமஃ- அழியும் தன்மையுள்ள க்ஷரப்பொருள்களாலான உடல் மனம் முதலியவற்றிற்கும் அக்ஷரமான கூடஸ்த ஆத்மாவிற்கும் அப்பால், ஸ்தூலம் ஸூட்சுமம், காரணம் என்ற மூன்று கோசங்களிலும் ஊடுருவி நின்றும் அவற்றில் ஒட்டாமல் நிற்கிற புருஷோத்தமனுக பரமாத்மாவாக உள்ளவர்,

549. பத்மப்ரஸன்ன நயனஃ- தாமரை போன்ற மலர்ந்து தெளிந்து அழகிய கண்கள் உள்ளவர்.

550. ப்ரணதாஜ்ஞான மோசநஃ- திருவடி பணிந்தவரின் அறியாமையைப் போக்குபவர்.

ப்ரமாணப்ரத்யயாதீத: ப்ரணதார்திநிவாரணஃ।
ப்பலஹஸ்தஃ ப்பணிபதிஃ ப்பேத்காரஃ ப்பாணிதப்ரியஃ॥ 101

551. ப்ரமாணப்ரத்யயாதீதஃ- புலனறிவாலான அளவு முறைக்கும் அளவிற்கும் அதனுல் பெறப்படுகிற அறிவிற்கும் வெளியே நிற்பவர். பேரறிவைச் சிற்றறிவால் அளவிட-முடியாது.

552. ப்ரணதார்த்தி நிவாரணஃ- புகலடைந்தவரின் துயர் தீர்ப்பவர். (இனி ফ 'ப்ப'' வில் தொடங்குகிற நாமங்கள்)

553. ப்பலஹஸ்தஃ- பலனேக் கையில் கொண்டவர் மாதுளம் பழம், மாம்பழம் முதலிய இனிய பழங்களேப் பக்தர்களுக்கு அளிக்கக் கையில் வைத்திருப்பவர். விரும்பிய பலனே விரும்பியவாறு உடன் எளிதில் தருபவர்.

554. ப்பணிபதிஃ- வாஸுகி ஆதிசேஷன் என்ற நாகத் தலேவர்களின் தலேவர். அன்புடன் அவர்களே அரவணேப்பவர். அதனுல் உடல் முழுவதும் அவர்களே அணியாக, மாலேயாக, பூணூலாகத் தரிப்பவர்.

555. ப்பேத்காரஃ - ப்பேத் எனப் பிளிறுபவர். ப்பேத்கார ஆகமத்தின் உட்பொருளானவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



556. ப்பாணிதப்ரியஃ - வெல்லப்பாகை விரும்புபவர். ''பாகும் பருப்புமிவை நான் தருவேன்'' ஔவையார் (இனி ब வில் தொடங்குகிற நாமங்கள்).

பாணார்ச் சிதாங்க்ரியுகளோ பாலகேலிகுதூஹலீ।
ப்ரம்ஹ ப்ரம்ஹார்சிதபதோ ப்ரம்ஹசாரீ ப்ருஹஸ்பதிஃ ॥ 102

557. பாணார்ச்சிதாங்க்ரியுகலஃ - பாணாஸுரனுல் திருவடிகளில் வழிபடப்பெற்றவர்.

558. பாலகேலிகுதூஹலீ- சிறுவர் கேளிக்கையில் உற்சாகம் உள்ளவர். இவரது பாலலீலை பல கவிகளால் சித்தரிக்கப்பட்டுள்ளது.

559. ப்ரம்ஹ- பரம்பொருள், வேதம், வேதமோதிய அந்தணன். தவம். பிரும்மத்தின் ஸகுணவடிவம் இவை அனைத்துமாயிருப்பவர்.

560. ப்ரம்ஹார்சிதபதஃ- வேதத்தாலும் பிரும்மாவாலும் திருவடிகளில் வழிபடப்பெற்றவர்.

561. ப்ரம்ஹசாரீ- பிரும்மசரியத்தில் இருப்பவர். திருமண மாகாதவர். வல்லபா ஸித்தி புத்தி முதலான தேவியர் பிரும்மசர்ய சக்திகளின் வெளிப்பாடு. பிரும்ம நிலைக்கான ஸாதனைபுரிவது ப்ரம்ஹசர்யம். அதில் வேதமோதுதல், பற்றற்றிருத்தல், தவம் முதலியன அடங்கும்.

562. ப்ருஹஸ்பதிஃ- ப்ருஹத் - பிருஹதீ - வாக்கு. அதன் அதிபதியான தேவகுரு பிருஹஸ்பதியாயிருப்பவர்.

ப்ருஹத்தமோ ப்ரம்ஹபரோ ப்ரம்ஹண்யோ ப்ரம்ஹவித்ப்ரிய:।
ப்ருஹந்நாதாக்ர்ய சீத்காரோ ப்ரம்ஹாண்டாவளி மேகல: ॥ 103

563. ப்ருஹத்தமஃ - மிகப்பெரியவர். பெரியவர்களான மும்மூர்த்திகளுக்கும் பெரியவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



564. ப்ரம்ஹபரः - வேதத்தில் ஈடுபாடு மிக்கவர். பிரும்மாவை விட மேம்பட்டவர்.

565. ப்ரம்ஹண்யः - வேதமோதிய அந்தணர்களுக்கு இதம் புரிபவர்

566. ப்ரம்ஹவித்ப்ரியः - வேதமோதியவர், பிரும்ம ஞானி இவர்களிடம் பிரியமுள்ளவர்.

567. ப்ருஹந்நாதாக்ர்யசீத்காரः - இடியொலியை விஞ்சுகிற பேரொலியுடன் பிளிருபவர்.

568. ப்ருஹ்மாண்டாவளிமேகலः - இடுப்புச்சங்கிலியில் பிரும்மாண்டங்களை வரிசையாகத் தொங்க விட்டுள்ளவர். இனி भ 'ப்ப' வில் தொடங்குபவை.

ப்ப்ரூக்ஷேபதத்தலக்ஷ்மீகோ ப்பர்கோ ப்பத்ரோ ப்பயாவஹः।
ப்பகவான் ப்பக்திஸுலபோ ப்பூதிதோ ப்பூதிபூஷண: ॥ 104

569. ப்புரூக்ஷேபதத்தலக்ஷ்மீகः - பக்தர்களின் விருப்பமறிந்து புருவ அசைவாகிய குறிப்பால் உணர்த்திச் செல்வம் வழங்கச் செய்பவர்.

570. ப்பர்கः - காயத்ரி மந்திரத்தின் உட்பொருள். சிவன், பேரொளி, தீயதைச் சுட்டெரிக்கிற நெருப்பு. இவைகளானவர்

571. ப்பத்ரः - மங்களமானவர், பத்ரம் என்ற யானை இனத்தைச் சார்ந்தவராகத் தன்னை முகத்தின் மூலம் பெருமைப்படுத்திக் கொள்பவர்.

572. ப்பயாபஹः - பயத்தை நீக்குபவர். ஜனனமரணபயம் நீக்குபவர்.

573. பகவான் - பகம் என்ற பேராளுமையுடையவர். உலகின் தோற்றம், மறைவு, உயிரினத்தோற்றம், அவற்றின் போக்கு, கல்வியறிவு, உயிரினத்தின் இயல்பான அறியாமை இவற்றை நன்கு அறிந்த பேராளுனர். பேராண்மை, வீரியம்,

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



புகழ், செல்வம், உள்ளறிவு, உலக அறிவு இவைகளின் உடமையாளர்.

574. ப்பக்திஸுலபः - பக்தியால் எளிதாக அடையக் கூடியவர்

575. ப்பூதிதः- பெருமையும் செல்வமும் அளிப்பவர்.

576. ப்பூதிப்பூஷண: - விபூதியணிந்தவர்.

ப்பவ்யோ ப்பூதாலயோ ப்போகதாதா ப்ப்ரூமத்த்ய கோசரः ।
மந்த்ரோ மந்த்ரபதிர் மந்த்ரீ மதமத்த மனோரமः ॥ 105

577. பவ்யः- பாக்கியவடிவானவர். எழிலே உருவானவர். இனித்தோன்ற விருக்கின்ற உலகமாயிருப்பவர்.

578. ப்பூதாலயः - ஐம்பூதங்களுக்கும் உயிரினத்திற்கும் இருப்பிடம். தோன்றி மறைந்தனைத்தும் சென்றடைந்த இடம்.

579. ப்போகதாதா - வினைப்பயனாக சுகதுக்க அனுபவம் தருபவர்.

580. ப்ப்ரூமத்த்யகோசரः - அவிமுக்தமெனும் புருவங்களின் இடையே யோகிக்குப் புலப்படுபவர்.

581 மந்த்ரः - மந்திரம் - மனத்தளவில் ரகசியமாகக் காப்பாற்றப்படுவது, உபாசனைக்கான மந்திரம், அரசியல் ஆலோசனை மற்றும் மனமாட்சி, இவற்றின் வடிவானவர்.

582. மந்த்ரபதிः - மந்திரங்களின் தலைவர், பாதுகாப்பவர். மந்திரத்தின் தேவதை.

583. மந்த்ரீ - மந்திரம் ஜபிப்பவர் (மந்திரம், மந்த்ரத்தின் தேவதை மந்திரம் ஜபிப்பவன் (நா. 581-583) என்ற திரிபுடி இவரே) மந்திரத்தைத் தோற்றுவித்தவர். மந்திரத்தைத் தமதாக்கிக் கொண்டவர். மந்திர ஆலோசனை தருபவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



584. மதமத்தமனோரமః - வெளியுணர்வு சிறிதுமற்று உள்ளுணர்வு ததும்புகிற - மதர்த்த சித்த நிலையான ஸமாதியில் மனத்தை ஈர்த்தவர். மனம் ஒன்றி வேற்றுணர்வின்றி உள்ளானந்தத்தில் திளைக்கிற ஸமாதி இறையருளால் கூடும்.

மேக்கலாவான் மந்தகதிர் மதிமத் கமலேக்ஷணః ।
மஹாபலோ மஹாவீர்யோ மஹாப்ராணோ மஹாமநாః ॥ 106

585. மேக்கலாவான் . முஞ்சைப்புல்லாலான கயிற்றை இடுப்பணியாகக் கொண்ட பிரும்மச்சாரி வடிவில் இருப்பவர்.

586. மந்தகதிః - வேறு கதியற்றமந்தர்களுக்கும் புகலிடம். மெல்லியல்பும் மென்னடையும் கொண்டவர்.

587. மதிமத்கமலேக்ஷணః - அறிவுடன் செல்வத்தைத் தருகிற அருள் நோக்குள்ளவர். அறிவில்லாதவனிடம் செல்வம் கேட்டிற்கு இடம் தரும். 'அமேதஸோ ஹி ஶ்ரீ: அநர்த்தாய' (சங்கரர்)

588. மஹாபலః - பெருவலிவு கொண்டவர்.

589. மஹாவீர்யః - பெரும் உள்ளுரமுள்ளவர். மாவீரர்.

590. மஹாப்ராணః - உள்வலிவு மிக்கவர்.

591. மஹாமநாః - பெருமனம் படைத்தவர். உள்ளத்துவலிவு மிக்கவர்.

யஜ்ஞோ யஜ்ஞபதிர் யஜ்ஞ கோப்தா யஜ்ஞப்பலப்ரதః ।
யஶஸ்கரோ யோககம்யோ யாஜ்ஞிகோ யாஜகப்ரியః ॥ 107

592. யஜ்ஞః - வேள்வி வடிவினர். தனது என்ற மனச்சார்பின்றி இறைவனளித்ததை இறைவனருளால் இறைவனிடம் சேர்க்கிற நற்கருத்துடன் புரிவது (அஹந்தா - மமதாத்யாகம்) வேள்வியாகும்.

593. யஜ்ஞபதிః - வேள்வியால் வழிபடப்பெறுகிற தேவதையானவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



594. யஜ்ஞகோப்தா - இடையூறின்றி முறை வழுவாமல் நிறைவேறும்படி வேள்வியைக் காப்பவர்.

595. யஜ்ஞபலப்ரதః - வேள்வியைப் புண்யமாக்கி நன்மையைத் தருபவர்.

596. யஶஸ்கரః - புண்யச் செயலுக்கான புகழைத் தருபவர்.

597. யோககம்யః - சித்தக் கட்டுப்பாட்டினால் அடையக்கூடியவர்.

598. யாஜ்ஞிகః - வேள்வி புரிபவர். வேள்வி புரிபவர் (நா 598) வேள்வியின் தேவதை (நா 593) வேள்வி (நா 592) என்ற திரிபுடியாகி அதன் பலனும் (நா 595) ஆனவர்.

599. யாஜகப்ரியః - வேள்வி புரிபவரிடம் அன்புள்ளவர் வேள்வி புரிபவரின் அன்பிற்குரியவர்.

ரஸோ ரஸப்ரியோ ரஸ்யோ ரஞ்ஜகோ ராவணார்ச்சிதः ।
ரக்ஷோ ரக்ஷாகரோ ரத்நகர்ப்போ ராஜ்யஸுகப்ரதः ॥ 108

600. ரஸः - ரஸம் என்பது அதுவே (ரஸோ வை ஸः) என வேதம் சுட்டிக்காட்டுகிற பிரும்மானந்தமானவர்.

601. ரஸப்ரியः - சாந்தம், கருணை முதலிய காவியச் சுவைகளில் ஈடுபாடுள்ளவர். இனிப்பும் மற்ற சுவையும் இவருக்கு விருப்பமானதே.

602. ரஸ்யः - ஆனந்தப் பொருளாகத் திகட்டாமல் சுவைக்கத்தக்கவர். மீண்டும் மீண்டும் பாவனையால் சித்தத்தில் அமர்த்தி ரசிக்கத்தகுந்தவர்.

603. ரஞ்ஜகः - மனத்தைக் களிக்கச் செய்பவர். யோக வழியில் செல்பவருக்கு உள்ளுணர்வில் மனம் பதியும்படி ஈர்ப்பவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



604. ராவணார்ச்சிதঃ - ராவணனால் வழிபடப்பெற்றவர். வேதம், துதிப்பாடல் முதலியவற்றை உரக்கச் சொல்லிப் (ராவணம்) போற்றப் பெறுபவர்.

605. ரக்ஷோ ரக்ஷாகரঃ - அரக்கரிடமிருந்து காப்பாற்று பவர். அரக்கரைச் சாம்பலாக்குபவர் (ரக்ஷா - விபூதி, சாம்பல்)

606. ரத்நகர்ப்பঃ - ரத்னங்களை வயிற்றில் கொண்டவர். ரத்ன கர்ப்பகணபதியாக வழிபடப்பெறுபவர்.

607. ராஜ்யஸுகப்ரதঃ - அரசுரிமையையும் சுகத்தையும் தருபவர்.

**லக்ஷ்யம் லக்ஷப்ரதோ லக்ஷ்யோ லயஸ்த்தோ லட்டுகப்ரியঃ।**
**லாநப்ரியோ லாஸ்யபரோ லாபக்ருல் லோகவிஶ்ருதঃ ॥ 109**

608. லக்ஷ்யம் - வாழ்வின் இலக்கானவர். ஓம் எனும் வில்லில் ஆத்மா எனும் அம்பைப்பூட்டிச் செலுத்தி அடையக் கூடிய இலக்கான பிரும்மம். யோகியரின் தியானத்திற்கும் பக்தரின் வழிபாட்டிற்கும் இலக்கானவர்.

609. லக்ஷப்ரதঃ- மனத்தை நிலைநிறுத்துகிற யோக நெறிகளை அருள்பவர்.

610. லக்ஷ்யঃ- உபநிடத மஹாவாக்கியங்களால், லக்ஷணையால் உள்ளுறைப் பொருளாக உணர்த்தப் பெறுபவர்.

611. லயஸ்த்த:- பிரளயத்திற்குப் பின்னரும் மிகுந்துள்ளவர். யோகியரின் மனலயத்தின் பின் தனித்து உணர ப்பெறுபவர்.

612. லட்டுகப்ரிய:- லட்டுகளை விரும்புபவர்.

613. லாந ப்ரிய:- கட்டுத்தரியில் பிணைக்கப்பெறுவதை விரும்புபவர். லட்டுதின்பதிலும் கட்டுப்படுவதிலும் ஒரேவித மான ஆர்வமுள்ளவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



614. லாஸ்யபரః - ஆடல் பாடல் அபிநயம் என்ற மூன்றில் ஆர்வமுள்ளவர். பேரானந்தமான தன் நிலையில் ஆழ்ந்திருப்பவர்.

615. லாபக்ருத் - லோகவிஶ்ருதః - விரைவில் பலனளிக்கிற தெய்வங்களிடையே சிறந்தவர் என்று போற்றப்படுபவர்.

வரேண்யோ வந்ஹிவதநோ வந்த்யோ வேதாந்தகோசரః ।
விகர்தா விஶ்வதஶ்சக்ஷுர் விதாதா விஶ்வதோமுகః ॥ 110

616. வரேண்யః - சிறந்தவர், விரும்பத்தக்கவர் - வரேண்யன் என்ற அரசனால் அத்வைத பாவனையால் வழிபடப் பெற்றதால் இவரும் வரேண்யர்.

617. வந்ஹிவதநః - அக்னியைத் தன் வாயாக்கி அதில் ஹோமம் செய்யப்பெற்றதை ஏற்பவர்.

618. வந்த்யః - வணங்கத்தக்கவர்

619. வேதாந்தகோசரః- உபனிடதங்களில் உட்பொருளாகக் காணப்பெறுபவர்.

620. விகர்தா - மாறுபடச் செய்பவர். ஒவ்வொன்றும் தோற்றம் முதல் மறைவு வரை பல மாறுபாடுகளை அடைவது இறைவனின் ஸங்கல்பத்தால் தான். தோன்றுதல், இருத்தல், வளர்தல், நிறைவு, தேய்வு, மறைதல் என்ற மாறுபாட்டின் வரிசை அனைத்திற்கும் உண்டு.

621. விஶ்வதஶ்சக்ஷுః - எங்கும் நோக்குள்ளவர். பக்தன் தருகிற இலை பூ பழம் நீர் எதனையும் அருள் நோக்கோடு கண்டு கொள்பவர்.

622. விதாதா - செயல் நேர்த்தியும் திறமையும் காட்டிப் பணிகளைப் புரிபவர்.

623. விஶ்வதோமுகః - எங்கும் முகமாக நின்று பக்தன் அளிப்பதை அங்கேயே உண்டு களிப்பவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



வாமதேவோ விஶ்வநேதா வஜ்ரிவஜ்ரநிவாரணஃ ।
விஶ்வபந்த்தந விஷ்கம்ப்பாதாரோ விஶ்வேஶ்வரப்ரபுஃ ॥ 111

624. வாமதேவஃ - எழில் மிக்க தேவர். ஸத்யோஜாதர் முதலான சிவபெருமானின் ஐந்து தோற்றங்களில் ஒருவர் *(நா 369)*

625. விஶ்வநேதா - உலகின் வழிகாட்டி. விஷ்ணுவிற்குச் சங்கும் சக்கிரமும் பெற வழிகாட்டியவர்.

626. வஜ்ரிவஜ்ரநிவாரணஃ - இந்திரனின் வஜ்ராயுதத்தைச் செயலிழக்கச் செய்தவர்.

627. விஶ்வபந்த்தந விஷ்கம்ப்பாதாரஃ - உலகைப் படைத்துக் கட்டடமமைக்க அடித்தளமானவர். (அஸ்திவாரம்)

628. விஶ்வேஶ்வரப்ரபுஃ - உலகிற்கும் அதன் அதிபர்களுக்கும் அதிபர்.

ஶப்தப்ரம்ஹ ஶமப்ராப்யஃ ஶம்ப்புஶக்தி கணேஶ்வரஃ ।
ஶாஸ்தா ஶிகாக்ரநிலயஃ ஶரண்யஃ ஶிகரீஶ்வரஃ ॥ 112

629. ஶப்தப்ரம்ஹ - பிரும்மரந்திரத்தில் வெளிப்படும் ஒலியாக ஓங்காரமாக நாதவடிவில் இருப்பவர். மூலாதாரத்தில் ஒலியின் பரா என்ற மூல நிலையானவர்.

630. ஶமப்ராப்யஃ - புலனடக்கத்தாலும் மனவடக்கத்தாலும் பெறத்தக்கவர்.

631. ஶம்ப்பு ஶக்தி கணேஶ்வரஃ - சிவகணங்களுக்கும் சக்திகணங்களுக்கும் தலைவர்,

632. ஶாஸ்தா - ஐயப்பனாக விளங்குபவர்.

633. ஶிகாக்ர நிலயஃ - இதயஜ்யோதியின் நுனியில் பழுத்து முதிர்ந்த நெல்முனை போல் கூராக ஒளிர்பவர்.

634. ஶரண்யஃ - சிறந்த புகலிடம்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



635. ஸிகரீஸ்வரஃ - இமவானை மாதாமஹராக்கி ஆட்டுவிப்பவர்.

ஷட்ருது குஸும ஸ்ரக்வீ ஷடாதாரஃ ஷடக்ஷரஃ।
ஸம்ஸாரவைத்யஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வ பேஷஜ பேஷஜம் ॥ 113

636. ஷட்ருது குஸுமஸ்ரக்வீ - ஆறு பருவங்களிலும் மலர்கிற மலர்களாலான மாலை கொண்டவர்.

637. ஷடாதாரஃ - மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், ஆஜ்ஞை என்ற ஆறு ஆதாரங்களில் இருப்பவர்.

638. ஷடக்ஷரஃ - ஆறெழுத்து கொண்ட வக்ரதுண்ட மந்திரம் கொண்டவர்.

639. ஸம்ஸார வைத்யஃ - பிறவிப்பிணியைத்தீர்க்கிற மருத்துவர்.

640. ஸர்வஜ்ஞஃ - எல்லா மறிந்தவர். ஸர்வஜ்ஞர் என்ற புத்தரானவர்.

641. ஸர்வபேஷஜ பேஷஜம் - அனைத்து நோய்க்கும் மருந்தான அமுதத்திற்கும் குறை நீக்குகிற பெருமருந்து.

ஸ்ருஷ்டிஸ்த்திதிலயக்ரீடஃ ஸுரகுஞ்ஜரபேதநஃ।
ஸிந்தூரிதமஹாகும்ப்பஃ ஸதஸத்வ்யக்தி தாயகஃ 114

642. ஸ்ருஷ்டிஸ்த்திதிலயக்ரீடஃ - விளையாட்டாகப் படைப்பையும் காப்பையும் லயத்தையும் செய்பவர்.

643. ஸுரகுஜ்ஞரபேதநஃ - தேவர்களின் யானையான ஐராவதத்தையும் தேவர்களில் சிறந்தவர்களையும் சிதற அடிப்பவர்.

644. ஸிந்தூரிதமஹாகும்ப்பஃ - சிந்தூரத்தால் சிவந்த பெருமத்தகத்தையுடையவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



645. ஸதஸத்வ்யக்திதாயகः - மெய்ப்பொருளான (ஸத்தான) பரம் பொருளையும் ஸத்தல்லாத (அஸத்தான) உலகையும் தனித்து உணரும்படி பக்தருக்கு விளக்குபவர்.

ஸாக்ஷீ ஸமுத்ரமதநः ஸ்வஸம்வேத்யः ஸ்வதக்ஷிணः ।
ஸ்வதந்த்ரஸ் ஸத்யஸங்கல்பः ஸாமகாநரதः ஸுகீ ॥ 115

646. ஸாக்ஷீ - நேரிடையாகக் கண்டுகொள்பவர். மனிதன் முதலானோர் கண் மனம் புத்தி முதலிய கரணங்களின் உதவி கொண்டே அவை காட்டுமளவே உணர்வது போலில்லாமல் கரணமின்றி, குறுக்கீடின்றிக் காண்பவர்.

647. ஸமுத்ர மதநः - இடையூறுகளை அகற்றிப் பாற்கடல் கடைதலை நிறைவுறச்செய்தவர்.

648. ஸ்வஸம்வேத்யः - தானே தன்னை விளக்கிக் கொள்பவர். வெளிப்பொருளை உணர ஒளியும் கண்களும் உதவுமாப்போல், இறைவனை உணர வேறு எதுவும் உதவாது. அவரருளால் அவரைக் காணலாம். அவர் விருப்பத்திற்கேற்ப அவர் அருள் கிட்டும். தானே தன்னை வெளிப்படுத்திக் கொண்டாலன்றி, உணரமுடியாதவர்.

649. ஸ்வதக்ஷிணः - உபகரணங்களின்றித் தன் ஸங்கல்பத்தால் மட்டும் திறம்படச் செயல்படுபவர்.

650. ஸ்வதந்த்ரः - தன்னிச்சையாகச் செயல்படுபவர்.

651. ஸத்யஸங்கல்பः - அவரது இச்சையே செயலாகும். இச்சைக்கும் செயலுக்கும் இடையே தடையில்லை. தன் ஸங்கல்பம் உண்மையாக நிறைவுறச்செய்பவர்.

652. ஸாமகாநரதः - ஸாமவேத கானத்தில் ஆர்வமுள்ளவர்.

653. ஸுகீ - எப்போதும் தடைபடாத குறையாத சுகமுள்ளவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



ஹம்ஸோ ஹஸ்தி பிஶாசீஶோ ஹவநம் ஹவ்யகவ்யபுக் ।
ஹவ்யோ ஹுதப்ரியோ ஹர்ஷோ ஹ்ருல்லேகாமந்த்ரமத்த்யகঃ ॥

654. ஹம்ஸঃ - ஹம்ஸரான துறவி, ஹம்ஸர் என்ற யோகி, ஸூர்யன், தூய்மை மிக்க ஆத்மா இவர்கள் வடிவில் இருப்பவர்.

655. ஹஸ்திபிஶாசீஶঃ - ஹஸ்திபிசாசி (நீலஸரஸ்வதி - உச்சிஷ்டசாண்டாலி) என்ற சக்தியின் ஈசனுக உச்சிஷ்ட கணபதியாக ஒன்பது அக்ஷரங்கள் கொண்ட மந்திரத்தின் தேவதை.

656. ஹவனம்- ஹோமமாக நிகழ்த்துகிற வேள்வியானவர்.

657. ஹவ்யகவ்யபுக் - அக்கினியில் தேவர்களுக்காக இடுவது ஹவ்யம், பித்ருக்களுக்காக இடுவது கவ்யம், இரண்டையும் இரு இனத்தவருக்கும் அளிக்க அக்கினியை வாயாகக் கொண்டு ஏற்று உண்பவர்.

658. ஹவ்யঃ - அக்னியில் இடுகிற ஆஹுதிப் பொருளானவர்.

659. ஹுதப்ரியঃ - ஆஹுதி செய்தபொருளை அதனதன் தேவதையாயிருந்து விரும்பி ஏற்பவர்.

660. ஹர்ஷঃ - ஆஹுதி ஏற்ற தேவதைகளின் திருப்தியாக ஸந்தோஷமாக இருப்பவர். ஹோமம் என்றசெயல், அதனைச் செய்பவர், அதனுல் வழிபடும் தெய்வம், அதன் திருப்தி என்ற நான்கும் அவரே.

661. ஹ்ருல்லேகாமந்த்ர மத்த்யகঃ - மாயா - ஹ்ருல்லேகா என்ற பெயருள்ள ஹ்ரீம் என்ற பீஜாக்ஷரத்தின் உட்பொருளானவர். இந்த அக்ஷரத்தின், கூட்டெழுத்துக்களான ஹ - ஆகாயம். ர அக்னி, ஈம் ஆற்றல். வானாகப்பரவி அக்னியாக விழுங்கிப் பேராற்றல் விளைவிப்பவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



க்ஷேத்ராதிப: க்ஷமாப்பர்த்தா க்ஷமாபரபராயண: ।
க்ஷிப்ரக்ஷேமகர: க்ஷேமாநந்த: க்ஷோணீஸுரத்ரும: ॥ 117

662. க்ஷேத்ராதிப: - நற்பயன் விளையும் படி பண்படுத்திய உடல் மனம் முதலிய க்ஷேத்திரத்தின் காப்பாளர். பிரயாகை காசி ஸ்ரீரங்கம் காஞ்சி போன்ற புனிதத்தலங்களுக்கு அதிபர்.

663. க்ஷமாப்பர்தா - பூமியையும் பொறுமையையும் சுமப்பவர்.

664. க்ஷமாபரபராயண: - பொறுமை மிக்க பெரியோர்கள் சென்றடையுமிடம்.

665. க்ஷிப்ரக்ஷேமகர: - விரைவில் நன்மை நிறையச் செய்பவர்.

666. க்ஷேமாநந்த: - இம்மையின் நன்மையும் மறுமையின் ஆனந்த முமாக விளங்குபவர்.

667. க்ஷோணீஸுரத்ரும: - பூமியில் கல்பக மரமாக இருந்து விரும்பியதைத் தருபவர்.

இதுவரை அ முதல் க்ஷ வரையிலான எழுத்துக்களை முதல் எழுத்துக்களாகக் கொண்ட நாமங்களின் அமைப்பு. இனி கற்பகவிருக்ஷமாக விரும்பியதைத்தருகிற ஸ்ரீமஹா கணபதி அருள்பாலிப்பதை விளக்குகிற நாமங்கள். *(668-688)*.

தர்மப்ரதோ (அ)ர்த்தத: காமதாதா ஸௌபாக்யவர்த்தந: ।
வித்யாப்ரதோ விபவதோ ப்புக்தி முக்திப்பலப்ரத: ॥ 118

668. தர்மப்ரத: - அறச்செயலையும் அதனால் விளைகிற புண்யத்தையும் அதன் பலனான இன்பத்தையும் தருபவர்.

669. அர்த்தத: - பொருள், வசதி, பெருமை மற்றும் அதனால் விளைகிற இன்பம் இவற்றைத் தருபவர்.

670. காமதாதா - இல்லறம், அதன் இன்பம் இவற்றைத்தருபவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



671. ஸௌபாக்யதாயகः - அனுகூலமான அழகிய கணவன் மனைவி பெறுகிற பாக்கியமளிப்பவர்.

672. வித்யா ப்ரதः - கல்வியளிப்பவர்.

673. விபவதः - செல்வாக்களிப்பவர்.

674. புக்தி - முக்திபலப்ரதः - இம்மையில் போகமும் ஜீவன் முக்தியும் பிறவாமையும் தருபவர்.

ஆபிரூப்யகரோ வீரஸ்ரீப்ரதோ விஜயப்ரதः।
ஸர்வவஶ்யகரோ கர்ப்பதோஷஹா புத்ரபௌத்ரதः ॥ 119

675. ஆபிரூப்யகரः - பொதுவிடத்தில் ஏற்றத்தாழ்வின்றி சமமான மதிப்பு பெறச் செய்பவர். செல்வந்தருக்கெதிரே ஏழை என்றோ, படித்தவருக்கெதிரே படிக்காதவர் என்றோ அழகருக்கெதிரே அழகற்றவர் என்றோ இவ்வாறு சிறுமை நேராமல் சமமதிப்பு பெறச்செய்பவர்.

676. வீர ஸ்ரீப்ரதः - எதிர்ப்பைக் கண்டு பயந்து ஓடாதபடி உள்ளுரம் மிகச் செய்பவர்.

677. விஜய ப்ரத:- வெற்றிதருபவர்.

678. ஸர்வவச்யகரः - அனைத்தையும் வசமாக்கித்தருபவர்.

679. கர்ப்பதோஷஹா - பிறவிக்குறை நேராவண்ணம் கருவில் குறையறச் செய்பவர்.

680. புத்ரபௌத்ரதः - மக்கட்பேறும் அதனைத் தொடர்ந்த சந்ததியும் தருபவர்.

மேதாதः கீர்த்திதஶ் ஶோகஹாரீ தௌர்ப்பாக்யநாசநः।
ப்ரதிவாதி முகஸ்தம்போ ருஷ்டசித்தப்ரஸாதநः ॥ 120

681. மேதாதः - நினை வாற்றல், கற்ற கல்வி, முன்நோக்கு இவை உரியநேரத்தில் பயன்பட்டுப் பேரறிஞர், மாமேதை என்ற நிலை தருபவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



682. கீர்த்திதஃ - நற்பண்பால் பரவுகிற புகழ் தருபவர்.

683. ஶோகஹாரீ - நாடியதைப் பெறாததாலும் பெற்றதை இழந்ததாலும் ஏற்படுகிற துயரை உண்மையறிவு தந்து போக்குபவர்.

684. தௌர்ப்பாக்ய நாஶநஃ - அனுகூல மற்ற இல்லறம், சுற்றம், சூழல், செல்வநிலை இவற்றை மாற்றுபவர்.

685. ப்ரதிவாதிமுகஸ்தம்ப்பஃ - எதிர்த்து வாதிடுபவரின் வாயை அடைப்பவர்.

686. ருஷ்ட சித்தப்ரஸாதநஃ - ஸாதகனிடம் வெஞ்சினம் கொண்டவரை மனம் மாற்றி அன்பு காட்டச்செய்பவர்.

பராபிசாரஶமநோ துஃக்கபஞ்ஜந காரகஃ।
லவஸ்த்ருடிஃ கலா காஷ்ட்டா நிமேஷஸ்தத்பரஃ க்ஷணஃ॥ 121.

687. பராபிசார ஶமநஃ - பெருந்துயர் விளைவிக்கிற பிறரது செய்வினை விளைவுகளைப் போக்குபவர்.

688. துஃக்கப்பஞ்ஜந காரகஃ - துயர் தீர்ப்பவர்.

வரையற்ற காலம் மனிதனைப் பலவிதத்தில் கட்டுப் படுத்தச் சிறு நொடியிலிருந்து பெருங்காலவரை வரை பிரிந்து பாதிக்கிறது. அந்தக் காலமும் இவரே (நா 689-708) காலம் என்பது தானே நகர, கிரஹநக்ஷத்திர அமைப்பு உதவுகிறது. அவையும் இவரே (709-730).

689. லவஃ - ஆயிரம் தாமரை இதழ்களை ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கிக் கூரிய ஊசியால் வேகத்துடன் துளைக்கையில் ஒவ்வொரு இதழையும் துளைக்கிறநேரம் லவமாகும். ஒருநாள் என்பது *8* பிரஹரம் (யாமம்) கொண்டது. *4* முஹூர்த்தம் *1* பிரஹரம் (*3*மணி). *2*கடீ - முஹூர்த்தம் (*45* நிமிஷங்கள் (மினிட்). *6* க்ஷணம் - *1*கடீ (*1350* விநாடி (ஸெகண்டு). *30* கலா - *1*க்ஷணம் (*225* விநாடி). *30* காஷ்ட்டா - *1* கலா (*7.5* விநாடி) *18* நிமேஷம் (நிமிஷமல்ல) - *1*காஷ்ட்டா - (கால் விநாடி) *30*

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



தத்பரம் - 1 நிமேஷம் (விநாடியில் 72ல் 1 பங்கு). 100 த்ருடி 1 தத்பரம் (ஒருவிநாடியின் 2160-ல் ஒருபங்கு) 100 லவம் - ஒருத்ருடி (விநாடியில் 2,16,000 ல் ஒருபங்கு) ஒரு லவம் என்பது விநாடியின் 2,16,00,00 ல் ஒருபங்கு. இந்த சூட்சும காலவரைக் கணக்குப்படி லவம் முதலானவற்றின் வடிவில் உள்ளவர் இவரே.

690. த்ருடிঃ - த்ருடியானவர்.

691. கலா - கலாவானவர்

692. காஷ்ட்டா - காஷ்ட்டாவானவர்

693. நிமேஷঃ - நிமேஷமானவர்

694. தத்பரঃ - தத்பரையானவர்

695. க்ஷணঃ - க்ஷணமானவர்

க்கடீ முஹூர்த்தம் ப்ரஹரோ திவா நக்தமஹர்நிஶம் ।
பக்ஷோ மாஸோ(அ)யநம் வர்ஷம் யுகம் கல்போ மஹாலயঃ ॥ 122

696. க்கடீ - கடியானவர்.

697. முஹூர்த்தம் - முஹூர்த்தமானவர்.

698. ப்ரஹரঃ - ப்ரஹரமானவர்

699. திவா - பகலானவர்

700. நக்தம் - இரவானவர்

701. அஹர்நிசம் - ஒருபகலும் ஓரிரவும் கொண்ட நாளாயிருப்பவர்.

702. பக்ஷঃ - பக்ஷமாயிருப்பவர்

703. மாஸঃ - மாதமாயிருப்பவர்

704. அயனம் - அயனமாயிருப்பவர்

705. வர்ஷঃ - ஆண்டாயிருப்பவர்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



706. யுகம் - யுகமானவர். 360 மனித ஆண்டுகள் கொண்ட தேவர் ஆண்டு பன்னீராயிரம் கொண்டது கிருதம் திரேதா துவாபரம் கலி என்ற நான்குகொண்ட சதுர்யுகம் 43,20,000 ஆண்டுகள்.

707. கல்பஃ - ஆயிரம் சதுர்யுகங்கள் கொண்ட பிரும்மாவின் ஒரு நாளான ஒருகல்பம் (ஆயிரம் சதுர்யுகங்கள் பிரும்மாவின் பகல், ஆயிரம் சதுர்யுகங்கள் இரவு. இரவு முழுவதும் பிரளய காலம். கல்பாந்தப்ரளயம் என்பர்)

708. மஹாலயஃ - 72000 கல்பங்கள் கொண்டது மஹாலயம்.

ராஸிஸ் தாரா திதிர் யோகோ வாரஃ கரணமம்ஸகம் ।
லக்நம் ஹோரா காலசக்ரம் மேருஸ் ஸப்தர்ஷயோ த்த்ருவஃ 123.

709. ராஸிஃ - மேஷம் முதலிய 12 ராசிகளாக இருப்பவர்.

710. தாரா - அச்வினீ முதலிய 27 நட்சத்திரங்களாயிருப்பவர். 28வது அபிஜித்நட்சத்திரமும் இவரே.

711. திதிஃ - பிரதமை முதலான 15 திதிகளாயிருப்பவர்.

712. யோகஃ - விஷ்கம்ப்பம் முதலான 27 யோகங்களாக இருப்பவர்.

713. வாரஃ - ஞாயிறு முதலான 7 வாரங்களாயிருப்பவர்.

714. கரணம் - பவம் முதலான 11 கரணங்களாயிருப்பவர்.

715. அம்சகம் - ராசியின் ஒன்பதில் ஒருபங்கான அம்சமாயிருப்பவர். (இது ஒரு நக்ஷத்திர நேரத்தின் நான்கில் ஒருபங்கு.)

716. லக்னம் - ஸூர்யோதயத்தில் உதிக்கின்ற ராசியானவர்.

717. ஹோரா - லக்னத்தின் பாதிநேரமான ஹோராவாக இருப்பவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



718. காலசக்ரம் - கிரஹம், நட்சத்திரம், முதலானவற்றை அவரவர்க்கு உரியபாதையில் மோதாமல் அகலாமல் வட்டத்தில் ஒரே சீராகச் சுழற்றுகின்ற கால சக்தியானவர். சிசுமாரம், சிம்சுமாரம் என்றும் கூறுவர்.

719. மேருः - காலசக்கிரம் சுழல நடுக்கம்பமாக உள்ள மேருவானவர்.

720. ஸப்தர்ஷயः - மரீசி, அத்ரி, அங்கிரஸ், புலஸ்த்யர், புலஹர், க்ரது, வஸிஷ்டர் என்ற ஏழுரிஷிகள் அடங்கிய ஸப்தரிஷி மண்டல மாயிருப்பவர். இவர்கள் மன்வந்தரத்திற்கு ஒரு முறை மாறுவர் என்பர்.

721. த்த்ருவः - கிரஹம் முதலியவற்றின் சலனம் தடையுறாதபடி அசையாத கட்டுத்தரியாக உள்ள துருவ மண்டலமாயிருப்பவர். உத்தானபாதரின் புதல்வரானதுருவன் பகவானின் அருளால் இவ்விடத்தைச் சேர்ந்து நிலேத்துள்ளார்.

ராஹுர் மந்தः கவிர் ஜீவோ புதோ பௌமः ஶஶீ ரவிः ।
காலः ஸ்ருஷ்டிஸ் ஸ்திதிர்விஸ்வம் ஸ்தாவரம் ஜங்கம் ம் ச யத்

722. ராஹுः - ராகுவானவர். இதன் எதிர்பிரதிபலிப்பான கேதுவுமானவர்.

723. மந்தः - சனைச்சரனுனவர்.

724. கவிः - சுக்கிரனுனவர்.

725. ஜீவः - குருவானவர்.

726. புதः - புதனுனவர்.

727. பௌமः - பூமிகுமாரனுன அங்காரகனுனவர்.

728. ஶஶீ - சந்திரனுனவர்.

729. ரவிः - சூர்யனுனவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



730. காலஃ - கிரகம், முதலியவற்றையும் கால வரைகளையும் சலனம் தடங்காமல் தூண்டுகிற காலவடிவினர். எல்லாவற்றையும் ஒடுக்குகிற யமனுமானவர்.

731. ஸ்ருஷ்டிஃ - படைப்பானவர். காலத்தின் சலனம் செய்கிற மாற்றங்கள் மூன்று - படைப்பு நிலைப்பு (காப்பு) லயம் என.

732. ஸ்த்திதிஃ - நிலைப்பின் வடிவம் இவர்.

733. விஶ்வம் ஸ்தாவரம் ஜங்கமம் யத்ச - அசையா-தவையும் அசைவனவுமானதனைத்துமானவர். (யத் விச்வம் ஸ்த்தாவரம் ஜங்கமம்ச தஸ்மைநமஃ. ஸ்த்தாவராயஜங்கமாய விஶ்வாய நமஃ. அத்தகைய விஶ்வம் விரியும்வகைபற்றிய நாமங்கள் *(731-766)*

பூராபோ(அ)க்நிர் மருத்வ்யோமாஹங்க்ருதிஃ ப்ரக்ருதிஃ புமான்।
ப்ரம்ஹா விஷ்ணுஶ் ஶிவோ ருத்ர ஈஶஶ்ஶக்திஸ் ஸதாஶிவஃ॥ 125

734. பூஃ - பூதத்துவமானவர்.

735. ஆபஃ - ஜலதத்துவமானவர்.

736. அக்நிஃ - அக்கினிதத்துவமானவர்.

737. மருத் - வாயுதத்துவமானவர்.

738. வ்யோம - ஆகாசதத்துவமானவர்.

739. அஹங்க்ருதிஃ - ஐந்து பூதங்களின் ஸ்தூல ஸூக்ஷ்ம நிலைகளுக்கும் அவற்றால் பெறுகிற உணர்வுகளுக்கும் மூலமான அஹங்காரதத்துவமானவர். மஹத் என்ற நிலையில் விளக்கம் பெறுதிருந்த மூலதத்துவம், நான் தனி, நான் தனி என்ற உணர்வைத் தருகிற எண்ணற்றவைகளைத் தோற்று வித்தமையால் அஹங்காரமானது.

740. ப்ரக்ருதிஃ - அஹங்காரம் மஹத் என்ற இருநிலைகளின் மூலநிலையும் படைப்பின் தொடக்கத்தின் மூலவிளைவுமான பிரகிருதிதத்வமானவர். இதனைக் கொண்டே மற்றதெல்லாம் என்பதால் இது பிரகிருதி.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



741. புமான் - ஜடமான பிரகிருதியுடன் இணைய இயலாத சைதன்யதத்துவமான புருஷனானவர். பிரகிருதியும் புருஷனும் சேராச்சேர்க்கையாக இணைவதே சிருஷ்டியின் விந்தை. அதனைச்சாதித்தவர் பிரும்மா.

742. ப்ரம்ஹா - பிருகிருதியும் புருஷனும் இணைவதாகிறபடைப்பைச் செய்த பிரும்மா. இருபொருள்களும் முன்னிருந்ததே. தனித்திருந்தவரை அவற்றால் பல்கிப்பெருக இயலவில்லை. இணைத்ததும் எண்ணற்று எல்லாமுமானது.

743. விஷ்ணு: - எங்கும் பரவி நின்று அனைத்திற்கும் ஆதாரமாகிக் காப்பவர். விஷ்ணுவானவர்.

744. ஶிவ: - பிரும்மா விஷ்ணு ருத்திரர் ஈசுவரர் ஸதாசிவர் என்ற ஐம்பணிகளைப் புரிபவரைத் தம்முள் அடக்கிய சிவபெருமான் இவர். பிரும்மா விஷ்ணு ருத்திரர் ஈசுவரர் என்ற நால்வரும் கால்களாக கொண்ட கட்டில் ஸதாசிவன். அதன் மேல்வீற்றிருப்பவர் சிவன். அவர்மடி மீது அவருள் அடங்கி சக்தி இருப்பதாக இதனைச்சித்திரிப்பர்.

745. ருத்ர: - பெருஞ்சுகமாகிய உருவையிழப்பதை எளிதாக செய்கிற ருத்திரரானவர். பிரகிருதி புருஷ இணைப்பைத் துண்டித்து தனித்தனியானதை ஒன்றாக்கும் பணி லயம் - ஸம் ஹாரம் எனப்படுவது. ஸம்ஹாரம் - மூலதத்வ நிலைக்கு ஒடுக்குவது. இத்துடன் இறைவனின் பணி நிற்காது. மேலும் இருபணிகள் உண்டு. அவற்றைச் செய்பவரும். இவரே.

746. ஈஶ: - ஈச்வரரானவர். பிரகிருதியும் புருஷனும் பிரிந்ததும் பிரகிருதியை மாயையிலும் புருஷனைப் பரமாத்மாவுடனும் இணைத்து உலகம் என்ற ஒன்றே இருந்ததாக உணராதபடி மறைக்கிற திரோதான சக்தியுள்ளவர்.

747. ஶக்தி: - சிவன் மடி மீதமர்ந்த சக்தி. சிவனது பேராற்றலும் பேரறிவும் பேரிருக்கையும் பேரானந்தமும் பேரருளுமே வடிவானவள்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



748. ஸதாஶிவः - சக்தி தூண்ட அவளது பேரருளை விரிவடையச்செய்து சிவ-சக்தியினுள் அடங்கிய பிரகிருதி புருஷர்களைத் தனித்து விளக்கி வெளிக் கொணர்பவர். அனுக்கிரஹ சக்தி மிக்கவர். அனுக்கிரஹம் என்ற பெரும் பணியைச் செய்பவர். அந்த ஸதாசிவரானவர். சாக்த ஸம்பிரதாயப்படி பிரும்மாதியரைக் கால்களாகக் கொண்ட ஸதாசிவ மஞ்சத்தில் வீற்றிருக்கிற காமேச்வர காமேச்வரி தம்பதிகளும் இவரே. (நா 742-748) சிவன் சக்தி ஸதாசிவன் ஈச்வரன் என்ற நான்கும் சிவதத்துவம் எனவும் பிரகிருதி அஹங்காரம் ஐம்பூதங்கள் என்பவை ஜடதத்வம் எனவும் புருஷன் வித்யாதத்துவம் எனவும் தரிசனங்கள் வகைப்படுத்தும். 36 தத்துவங்களில் இவை அடங்கும்.

படைப்பு தொடங்கியதுமே பல்வேறு இனங்கள் தோன்றின. அவற்றை விளக்க (749-766 நாமங்கள்).

**த்ரிதஶாः பிதரஸ் ஸித்த்தாः யக்ஷா ரக்ஷாம்ஸி கிந்நராः ।**
**ஸாத்த்யா வித்யாதரா பூதாः மனுஷ்யாः பஶவः க்ககாः ॥ 126.**

749. த்ரிதஶாः - தேவர்களானவர். முதுமையும் மறைவு மற்றவரானதால் பால்யம், கௌமாரம், யௌவனம் என்ற மூன்று தசை (நிலைகள்) மட்டுமுள்ளவர்கள் - த்ரிதசர்கள். பிறந்தவுடனேயே மூன்றுவது தசையான யௌவனம் பெறுபவர்கள் என்பதால் த்ரிதசர். பூமி வானம் ஸ்வர்க்கம் என்ற மூன்று இருப்பிடங்களைக் கொண்டமையால் த்ரிதசர். வஸுக்கள், ருத்திரர், ஆதித்யர் என 3 பிரிவுகளில் அடங்குபவர் என த்ரிதசர் என்றெல்லாம் விளக்கமுண்டு.

750. பிதரः - அக்னிஷ்வாத்தர் முதலிய தேவ இனத்தைச் சார்ந்த பித்ருக்கள், அவரவரது பித்ருக்கள் எனத் தனி மனிதரால் வழிபடப்பெறுபவர், அனைவரும் இவரே.

751. ஸித்தாः - கபிலர் முதலிய ஸித்தர்கள் வடிவினர்.

752. யக்ஷாः - யக்ஷர்களானவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



753. ரக்ஷாம்ஸி, - ராக்ஷஸர்கள் (தேவரினத்தைச் சார்ந்தவர்) வடிவினர். சூர்யனின் ரதத்தில் பரிவார தேவதையாக சூர்யனை வழிபடுகின்றனர்.

754. கிந்நரா: - கீதமிசைத்து இன்பம் தருகிற குதிரை முகமும் மனித உடலும் பெற்ற கின்னரர்கள் வடிவினர்.

755. ஸாத்த்யா: - ஸாத்த்யர்கள் என்ற 11 தேவ இனத்தவரானவர் (மந:, அநுமந்தா, ப்ராநர:, யா ந:, ஸித்த்தி, ஹய:, நய:, ஹம்ஸ:, நாராயண:, ப்ரபவ: பவ: என)

756. வித்யாதரா: - மாயவித்தியைகளில் வல்லவரான வித்யாதரர்களானவர்.

757. பூதா: - பூத கணங்களானவர் - திரிதசர்கள் முதல் பூதர்கள் வரை தேவரினம்.

758. மநுஷ்யா: - மனிதரானவர்

759. பஶவ: - நான்குகால் பிராணிகளானவர்

760. க்ககா: - பறவைகளானவர்.

ஸமுத்ராஸ் ஸரித: ஶைலா: ப்பூதம் ப்பவ்யம் ப்பவோத்ப்பவ: ।
ஸாங்க்க்யம் பாதஞ்ஜலம் யோக: புராணாநி ஶ்ருதி: ஸ்ம்ருதி: ॥127

761. ஸமுத்ரா: - கடல்களானவர்.

762. ஸரித: - ஆறுகளானவர்

763. ஶைலா: - மலைகளானவர்

764. ப்பூதம் - முன்தோன்றி மறைந்தவை அனைத்துமானவர்

765. ப்பவ்யம் - இனித்தோன்ற விருப்பதனைத்துமானவர்

766. ப்பவோத்ப்பவ: - தோன்றுவதனைத்திற்கும் தோற்றுவாயானவர். உயிரினத்தின் முன்னோடி.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



உலகின் பல்வேறு தோற்றங்களைப் பல்வேறு கோணங்களின் நின்று மஹர்ஷிகள் கண்ட விஜ்ஞான உண்மைகளை விளக்குபவை தரிசனங்கள். அவைபற்றிய நாமங்கள் (767-793) அறிவும் அறிவூட்டும் நூலும் அறிவூட்டுபவரும் அவரே.

767. ஸாங்க்க்யம் - கபிலரது ஸாங்கிய தர்சனமானவர்

768. பாதஞ்ஜலம் - பதஞ்சலியின் வியாகரணதரிசனமானவர், ஸாமஸூத்ர நிதானம் என்ற நூல்வடிவினர்.

769. யோகஃ - பதஞ்ஜலியின் யோக ஸூத்திர வடிவினர்

770. புராணாநி - வியாசர் தொகுத்த புராணங்கள் வடிவினர்

771. ஶ்ருதிஃ - வியாசர் வகுத்த வேதங்களானவர்.

772. ஸ்மிருதிஃ - மனு யாஜ்ஞவல்கியர் முதலானோரின் ஸ்மிருதி (உபதேசத் தொகுப்பு)யானவர்.

வேதாங்காநி ஸதாசாரோ மீமாம்ஸா ந்யாயவிஸ்தரஃ।
ஆயுர்வேதோ தநுர்வேதோ காந்தர்வம் காவ்யநாடகம் ॥ 128.

773. வேதாங்காநி - சிக்ஷா, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்று ஆறு வேத அங்கங்களானவர்.

774. ஸதாசாரஃ - நல்லோர் கடைபிடிக்கின்ற ஒழுக்க முறைகளானவர்.

775. மீமாம்ஸா - ஜைமினியின் மீமாம்ஸாதரிசனமானவர்.

776. ந்யாயதர்சனம் - பௌதிகப் பொருள் பற்றிய ஆய்வு நூலான கௌதமரின் வைசேஷிகதர்சனமும், கணாதரின் நியாய தர்சன முமானவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



777. ஆயுர்வேதஃ - மருத்துவம் பற்றிய அதர்வவேதத்தின் உபவேதமான ஆயுர்வேதமானவர் (ருக்வேதத்தின் உபவேதமெனச்சிலர்).

778. தநுர்வேதஃ - யஜுர்வேதத்தின் உபவேதமான தனுர்வேதமானவர்.

779. காந்த்தர்வம் - ஸாமவேத்தின் உபவேதமான காந்தர்வமாயிருப்பவர்.

780. காவ்ய நாடகம் - காவியம் (கேட்கத்தக்கது) நாடகம் (பார்க்கத்தக்கது) என்ற இருவகை இலக்கியமாக இருப்பவர். மனத்தின் மாசு நீக்கி உயர்நிலேக்குக் கொணர்கிற ராமாயணம் முதலிய இலக்கியங்களும் இறையின்பம் தருபவையே.

வைகாநஸம் பாகவதம் ஸாத்வதம் பாஞ்சராத்ரகம் ।
ஶைவம் பாஶுபதம் காலாமுகம் பைரவஶாஸனம். 129.

781. வைகாநஸம் - விகனஸ் முனிவர் தொகுத்த விஷ்ணுதத்துவப்படி வழிபாட்டு முறையான வைகாநஸ-மானவர்.

782. பாகவதம் - விஷ்ணு வழிபாட்டிற்குரிய பாகவத முறையானவர்.

783. ஸாத்வதம் - ஸாத்துவதக் கொள்கைப் படியமைந்த ஸாத்வத வழிபாட்டு முறையானவர்.

784. பாஞ்சராத்ரகம் - பாஞ்சராத்ரக் கொள்கைப்படி அமைந்த வழிபாட்டு முறையானவர். விஷ்ணுவே முழுமுதற்கடவுள் என்ற கொள்கையில் அமைந்தவை வைகானஸம் முதலிய நான்கும்.

785. ஶைவம் - சிவாகமங்களின்படி அமைந்த சைவவழிபாட்டு முறையானவர்.

786. பாஶுபதம் - பாசுபதக்கொள்கைப்படி அமைந்த வழிபாட்டு முறையானவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



787. காளாமுகம் - காலாமுகர்களின் வழிபாட்டு முறையானவர்.

788. ப்பைரவஶாஸநம்:- பைரவர் கொள்கைப்படியமைந்த வழிபாட்டு முறையானவர். சிவனே முழுமுதற்கடவுள் என்ற கொள்கையில் அமைந்தவை சைவம் முதலிய நான்கும்.

**ஶாக்தம் வைநாயகம் ஸௌரம் ஜைனமார்ஹத ஸம்ஹிதா ।**
**ஸதஸத் வ்யக்தமவ்யக்தம் ஸசேதனமசேதனம் ॥ 130.**

789. ஶாக்தம் - சக்தியே முழுமுதற்கடவுள் என்ற கொள்கையில் அமைந்த சக்திவழிபாட்டுமுறையானவர்.

790. வைநாயகம் - விநாயகரே முழுமுதற்கடவுன் எனக்கொண்டவரின் வழிபாட்டுமுறையானவர்.

791. ஸௌரம் - ஸூர்யனே முழுமுதற்கடவுள் என்ற கொள்கையில் அமைந்த வழிபாட்டுமுறையானவர்.

792. ஜைநம் - ஜைனர்களின் சமயநூலானவர்.

793. ஆர்ஹதஸம்ஹிதா - அருகர் எனும் புத்தரின் சமய நூலானவர். எந்த முறையில் எந்த வடிவில் எவர் வழிபட்டாலும் அந்த வழிபாடுசேருமிடம் ஸ்ரீகணேசரே.

இனிபகவானின் காரண காரிய நிலைகளில் உள்ள தோற்றங்களின் விளக்கம் (795-799)

794. ஸத் - தோன்றிய, தோன்றியுள்ள, தோன்றவிருக்கின்ற பொருள் யாவும் பெயரும் உருவமும் பெறுமுன்னர் பெயரும் உருவமற்று மூல காரணவடிவில் ஸத்தானவர். பேரிருக்கை(மாறு இருக்கை) ஒன்றே அடையாளம். அதனுல் ஸத்.

795. அஸத் - ஸத் எனும் காரணப் பொருளிலிருந்து வந்த காரியப்பொருள் பெயரும் உருவமும் பெறும்போது ஸத்தல்ல என்று மட்டும் குறிப்பிடத்தக்க அஸத்தானவர். பலவாகித்

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



தோன்றுவதால் - குறுகித் தனி வடிவமும் பெயரும் பெறுவதால். மாறுபாடடைவதால் - பேரிருக்கையாக மாரு இருக்கையாக அதனுல் இருக்க இயலாததால் - அது அஸத்.

796. வ்யக்தம் - பெயரும் உருவமும் பெற்றதும் தனித்து உணரமுடிவதால் வெளிப்பட்டதான வ்யக்தமான பொருளாக இருப்பவர்.

797. அவ்யக்தம் - வியக்தமாகக் காரியப் பொருளாக மாற முற்பட்டு, இன்னமும் வியக்த நிலைக்கு வராத அவ்யக்தமாகவும் இருப்பவர். இந்த அவ்யக்தம் இன்னமும் காரணமாகவே இருக்கிறது. காரியமாகவில்லை.

798. ஸசேதனம் - காரியநிலையில் வந்த பின் சேதனமான ஆத்ம ஒளியை வெளிப்படையாகக் காட்டுகிற ஸசேதனமானவர். சேதனப்பொருள் இவரே.

799. அசேதநம் - ஆத்ம ஒளி பெற்றும் அதை வெளிப்படுத்தற்குரிய மனம் முதலானதற்ற நிலையில் சேதனமற்றதாக ஜடமாகத் தோன்றும் அசேதனமானவர்.

இந்நிலையை உணர்வதால் ஏற்படுகிற பலனை விளைவுகளை *(800-823)* நாமங்கள் விளக்குகின்றன.

**பந்த்தோ மோக்ஷஸ் ஸுகம் ப்போகோ(அ)யோகஸ்**
**ஸத்யமணுர்மஹான் ।**
**ஸ்வஸ்தி ஹூம் ப்பட் ஸ்வதா ஸ்வாஹா ஶ்ரௌஷட் வௌஷட்**
**வஷண்ணமః ॥ 131.**

800. பந்த்தः - நித்யமான ஆத்மாவையும் அநித்யமான உடல் முதலானவற்றையும் குழப்பத்தால் மாறி உணர்வதும், ஒன்ருக உணர்வதுமான அறியாமையால் ஆத்மாவற்றதில் ஆத்மா என்ற எண்ணமும் ஆத்மாவைத்தனிப் பொருளாக உணராமையும் ஏற்பட்டு அனுத்மப்பொருளில் ''நான்'' ''எனது'' என்ற எண்ணத் தொடர்பு, சிக்கலை ஏற்படுத்தித் துயர் தருகிறது. அநாத்மப்பொருளுடன் - 'நான்' எண்ணத்தைப்

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



பிணைப்பதால் இந்த அறியாமையே பந்தமாகிறது. இது இவரின் மாயையின் விளைவானதால் இவரே பந்தமாகித் துயருடன் பிணைக்கிறார். அந்த பந்தமானவர்.

801. மோக்ஷ: - அறியாமையை விலக்க குருவாக வழிபடு தெய்வமாக வழிகாட்டி ஆத்மாவை உணரச்செய்து அநாத்மப்பொருளுடன் உள்ள தொடர்பைநீக்குவதால் மோக்ஷமானவர்.

802. ஸுகம் - 'தான்' 'தனது' என்ற பந்தம் விலகத் துக்கத்தின் காரணம் நீங்க, சுத்தசுகஸ்வரூபமான ஆத்மாவாகி அந்த ஆத்மானந்தமானவர்.

803. ப்போக: - அந்த ஆத்மானந்த அனுபவமானவர்.

804. அயோக: - எங்கும் பரவியிருந்தும் எதனோடும் கூடாதவர். மோக்ஷத்திற்குச் சாதனமான பற்றற்ற நிலையும் (ஸங்கமின்மையும்) இவரே.

805. ஸத்யம் - முக்காலும் எதனாலும் பாதிப்படையாத மெய்ப் பொருளானவர்.

806. அணு: - நுண்ணியதிலும் நுண்ணிய அணுவானவர். நுட்பப் பொருளானதால் புலப்படாதவர்.

807. மஹான் - பெரிதிலும் பெரிதானவர். மிகப் பெரிதானதால் புலப்படாதவர்.

இனி ஒன்பது *(808-906)* நாமங்கள் வேள்வி முதலானவற்றில் தேவர்க்களுக்கினியதான சக்திமிக்கச் சொற்கள். குறிப்பிடுகிற தேவர்களின் ஸாந்தித்தியமும் அருளும் உடன் பெற உதவுபவை.

808. ஸ்வஸ்தி - ஸு அஸ்தி - நன்கு மங்களமாக உள்ளவர். க்ஷேமம், நலன், சுபவாழ்த்து, மங்களச்சொல் என்ற பொருளுடன் நன்கமைந்தவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



809. ஹூம். - துயர் தருவதைத்தடுத்து அகற்றும் புனிதச் சொல்லான 'ஹூம்' ஆனவர்.

810. ப்பட் - துயர்தருவதை ஆயுதத்தால் வெட்டுவது போல் அகற்றி அழிக்கிற சொல்லான 'ப்பட்' ஆனவர்.

811. ஸ்வதா - பித்ருக்களை வழிபடு தெய்வமாகக் கொள்ளும்போது அவர்களுக்கு இனிய ஸ்வதா என்ற சொல்லானாவர்

812. ஸ்வாஹா - தேவர்களை அக்னிமூலம் வழிபடும் போது அவர்களுக்கினிய ஸ்வாஹா என்ற சொல்லானவர்

813. ஸ்ரௌஷட் - வேள்வியில் தேவதையை ஹவிஸ்ஸை பெற அழைக்கப்பயன்படுகிற ச்ரௌஷட் என்ற சொல்வடிவானவர்.

814. வௌஷட் - அழைக்கப்பெற்ற தேவர்கள் வேள்வி புரிபவனுக்கு அனுகூலமாவதற்குத் தேவதைக்கு இனியதைத் தருமுன் தன்னுரிமை விலக்குவதற்குரிய சொல்லாகிற ''வௌஷட்'' என்ற சொல்வடிவினர்.

815. வஷட் - தேவர்கள் வசமாகச் சொல்கிற சொல்லானவர்.

816. நமः - தன்னைத் தாழ்த்தி தேவர்களை உயர்த்தி வணக்கம் என்று கூறுகிற நமः என்ற சொல்லானவர். 'ஸ்வஸ்தி' முதல் நமः வரையுள்ள மந்திரச் சொற்கள் தேவர்களின் அருளைப்பெற உதவுபவை.

**ஜ்ஞானம் விஜ்ஞான மாநந்தோ போதः ஸம்வித் சமோ யமः ।**
**ஏக ஏகாக்ஷராதாரः ஏகாக்ஷரபராயணः ॥ 132.**

817. ஜ்ஞானம் - ஆத்மா பற்றிய பேரறிவானவர்.

818. விஜ்ஞானம்- ஆத்மாவைத்தவிர மற்றதன் அறிவான விஜ்ஞானமானவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



819. ஆநந்த:- ஆத்ம உணர்வில் வெளி உணர்வற்ற துக்க க்கலப்பில்லாத பேராநந்த மானவர்.

820. போத: - ஸமாதியில் உள்ளுணர்வாயிருப்பவர்.

821. ஸம்வித் - புற உணர்வாகப் பொருளுடன் கலந்து தோன்றுவதல்லாத சுத்த ஜ்ஞானமான சித்சக்தியானவர்.

822. ஶம: - மனம் முதலியவற்றின் இயக்கமில்லாத, அமைதி நிலையானவர்.

823. யம: - மனம் முதலியவற்றின் வெளிப்போக்கைக் கட்டுப்படுத்துகிற யமமாக இருப்பவர்.

இனி எண்களால் குறிப்பிடத்தக்கவாறு தொகுக்கப்பட்ட நாமங்கள் *(824 - 1000)*

824. ஏக: - இனம், பொருள், இயல்பு, பெயர், நிறம், செயல்வடிவம் முதலியவற்ருல் தனித்து வேறுபாட்டை உணர (தனிச்சிறப்பை அறிய) இயலாத ஒப்பற்றத் தனி ஒருவராக விளங்குபவர்.

825. ஏகாக்ஷராதார: - தன்னை விளக்கிக் கொள்ள ஓம் என்ற பிரணவ வடிவத்தை தன் ஆதாரமாகக் கொண்டவர். ஓங்காரத்திற்கு ஆதாரமானவர், 'கம்' என்ற பீஜாக்ஷரத்தில் நிலைத்து நிற்பவர். துதிக்கையை உயர்த்திப் பிளிரும் போது ஓங்காரமும் கேட்கும். ஓம் என்ற வடிவின் வரிவடிவமும். தெரியும் 'ப்ரணஸ்வரூபவக்ரதுண்டம்' (முத்துஸ்வாமி தீக்ஷிதர்)

826. ஏகாக்ஷரபராயண: - ஓங்காரத்தைப் பெரிதும் சார்ந்திருப்பவர்.

**ஏகாக்ரதீரேகவீர ஏகாநேகஸ்வரூபத்ருத் ।**
**த்விரூபோ த்விபுஜோ த்வ்யக்ஷோ த்விரதோ த்வீபரக்ஷக: ॥ 133.**

827. ஏகாக்ரதீ: - ஒரு முனைப்பட்ட கூரான புத்தி உள்ளவர். ஒரு முனைப்படுத்திய அடியாரின் உள்ளமானவர். தன்னைத் தவிர வேறு ஒன்றில்லாததால் தன்னிலையிலேயே நிலைத்த

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அறிவுள்ளவர்.

828. ஏகவீரః - ஆத்ம உணர்வே பேருணர்வாகி அதில் இதுவரை தனித்து உணர்த்திய இது என்ற உலகத்தின் உணர்வை லயிக்கச் செய்து உலகைத் தனக்குள் அடக்கிய ஒரே வீரனான ஞானியாயிருப்பவர். உலகில் எங்கும் காணாதத் தனிச்சிறப்பு மிக்க மாவீரர். ஏகனான தன்னில் அனேகத்தைக் காட்டுகிற அஜ்ஞானத்தை விரட்டிய ஆத்மஞானி.

829. ஏகாநேகஸ்வரூபத்த்ருத் - எல்லாப் பொருளிலும் ஆத்மாவாகப் ப்ரதிபலிப்பதால் *(பிம்பமாக)* ஒன்ருயும், *(பிரதிபிம்பமாக)* பலவாயும் தோன்றுபவர்.

830. த்விரூபః - பரம் அபரம் என்ற இரு பிரும்ம வடிவினர். நிர்க்குணம் ஸகுணம் என்றும் இருவகைப் படுத்துவர்.

831. த்விபுஜః - இரு கைகளுள்ளவர். *(பிள்ளையார்ப்-பட்டியில் இவ்வாறு காணலாம்).*

832. த்வ்யக்ஷః - இரு கண்களுள்ளவர். யானைமுகம் முக்கியமாகும்போது இரு கண்களே.

833. த்விரதః - இரு தந்தமுள்ளவர். மஹாபாரதம் எழுதவும் கஜாஸுரனை மாய்க்கவும். கொம்பை ஒடிக்குமுன் இரு தந்தங்கள் கொண்டவர். இரு கைகள், இரு கண்கள் இரு தந்தங்கள் என்று காணப்படுகிற கோலமுண்டு.

834. த்வீபரக்ஷகః - ஜம்பூ முதலிய ஏழுத்வீபங்களையும் காப்பவர். பக்தனைத் துவீபங்களுக்கு அதிபதியாக்கிக் காப்பவர்.

த்வைமாதுரோ த்விவதநோ த்வந்த்வாதீதோ த்வயாதிகః ।
த்ரிதாமா த்ரிகரஸ் த்ரேதாத்ரிவர்கப்பலதாயகః ॥ 134

835. - த்வைமாதுரః - உமையையும் கங்கையையும் தம்முடைய தாயாகக் கொண்டவர் *(நா. 7.133-135)*

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



836. த்விவதநஃ - அக்னி என்ற வடிவில் இரண்டு முகமுள்ளவர். த்விமுக கணபதியாகத் தியானம் செய்யப் படுபவர். (அக்னிக்கு இரு முகங்கள் என சுரௌத முறை கூறும்).

837. த்வந்த்வாதீதஃ - இரட்டையாக விளைகிற புண்யம், பாபம், சுகம் - துக்கம், சீதம் - உஷ்ணம், இருட்டு - வெளிச்சம், விருப்பம் - வெறுப்பு என்றவாறுள்ள த்வந்த்வங்களுக்கு அப்பாற்பட்டவர்.

838. த்வயாதிகஃ - மாற்றுத்தோற்றம் தருகிற ரஜோகுணத்தையும் தமோ குணத்தையும் தாண்டி சுத்த ஸத்வகுணம் கொண்டவர், ஆசை - சினம். மோஹம் - காமம் என்ற வேற்றுணர்வுகளுக் கப்பாற்பட்டவர்.

839. த்ரிதாமா - பூமி ஆகாயம் பரவெளி என்ற மூன்று இடம் கொண்டவர். பூமியில் அக்னியாகவும் ஆகாயத்தில் ஸூர்யனாகவும் த்யுலோகம் எனும் பரவெளியில் சந்திரனாகவும் துலங்குபவர்.

840. த்ரிகரஃ - இரு கரங்களும் துதிக்கையுமாக மூன்று கரங்கள் உள்ளவர். (பிள்ளையார் பட்டியில் உள்ள வடிவம்). மூவுலகையும் ஆக்கியவர்.

841. த்ரேதா த்ரிவர்க்கப்பலதாயகஃ - கார்ஹபத்யம் ஆஹவநீயம் தக்ஷிணாக்கினி என்ற மூன்று அக்கினிகளை வழிபடுபவருக்கு அறம்பொருள் இன்பம் என்ற மூன்றையும் பலனாகத் தருபவர்.

**த்ரிகுணாத்மா த்ரிலோகா திஸ் த்ரிஶக்தீஶஸ் த்ரிலோசநஃ।**
**சதுர்பாஹுஶ் சதுர்த்தந்தஶ் சதுராத்மா சதுர்முகஃ ॥ 135**

842. த்ரிகுணாத்மா - ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணமுள்ள மூலப்ரக்ருதி வடிவினர் (நா 740)

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



843. த்ரிலோகாதி:- மூன்று குணங்களும் இவரே. மூவுலகிற்கும் மூலகாரணம். மூவுலகையும் விழுங்கித் தன்னுள் அடக்குபவர். மூவுலகையும் தன் பொறுப்பில் ஏற்று வாழவைப்பவர்.

844. த்ரிஶக்தீஶ: - வாமா ஜ்யேஷ்ட்டா ரௌத்ரீ என்ற படைப்பு காப்பு லயம் என்ற பணிகளுக்கான சக்திகளின் ஈசன். ஸ்ரீம் என்ற லக்ஷ்மீ பீஜம், ஹ்ரீம் என்ற மாயாபீஜம், க்லீம் என்ற காமபீஜம். மூன்றும் சக்தி மிக்கவை. அந்த சக்திகளின் தலைவர். பேராளுமை, பேராற்றல், பேரியக்கம் என்ற மூன்று சக்திகளைத் தன் வசத்தில் கொண்டவர். இச்சா சக்தி, ஞான சக்தி, க்ரியா சக்தி என்ற மூன்று சக்திக்கும் ஈசர். ஆளுனருக்கு உரித்தான பிரபு சக்தி, மந்திரசக்தி, உற்சாகசக்தி என்ற மூன்றையும் தன் வசத்தில் கொண்டவர்.

845. த்ரிலோசந: - மூன்று கண்களுள்ளவர். சிவபெருமானானவர். புறப்பொருள்களைக் காண இரண்டும் அகப்பொருளைக் காண ஒன்றுமாக முக்கண்களைக் கொண்ட யோகி வடிவினர்.

846. சதுர்பாஹு: - நான்கு கைகளுள்ளவர். உலகளாவி நிற்பதைக்காட்ட நான்குதிசைகளிலும் கோடுகளாக விரிந்து பரவி, நடுவில் இணைகிற ஸ்வஸ்திக வடிவினர். இந்திரன், பூஷா, தார்க்ஷ்யர், பிருஹஸ்பதி என்ற நால்வரைக் கைகளாகக் கொண்டு அருள் புரிபவர்.

847. சதுர்தந்த:- நான்கு தந்தங்கள் உள்ளவர். நான்கு தந்தங்கள் கொண்ட திக்கஜங்கள் வடிவினர். த்விமுககணபதிக்கு நான்கு தந்தங்கள்.

848. சதுராத்மா - ஆத்மா, அந்தராத்மா, ஜ்ஞானாத்மா, பரமாத்மா என நான்கு ஆத்மவடிவம் கொண்டவர். கணேஶ்வரர், கணக்ரீடம், கணநாதர், கணாதிபர் என்று தானே நான்முகனாகி ஸ்வாநந்தபவனத்தில் தன்னைச்சுற்றி வடகிழக்கு, தென்கிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு மூலைகளில் சிறிதும்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



பேதமின்றி நான்கு வடிவம் கொண்டவர். (விநாயகரஹஸ்யம்-ஷோடசாவரண ஸ்தோத்ரம்) சதுர ஆத்மா - திறமை மிக்கவர்

849. சதுர்முகஃ - நான் முகங் கொண்டவர். பிரும்மாவானவர். நான்கு வேதங்களைத் தன் முகங்களில் கொண்டவர். நான்கு திக்குகளிலும் நோக்குள்ளவர்.

சதுர்விதோபாயமயஶ் சதுர் வர்ணாஶ்ரமாஶ்ரயஃ ।
சதுர்விதவசோவ்ருத்தி பரிவ்ருத்தி ப்ரவர்தகஃ ॥ 136

850. சதுர்விதோபாயமயஃ - ஸாமம், தானம், பேதம், தண்டம் என்ற நான்கு அரசாளும் உபாயங்களாகி, அவற்றிற்கேற்ற பலனளிப்பவர்.

851 - சதுர்வர்ணாஶ்ரமாஶ்ரயஃ - நான்கு வர்ணங்களையும் நான்கு ஆசிரமங்களையும் முறைப்படி பின்பற்றுப வர்களுக்குப் பாதுகாப்பு தருபவர்.

852. சதுர்விதவசோவ்ருத்தி பரிவ்ருத்தி ப்ரவர்தகஃ - ஒலிக்கு மூலம் பரா என்ற வாக் - அதன் விரிவு பச்யந்தீ மத்த்யமா வைகரீ என்ற மூன்று நிலைகள். மூலாதாரத்தில் மூலமான பரா, நாபியில் பச்யந்தீ, இதயத்தில் மத்த்யமா, தொண்டையில் வைகரீ, வாக்கின் இந்த நான்கு நிலைகளையும் அவற்றில் ஏற்படுகிற ஒலி விரிவையும் வரிசையாக ஏற்படுத்தி விளக்கமற்ற ஒலியாக மூலாதாரத்திலிருந்ததை பொருளும் தனித்த உச்சரிப்பும் விளங்கும்படி பேச்சாக இயக்கி அமைப்பவர்.

சதுர்த்தீபூஜநப்ரீதஃ சதுர்த்தீதிதிஸம்ப்வஃ ।
பஞ்சாக்ஷ ராத்மா பஞ்சாத்மா பஞ்சாஸ்யஃ பஞ்சக்ருத்யக்ருத் ॥ 137

853. சதுர்த்தீ பூஜனப்ரீதஃ - சதுர்த்தீ திதி தோறும் வழிபடுவதை விரும்பி ஏற்வர்.

854. சதுர்த்தீ திதி ஸம்ப்பவஃ - பாத்ரபத மாதத்து வளர்பிறை சதுர்த்தியில் தோன்றியவர் - விநாயக சதுர்த்தியாக இதனைக் கொண்டாடுபவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



855. பஞ்சாக்ஷராத்மா - பிரணவத்தின் பகுதிகளான அகாரம், உகாரம், மகாரம், நாதம், பிந்து என்ற ஐந்து வடிவம் கொண்டவர்.

856. பஞ்சாத்மா - பிரும்மா, விஷ்ணு, ருத்ரன், ஈச்வரன், ஸதாசிவர் என்ற ஐந்து பிரும்மங்களின் வடிவிலிருப்பவர்.

857. பஞ்சாஸ்யஃ - ஐந்து முகங்களுள்ள ஹேரம்பகணபதி வடிவினர். விரிந்த முகமுள்ளவர்.

858. பஞ்சக்ருத்யக்ருத் - பிரும்மா முதலிய ஐந்து பிரும்ம நிலைகளில் இருந்து கொண்டு, படைத்தல், காத்தல், லயமடையச் செய்தல், மறைத்தல், அனுக்ரஹம் என்ற ஐவகைச் செயல்களைப் புரிபவர் நா *742, 743, 745, 746, 748, 856)*

பஞ்சாதாரஃ பஞ்சவர்ணஃ பஞ்சாக்ஷரபராயணஃ ।
பஞ்சதாலஃ பஞ்சகரஃ பஞ்சப்ரணவபாவிதஃ ॥ 138

859. பஞ்சாதாரஃ - ஐம்பூதங்களுக்கும் ஆதாரமானவர். ஐம்பூதங்களையும் மூலப்பொருள்களாகக் கொண்ட உலகமானவர்.

860. பஞ்சவர்ணஃ - ஐந்து நிறங்களில் தோன்றுபவர். யோகியின் இதயத்தில் கோடிசூர்யவண்ண ஒளியுடனும், கிருதயுகத்தில் சந்திர ஒளி வண்ணத்திலும் த்ரேதாவில் வெண் மருதுமரத்தின் வெளிர் செம்மையிலும், துவாபரத்தில் தம்பூலப்பூச்சியின் செவ்வண்ணத்திலும், கலியுகத்தில் புகை நிறத்திலும் தோன்றுபவர். *(நா-384-387)*

861. பஞ்சாக்ஷரபராயணஃ - சிவபஞ்சாக்ஷரத்திலும் பிரணவத்திலும் ஈடுபாடுமிக்கவர்.

862. பஞ்சதாலஃ - ஐந்துதால அளவுள்ள குட்டை வடிவமுள்ளவர். விரித்த கையில் கட்டை விரல் நுனியிலிருந்து நடுவிரல் நுனி வரையுள்ள அளவு தாலமாகும். (ஒட்டைச்சாண் சுமார் 9 அங்குல அளவு) ஐந்து பனைமர உயரமுள்ளவரும்கூட.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



863. பஞ்சகரః - 10 முழ அளவிற்கு உயரமுள்ளவர். குட்டையானவரே மிக உயரமாகவும் காண்பார். நான்கு கைகளும் துதிக்கையும் கொண்டவர்.

864. பஞ்சப்ரணவபாவிதః - ஸ்ரீம் ஹ்ரீம், க்லீம் க்லௌம் கம் என்ற ஐந்து பிரணவங்களால் உருவகப்படுத்தப் பெறுபவர். ஓம் ஐம் ஹ்ரீம் க்லீம் ஸௌః என்ற ஐந்து பிரணவங்களால் தியானிக்கப் பெறுபவர்.

பஞ்சப்ரம்ஹமயஸ்ப்பூர்தி: பஞ்சாவரணவாரிதः ।
பஞ்சபக்ஷ்யப்ரியः பஞ்சபாணः பஞ்சஶிவாத்மகः ॥ 139

865. பஞ்சப்ரம்ஹமயஸ்ப்பூர்த்திः - சிவபெருமானின் ஸத்யோஜாதர் வாமதேவர் அகோரர் தத்புருஷர் ஈசானர் என்ற ஐந்து பரம்பொருள் தோற்றம் கொண்டவர்.

866. பஞ்சாவரணவாரிதः - ஐந்து ஆவரணங்களுள்ள யந்திரத்தில் வழிபடப்பெறுகிற தேவர்-தேவிகளால் சூழப்பெற்றவர் (1. பிந்துவுடன் கூடிய முக்கோணம் நடுவில். 2. ஆறுகோணத்தின் உள். 3. ஆறு கோணத்தின் வெளியே. 4. எட்டித்தழ்த் தாமரை. 5. நான்கு திக்கிலும் பூபுரம் என்ற ஐந்தாவரணங்கள்) அன்னமயம் பிராணமயம் மநோமயம், விஜ்ஞானமயம் ஆனந்தமயம் என்ற ஐந்து கோசங்களிலுள்ள-வற்ருல் மறைக்கப்பெற்றுள்ள ஆத்மாவானவர்.

867. பஞ்சப்பக்ஷ்ய ப்ரியः - லட்டு கொழுக்கட்டைபோளி (பால் பூரி) பேணி. அப்பம் என்ற ஐந்து இனியபணியாரங்களில் விருப்பமுள்ளவர்.

868 பஞ்சபாணः - கையில் கரும்பு வில்லுடன் சேர்த்து ஏந்திய ஐந்து புஷ்பபாணங்களைக் கொண்டவர். द्रां द्रीं क्लीं ब्लूं सः என்ற ஐந்துபாணமந்திரங்கள் கொண்டவர்.

869. பஞ்சஶிவாத்மகः - ஐந்து சிவபீஜாக்ஷரங்கள் வடிவானவர். யாம், ராம், லாம், வாம், ஸாம், என அவை ஐந்து. சுத்தபஞ்சாக்ஷரமந்திரவடிவினர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



ஷட்கோணபீட: ஷட்சக்ரதாமா ஷட்க்ரந்த்திபேதக: ।
ஷடத்த்வத்த்வாந்த வித்த்வம்ஸீ ஷடங்குல மஹாஹ்ரத: 140.

870. ஷட்கோணபீட: - ஆறுகோணங்கள் உள்ள பீடத்தின் மீது திரிகோணத்திலும் பிந்துவிலும் அமர்ந்தவர்.

871. ஷட்சக்ரதாமா - மூலாதாரம் ஸ்வாதிஷ்ட்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தம், ஆஜ்ஞா என்ற குண்டலினீ சக்ரஸ்தானங்களில் இடம் கொண்டவர்.

872. ஷட்க்ரந்தி பேதக: - மூலாதாரத்தின் கீழும் மேலும், மணிபூரகத்தின் கீழும் மேலும் ஆஜ்ஞா சக்கிரத்தின் கீழும் மேலும் என இரண்டிரண்டாக, பிரும்ம - விஷ்ணு - ருத்திரக்ரந்திகள் உள்ளன. குண்டலினீ சக்தியை எழுப்புகிற ஸாதகன் இந்த ஆறு கிரந்த்திகளையும் (முடிச்சுகளையும்) பிளந்து கொண்டு ஸஹஸ்ராரசக்ரத்தினுள் குண்டலினீ பாயும்படி செய்யவேண்டும். ஸ்ரீ கணேசரே இந்தக்கிரந்திகளைப் பிளந்து ஸஹஸ்ராரம் வரை குண்டலினீயை ஏறச்செய்து பிரும்மாமிருதம் பருகச்செய்பவர்.

873. ஷடத்த்வத்த்வாந்த வித்த்வம்ஸீ - பதம், புவனம், வர்ணம், தத்துவம், கலை, மந்திரம் என்று ஆறுமார்க்கங்களைக் கடந்து தான் தெய்வ வடிவம் காணவேண்டும். அந்த மார்க்கங்கள் எளிதில் புலப்படாதபடி அஜ்ஞான இருள் மறைக்கும். அவ்விருளைப் போக்குபவர். நல்லொளிகாட்டித்தன் நிலை அடையச் செய்பவர்.

874. ஷடங்குல மஹாஹ்ரத: - பெருந்தொந்தியில் ஆறு விரற்கடையாழ முள்ள பெருமடுபோன்ற தொப்புள் உள்ளவர்.

ஷண்முகஷ் ஷண்முகப் ப்ராதா ஷட்ஶக்தி பரிவாரித: ।
ஷட்வைரிவர்க்க வித்த்வம்ஸீ ஷரூர்மிபயப்பஞ்சந: ॥ 141

875. ஷண்முக: - ஆறு தர்சனங்களைத் தம் முகமாகக் கொண்டவர். ஸாங்கியம், யோகம், நியாயம், வைசேஷிகம், பூர்வமீமாம்ஸை, உத்தரமீமாம்ஸை (வேதாந்தம்) என அவை

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



876. ஷண்முகப்ப்ராதா - ஷண்முகனின் அண்ணன்.

877. ஷட்சக்திபரிவாரிதঃ - ஆறு சக்திகள் சூழ இருப்பவர். ஒவ்வொரு மந்திரத்திற்கும் ஹ்ருதயசக்தி, சிரச்சக்தி, சிகா சக்தி, கவசசக்தி, நேத்ரசக்தி, அஸ்திர சக்தி என ஆறு சக்திகள் உண்டு. இதயம், தலை, சிகை, இருபுஜங்கள், கண்கள், உடலைச்சுற்றி என ஆறு அங்கங்களில் நியாஸங்கள் செய்வதால் ஸாதகனுக்கு மந்திரசக்தி உட்புகுந்து அவனிடம் நிலைத்து நிற்கின்றன. அந்த சக்திகள் சூழ இருப்பவர்.

878. ஷட்வைரிவர்க்க வித்த்வம்ஸீ - ஆசை, கோபம், பேராசை, குழப்பம், மதர்ப்பு, பொறாமை என்ற ஆறு இயல்பாக அமைந்த எதிரிகளை மாய்ப்பவர்.

879. ஷடூர்மிப்பயப்பஞ்ஜகঃ - பசி, நாவரட்சி, துயரம் மோகம், மூப்பு, மரணம் என்ற ஆறு அலைபோன்று தொடர்ந்து வரும் தடைகளை நீக்குபவர்.

ஷட்தர்கதூரঃ ஷட்கர்மநிரதঃ ஷட்ரஸாஶ்ரயঃ ।
ஸப்தபாதால சரணঃ ஸப்தத்வீபோருமண்டலঃ ॥ 142

880. ஷட்தர்க்கதூரঃ - ஒருபொருளின் உண்மைநிலையறிய ஆறுவித விசார்வழிகள் (தர்க்கம்) உண்டு. பிரத்யக்ஷம், அனுமானம், உபமானம், சப்தம், அர்த்தாபத்தி, அஸம்ப்பவம் என. இறைவன் இருப்பதை உணர இந்த ஆறும்பயன் படாதாகையால் ஆறுவித விசாரவழிக்கும் அப்பாற்பட்டவர். யுக்திகளைக் கொண்டு நிரூபிக்க இயலாதவர். மந்திரதர்கம், யந்திரதர்கம், தந்திரதர்கம் பிரயோகதர்கம், அணுதர்கம், நியாய தர்கம் என நுட்பொருளறிவிற்கான ஆராய்வு முறைகள், சுக்கிரர், விசுவகர்மா, விஷ்ணு, மயன், கணாதர், கௌதமர் என்ற அறுவர் கண்டுபிடித்தவை. அந்த ஆராய்விற்கும் அப்பாற்பட்டவர்.

881. ஷட்கர்ம நிரதঃ - வேதம் ஓதுதல் - ஓதுவித்தல், தானம் வழங்குதல் - பெறுதல், வேள்வி புரிதல் - செய்வித்தல் என ஆறுகர்மங்கள். இவற்றில் மிகவும் ஈடுபட்டவர். இவற்றில்

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



ஈடுபட்டவர் வடிவில் இருப்பவர்.

882. ஷட்ரஸாஶ்ரயः - இனிப்பு, கைப்பு, புளிப்பு, கசப்பு, கார்ப்பு, உவர்ப்பு என அறுசுவைகளுக்கும் ஆதாரமானவர். அவற்றிற்கு ஆதாரமான ஜலதத்துவமானவர்.

883. ஸப்தபாதாள சரணः - அதலம், விதலம், ஸுதலம், தலாதலம், ரஸாதலம், மஹாதலம் பாதாளம், என்ற ஏழு கீழ் உலகங்களைத் திருவடிகளாகக் கொண்டவர்.

884. ஸப்தத்வீபோருமண்டலः - ஜம்பூ - ப்லக்ஷ-குச-க்ரௌஞ்ச - சாக - சால்மலி - புஷ்கரத்வீபங்களைத்தன் தொடையளவில் கொண்டவர். பூலோகப்பரப்பு அவரது இடுப்பிற்குக் கீழுள்ளது.

ஸப்தஸ்வர்லோகமகுடः ஸப்தஸப்திவரப்ரதः ।
ஸப்தாங்கராஜ்யஸுகதஸ் ஸப்தர்ஷி கணமண்டிதः ॥ 143.

885. ஸப்தஸ்வர்லோகமகுடः- புவர்லோகம், ஸுவர்லோகம், மஹர்லோகம், ஜநோலோகம், தபோலோகம், ஸத்யலோகம், ஸ்வாநந்தம் (கோலோகம்) என்ற ஏழு உலகங்களுக்குக் கிரீடமாக அமைந்தவர்.

886. ஸப்தஸப்தி வரப்ரதः - ஏழு குதிரைகள் பூட்டிய தேருள்ள சூரியனுக்கு வரமளிப்பவர். சடைதாரியான சிவபெருமான் மணிமல்லனுடன் போரிடுகையில் குதிரைதந்து உதவியவர்.

887. ஸப்தாங்கராஜ்ய ஸுகதः - அரசர், அமைச்சர், நண்பர், கருவூலம், நாடு, கோட்டை, படை என்ற ஏழு அங்கங்களுடைய ராஜ்யத்தை அறநெறியில் இயக்கி அமைதி தருபவர்.

888. ஸப்தர்ஷிகணமண்டிதः - கசியபர், அத்ரி, வஸிஷ்ட்டர், விச்வாமித்ரர், கௌதமர், ஜமதக்னி, பரத்வாஜர் என்ற ஏழு ருஷிகளின் கணத்தால் போற்றப்பெற்றவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



ஸப்தச்ச்சந்தோநிதிஸ் ஸப்தஹோதா ஸப்தஸ்வராஶ்ரயஃ ।
ஸப்தாப்த்திகேலிகாஸாரஃ ஸப்தமாத்ருநிஷேவிதஃ ॥144.

889. ஸப்தச்ச்சந்தோநிதிஃ - காயத்திரி, உஷ்ணிக், அனுஷ்டுப், பிருஹதீ, பங்க்தி, த்ரிஷ்டுப், ஜகதீ என்ற சந்தஸ்களுக்கு வைப்பிடமானவர்.

890. ஸப்தஹோதா - ஸோமயாகத்தில் பணிபுரிகிற ஹோதா, மைத்ராவருணர், அச்சாவாகர், அத்த்வர்யு, பிரதிப்ரஸ்தோதா நேஷ்டா, உந்நேதா என்ற எழுவர் வடிவில் இருப்பவர்.

891. ஸப்தஸ்வராஶ்ரயஃ - ஷட்ஜம் ருஷபம் காந்தாரம் மத்த்யமம், பஞ்சமம், தைவதம் நிஷாதம் என்ற ஏழுஸ்வரங்களுக்கும் ஆதாரமான மூல ஒலியானவர்.

892. ஸப்தாப்த்திகேளி காஸாரஃ - நீந்திவிளையாடும் ஓடையாக ஏழு கடல்களையும் கொண்டவர். (லவண - இக்ஷு - ஸுரா - ஸர்பிஸ், க்ஷீர - ததி - சுத்தோதக - என்ற ஏழு கடல்கள்).

893. ஸப்தமாத்ருநிஷேவிதஃ - பிராம்மீ, மாகேச்வரீ, கௌமாரீ, வைஷ்ணவீ, வாராஹீ, மாஹேந்த்ரீ, சாமுண்டா என ஏழு மாதாக்களால் வழிபடப்பெறுகிறவர்.

ஸப்தச்ச்சந்தோமோதமதஸ் ஸப்தச்ச்சந்தோமகப்ரபுஃ ।
அஷ்டமூர்த்தித்த்யேய மூர்த்திஃ அஷ்டப்ரக்ருதி காரணம் ॥ 145.

894. ஸப்தச்சந்தோ மோதமதஃ - காயத்திரி முதலிய ஏழு சந்தஸ்களைக் கேட்ட பெருமகிழ்வில் மதர்த்திருப்பவர். (நா. 889)

895. ஸப்தச்ச்ந்தோமக்கப்ரபுஃ - ஏழு சந்தஸ்களால் வேள்வியில் துதிக்கப்பெறுகிற பெருமையுள்ளவர். (நா. 889)

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



896. அஷ்டமூர்த்தித்யேய மூர்திঃ - பூமி, ஜலம், அக்கினி, வாயு, ஆகாசம், ஸூர்யர், சந்திரன், வேள்விபுரிபவர் என்ற எட்டு வடிவங்கள் கொண்ட சிவபெருமானுல் தியானிக்கப் பெறுபவர். இந்த எட்டாலும் தியானிக்கப் பெறுபவர்.

897. அஷ்டப்ரக்ருதி காரணம் - உலகம் தோன்றக் காரணமான மூலப்ரக்ருதி, மஹத், அஹங்காரம், ஐம்பூத தத்துவங்கள் என்ற எட்டின் மூல காரணம்.

அஷ்டாங்கயோகப்பலப்பூঃ அஷ்டபத்ராம்புஜாஸநঃ ।
அஷ்டஶக்திஸம்ருத்த ஸ்ரீঃ அஷ்டைஶ்வர்ய ப்ரதாயகঃ ॥ 146

898. அஷ்டாங்கயோகப்பலப்பூঃ - யமம், நியமம், ஆஸனம், பிராணாயாமம், பிரத்யாஹாரம், தாரணை, தியானம், ஸமாதி என்ற எட்டு அங்கங்களால் மனமடங்கி யோக நிலையில் உள்ளவருக்கு அவர்களின் இலக்கு நிறை வேறச்செய்பவர்.

899. அஷ்டபத்ராம்புஜாஸநঃ - திரிகோணத்தின் நடுவில் பிந்துவில் அமைந்த் எட்டிதழ்த்தாமரை ஆஸனம் கொண்டவர்.

900. அஷ்டஶக்திஸம்ருத்த ஸ்ரீঃ - எட்டிதழ் தாமரையாஸனத்தின் சக்திகளான தீவ்ரா, ஜ்வாலினீ, நந்தா, போகதா, காமதாயினீ, உக்ரா, தேஜோவதீ, ஸத்யா என்ற எண்மரால் நிறைவுற்ற பெருமை பெற்றவர்.

901. அஷ்டைஶ்வர்ய ப்ரதாயகঃ - அணிமா, மஹிமா, கரிமா, லகிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈசித்வம், வசித்வம் என்ற எட்டு ஸித்திகளைத் தருபவர்.

அஷ்டபீடோபபீட ஸ்ரீரஷ்டமாத்ருஸமாவ்ருதঃ ।
அஷ்டபைரவஸேவ்யோऽஷ்டவஸுவந்த்யோऽஷ்டமூர்த்திப்ருத் ॥

902. அஷ்டபீடோபபீடஸ்ரீঃ - எட்டு பீடங்களிலும் உபபீடங்களிலும் பெருமையுடன் அமர்ந்திருப்பவர். ஸ்வாநந்த புவனத்திலுள்ள பகவானது பீடம் திவ்யம் - பூமியிலுள்ள ஸ்வானந்த புவனம் மயூரேசம். எட்டு விக்கினேஶ க்ஷேத்ரங்கள் உண்டு. வக்ரதுண்டபுரம், ஏகதந்தம், மஹோதரம் என

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



இமயமலையில் மூன்று, கஜவக்திரபுரம், விகடம், விக்நராஜபுரம், ஸம்போதரம், தூம்ரவர்ணம் என ஐந்து இவை முக்கிய பீடங்கள். இவற்றின் உபபீடங்களாக - அதோஷம், பரிலி, வித்யாதீசம், பல்லி, பாரிநேத்ரம், விஜ்ஞாநேசம், ஸித்த்தி, ஸ்த்தாவரம், விஜயபுரம், ஏலாபுரம், கணேசபுரம், காசி, கசியபம், ஜீர்ணாபுரம், நாமலம், ப்பாலசந்திரம், ப்ரவாளகம், கர்மேசம், ராஜஸதனம், கதம்பபுரம், அயோத்தி, மிதிலா, மாயாபுரி, கண்டகி, மணிபூரகம், பிரயாகை, புஷ்பபுரம், அவந்தீ, நர்மதாபுரம், மாஹிஷ்மதி, கர்ணபுரம், கௌண்டின்யபட்டணம், பாராசரம், கஜபுரம், ஸ்ரீபுரம், பதரீ, அம்பாபரம், புண்யபுரம், மாத்ரகம், வல்லவேச்வரம், ப்ரும்ஹபுரம், ஸித்திபுரம், பலினி, கணபட்டிணம், த்ரிஸந்தி யா, தேவ நகரம், ச்வேதவிக்க்நேசம் மந்தாரம், ச்வேதார்க்கவனம், சமீவனம், கஜதந்தபுரம், ரத்னகிரி, வாரணாவதம், விந்தியமலை, நாஸிகா, பர்ஹிஷ்மதி என இவை 56 உபபீடங்கள் (விநாயக ரஹஸ்யம்) இவை இன்று பெரும்பாலும் வழக்கில் பெயர் மாறியுள்ளன. சில அதே பெ யரிலுள்ளன. காசியிலேயே 56 கணபதி க்ஷேத்திரங்கள் உள்ளன. காசியைச் சுற்றி ஏழு ஆவரணங்களில் இவை அமைந்துள்ளன

903. அஷ்டமாத்ருஸமாவ்ருதః - பிராம்மீ முதலிய எழுவர், (நா.*894*) மஹாலக்ஷ்மியுடன் எட்டு மாதாக்களால் சூழப்பட்டவர்.

904. அஷ்டபைரவஸேவ்யః - அஷ்டமாதாக்களின் துணைவர்களான அஸிதாங்கர், ருரு, சண்டர், க்ரோதர், உன்மத்தர், கபாலீ, பீஷணர், ஸம்ஹாரர் என்ற எட்டு பைரவர்களால் வழிபடப்பெறுபவர்.

905. அஷ்டவஸுவந்த்யః - தரன், துருவன், ஸோமன், அஹஸ், அநிலன், அநலன், ப்ரத்யூஷன் ப்ரபாஸன் என்ற எட்டு வசுக்களால் வணங்கப்பெறுபவர்.

906. அஷ்டமூர்த்திப்ருத் - எட்டு உடல்கள் கொண்ட சிவனானவர் (நா *897*)

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அஷ்டசக்ரஸ்ப்புரன்மூர்த்தி ரஷ்டத்ரவ்ய ஹவிஃப்ரியஃ ।
நவநாகாஸநாத்த்யாஸீ நவநித்த்யனுசாஸிதா ॥ 148

907. அஷ்டசக்ரஸ்ப்புரன்மூர்த்திஃ - மூலாதாரம் முதலிய ஆறு (நா 872) மூலா தாரத்திற்குக் கீழுள்ள அகுலசக்கிரம், ஆஜ்ஞாவிற்கு மேலுள்ள அகுலசக்கிரம் என்ற எட்டில் அந்தர்யாமியாகத் துலங்குபவர்.

908. அஷ்டத்ரவ்யஹவிஃப்ரியஃ - அக்கினியில் ஆஹுதிப் பொருளான நெய் கலந்த நெற்பொரி, கரும்பு, ஸக்துமா, அவல், வாழைப்பழம், கொழுக்கட்டை, எள்ளுருண்டை, தேங்காய், என எட்டு பொருள்களைப் பெரிதும் விரும்புபவர்.

909. நவநாகாஸநாத்த்யாஸீ - வாஸுகி, தக்ஷகன், அனந்தன், சங்கபாலன், கம்பளன், பத்மநாபன், கார்கோடகன், காலியன், ஆதிசேஷன் என ஒன்பது நாகர்கள் தாங்கிய ஆஸனத்தில் அமர்ந்துள்ளவர்.

910. நவநித்த்யனுசாஸிதா - பத்மம், மஹாபத்மம், சங்கம், மகரம், கச்சபம், முகுந்தம், நந்தம், நீலம், கந்தர்வம் என்ற ஒன்பது நிதிகளையும் கையாள்பவர்.

நவத்வாரபுராதாரோ நவாதாரநிகேதநஃ ।
நவநாராயணஸ்துத்யோ நவதுர்காநிஷேவித ஃ ॥ 149

911. நவத்வாரபுராதாரஃ- இருகண்கள், இருகாதுகள், வாய், மூக்கு துவாரமிரண்டு, மலத்துவாரம், சிறுநீர்துவாரம் என ஒன்பது வாயில்கள் கொண்ட உடலை ஆதாரமாக்கிய ஆத்மா.

912. நவாதார நிகேதனஃ - மூலாதாரம் முதலியவை (எட்டு) (நா-872-907) லம்பிகா என்ற ஒன்பது குண்டலினியின் ஆதார சக்கிரங்களில் வசிப்பவர்.

913. நவநாராயணஸ்துத்யஃ - தர்மநாராயணர், ஆதி நாராயணர், ரூப நாராயணர், அநந்த நாராயணர், பதரீ நாராயணர், சங்கர நாராயணர், ஸுந்தர நாராயணர், லக்ஷ்மீ

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



நாராயணர், ஸாத்ய்ய நாராயணர், என்ற ஒன்பது நாராயணர்களால் போற்றப்பெறுபவர்.

914. நவதுர்காநிஷேவிதஃ - சைலபுத்ரீ, பிரும்மசாரிணீ, சந்திரகண்டா, கூஷ்மாண்டா, ஸ்கந்தமாதா, காத்யாயினீ, காலராத்திரி, மஹாகௌரி, ஸித்திதா என்ற ஒன்பது துர்க்கைகளால் வணங்கப்பெற்றவர்,

நவநாத மஹாநாதோ நவநாகவிபூஷணஃ।
நவரத்ன விசித்ராங்கோ நவஶக்திஶிரோத்த்ருதஃ॥ 150

915. நவநாதமஹாநாதஃ - ஞானானந்தர், பிரகாசானந்தர், ஸத்யானந்தர், ஆனந்தானந்தர், விமர்சாநந்தர், ஸ்வபாவாநந்தர், ஸுபகாநந்தர், பிரதிபானந்தர், பூர்ணாநந்தர் என்ற ஒன்பது குரு நாதர்களுக்கு மேலான குரு நாதர்.

916. நவநாகவிபூஷணஃ - ஒன்பது நாகர்களை அணிகலனாகக் கொண்டவர் (*நா 909*)

917. நவரத்நவிசித்ராங்கஃ - மாணிக்கம், முத்து, பவழம், மரகதம், புஷ்பராகம், வைரம், நீலம், வைதூர்யம், கோமேதகம் என ஒன்பது ரத்னங்கள் பதித்த அணிகலன் பூண்டு எழிலுறத்துலங்குபவர்.

918. நவஶக்தி ஶிரோத்ருதஃ - தீவ்ரா முதலான ஒன்பது பீட சக்திகளால் தலையில் தாங்கப்பெற்றவர் (*நா 195,900*)

தஶாத்மகோ தஶபுஜோ தஶதிக்பதிவந்திதஃ।
தஶாத்த்யாயோ தஶப்ராணோ தஶேந்த்ரியநியாமகஃ॥ 151

919. தஶாத்மகஃ - பத்து திக்குகளையும் தன் உடலாக்கிக் கொண்டவர்

920. தஶபுஜஃ - மஹாகணபதியின் வடிவில் பத்து கைகளுள்ளவர்.

921. தஶதிக்பதிவந்திதஃ - இந்திரன் அக்னி, யமன், நிர்ருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன், பிரும்மா,

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



விஷ்ணு என்ற திக்பாலர்களால் வணங்கப்பெற்றவர்.

922. தஶாத்த்யாய: - ஆறு அங்கங்களுடன் நான்கு வேதங்களையும் ஓதுபவர், அவ்வாறு ஓதுபவரின் வடிவில் இருப்பவர்

923. தஶப்ராண: - பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என்ற ஐந்து முக்கிய பிராணன்கள், நாகன் கூர்மன், க்ருகரன், தேவதத்தன், தனஞ்ஜயன் என்ற ஐந்து உபப்பிராணன்கள். இவ்வடிவிலிருப்பவர். இவற்றை இயக்குபவர்.

924. தசேந்த்ரியநியாமக: - ஞானேந்திரியங்கள் ஐந்தையும் கர்மேந்திரியங்கள் ஐந்தையும் கட்டுப்படுத்துபவர்.

தஶாக்ஷர மஹாமந்த்ரோ தஶாஶாவ்யாபி விக்ரஹ: ।
ஏகாதசாதிபீ ருத்ரை: ஸ்துத ஏகாதஶாக்ஷர: ॥ 152

925. தஶாக்ஷரமஹாமந்த்ர: - பத்தெழுத்து கொண்ட ஹஸ்திபிஶாசி - உச்சிஷ்டவிநாயக மா மந்திரமாக உள்ளவர்.

926. தஶாஶாவ்யாபிவிக்ரஹ: - பத்து திக்குகளிலும் பரவிய விராட் மேனியினர் *(நா 919)*

927. ஏகாதசாதிபி: ருத்ரைஸ்ஸ்துத: - மஹாதேவர், சிவர், ருத்திரர், சங்கரர், நீலலோஹிதர், ஈசானர், விஜயர், பீமர், தேவதேவர், பவோத்ப்பவர், ஆதித்யர், என்ற ருத்திரர்களை முன்னிலையில் கொண்டுள்ள ஆயிரக்கணக்கான ருத்திரர்களால் போற்றப்படுபவர்.

928. ஏகாதஶாக்ஷர: - பதினோரு அக்ஷரங்கள் கொண்ட மந்திர வடிவினர்

த்வாதஶோத்தண்ட தோர்த்தண்டோ த்வாதஶாந்த நிகேதன: ।
த்ரயோதஶாப்பிதாப்பிந்ந விச்வேதேவாதிதைவதம் ॥ 153

929. த்வாதஶோத்தண்ட தோர்த்தண்ட:- ஶ்ரீவித்யா மஹாகணபதி என்ற தோற்றத்தில் மாதுளை முதலிய பத்தையும்

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அமுதகலசத்தையும் பெருஞ்சங்கிலியையும் பன்னிரு நீண்டு உருண்டு பருத்த கைகளில் ஏந்தி கழுத்தின் கீழ் யுவதியும் மேல் யானையுமாகச் செங்கதிர் வண்ணத்துடன் உள்ளவர். (நா-37,254,277) ஸ்ரீவித்யையும் ஸ்ரீமஹாகணபதியும் இணைந்த தோற்றம்.

930. த்வாதஶாந்த நிகேதநः - ஆஜ்ஞாசக்ரத்தின் மேல் குருவின் தியானஸ்தானமாக உள்ள த்வாதசாந்தம் என்ற சக்கிரத்தில் அமர்ந்தவர். மூலாதாரத்தின் கீழ் அகுல சக்ரம் ஆஜ்ஞையின் மேல் அகுல சக்ரம் அதன் மேல் பிந்துவின் அர்த்த சந்திரன், ரோதினீ, நாதம் என்ற ஸ்தானங்கள். அதன் மேல் நாதாந்தமெனும் துவாதசாந்தம் என்பர்.

931. த்ரயோதஶாபிதா ப்பிந்ந விஶ்வேதேவாதிதைவதம்- ஸத்யர், வஸு, புரூரவர் ஆத்ரவர், துரி, லோசனர், காலர், காமர், ஸாது, ஸத்குரு, க்ரது, தக்ஷர், வஸுபந்தர் என்ற பதிமூன்று விச்வே தேவர்களுக்குமேலாளரான தெய்வம்.

சதுர்தஶேந்த்ரவரதஶ் சதுர்தஶ மநுப்ரபுः ।
சதுர்தஶாதிவித்யாட்ட்ய ஶ்சதுர்தஶஜகத்ப்ரபுः ॥ 154

932. சதுர்தஶேந்த்ரவரதः- யஜ்ஞர், ரோசநः, ஸத்யஜித், த்ரிசிகர், விபு, மந்த்ரத்ருமர், புரந்தரர், பலி, அத்ப்புதர், சம்பு, வைத்த்ருதः, ருததாமா, திவஸ்பதி, சுசி என்ற பதினான்கு இந்திரர்கள் விரும்பியதையும் அளித்தவர்.

933. சதுர்தஶமநுப்ரபுः- ஸ்வாயம்புவர், ஸ்வாரோசிஷர், உத்தமர், தாமஸர், ரைவதர், சாக்ஷுஷர், வைவஸ்வதர், ஸாவர்ணி, தக்ஷஸாவர்ணி, ப்ரம்ஹஸாவர்ணி, தர்மஸாவர்ணி, ருத்ர ஸாவர்ணி, தேவஸாவர்ணி, இந்திர ஸாவர்ணி. என்ற பதினான்கு மனுக்களின் பிரபு.

934. சதுர்தஶாதிவித்யாட்ட்யः- நான்குவேதங்கள், ஆறு வேதாங்கங்கள் நான்கு உபவேதங்கள் எனப் பதினான்கு வித்யாஸ்தானங்கள், இவற்றுடன் மீமாம்ஸா, தர்மசாஸ்திரம், புராணம், நியாய சாஸ்த்ரம் என நான்கு சேர்த்துப் பதினெட்டு

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



வித்யாஸ்தானங்கள். இவற்றைக் கல்விச் செல்வமாகக் கொண்டவர், இத்தகையவர் வடிவிலிருப்பவர்

935. சதுர்தசஜகத்ப்ரபுः - பூமிக்குக்கீழுள்ள ஏழு உலகங்கள் (நா-883) மேலுள்ள ஆறு உலகங்கள் (நா-885) பூமி இவற்றின் தலைவர்.

ஸாம பஞ்சதஶः பஞ்சதஶீ ஶீதாம்ஶுநிர்மல ः।
ஷோடஶாதார நிலயः ஷோடஶஸ்வர மாத்ருகः ॥ 155

936. ஸாம பஞ்சதஶः - பஞ்சதசஸாம (ஸ்தோத்ரம்) என்று துதி மந்திரமாக விளங்குபவர்.

937. பஞ்சதஶீஶீதாம்ஶுநிர்மலः - பௌர்ணமியின் நிலவு போல் மாசற்றவர்.

938. ஷோடஶாதார நிலயः - குரு முகமாக அறியவேண்டிய பதினாறு சக்கிரங்களில் தங்குபவர்.

939. ஷோடஶஸ்வரமாத்ருகः - அமுதல் அः வரை பதினாறு உயிர் எழுத்துக்களை அளந்து அமைத்தவர்.

ஷோடஶாந்தபதாவாஸः ஷோடஶேந்து கலாத்மகः।
கலா ஸப்ததஶீ ஸப்ததஶः ஸப்ததஶாக்ஷரः ॥ 156

940. ஷோடஶாந்த பதாவாஸः - சிரஸில் ஸஹஸ்ரா ரத்தாமரையிலுள்ள ஷோடஶாந்தத்தில் இருப்பவர். ஆஜ்ஞா சக்கிரத்தின் மேல் பிரும்மரந்திரத்தின் கீழ் பிந்துவின் எட்டு அடுக்குகள் உள்ளன. அர்த்த சந்திரம் ரோதினி நாதம் நாதாந்தம் சக்தி வியாபிகா ஸமநா உன்மனி என. உன்மனிக்கும் மேலுள்ள ஸ்தானம் ஷோடசாந்தம் கீழ் எட்டுச் சக்ரங்கள் (நா 907) மேல் பிந்துவின் எட்டு அடுக்கு. உந்மனி 16-வது. அதன் முடிவில் தெரிவதால் ஷோடசாந்தம்.

941. ஷோடஶேந்து கலாத்மகः - அம்ருதா, மானதா, பூஷா, துஷ்டி, புஷ்டி, ரதி, த்ருதி, ஶஶிநீ, சந்த்ரிகா, காந்தி, ஜ்யோத்ஸ்நா, ஸ்ரீ, ப்ரீதி, அங்கதா, பூர்ணா, பூர்ணாம்ருதா என்ற பதினாறு சந்திரகலைகளால் நிறைந்து இருப்பவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



942. ஸப்ததஸீகலா - திரிபுராகமத்தின்படி, திரயோ-சாக்ஷரியும் துர்யாவும் சேர்ந்த பதினேழு எழுத்துக்கள் கொண்ட மந்திர வடிவானவர். குரு முகமாக அறியத்தக்க மந்திரம் இது.

943. ஸப்ததஸஃ - ஸப்ததசஸ்தோமம் என்ற பதினேழு ஸாமவேத மந்திரங்களாயிருப்பவர்.

944. ஸப்ததஸாக்ஷரஃ - வேள்விகளில் தேவதைகளை வரவழைக்கவும் திருப்திப்படுத்தி அருள் பெறவும் உரக்கக்கூறுகிற மந்திர ஒலிகள் 17 எழுத்துக்கள் கொண்டவை. வௌஷட், ஆச்ராவய, யஜ, அஸ்து, ச்ரௌஷட், யேயஜாமஹே என்பவை இவை. வேள்வியின் தொடக்கத்தி லிருந்து முடியும் வரை அடிக்கடி ஒலிப்பவை. இந்த ஒலிவடிவினர்.

அஷ்டாத ஸத்வீபபதி: அஷ்டாதஸபுராணக்ருத்

அஷ்டா தஸௌஷதீஸ்ருஷ்டி ரஷ்டாதஸவிதிஸ் ஸ்ம்ருத: 157

945. அஷ்டாதஸத்வீபபதிஃ - துவீபங்கள் 7. (நா-885) ஸ்வர்ண ப்ரஸ்த்தம், சந்த்ர சுக்லம், ஆவர்தனம், ரமணகம், மந்தரஹரிணம், பாஞ்சஜன்யம், ஸிம்ஹளம், ஸுதர்ஸநம், காசியபம், நாகம், லங்கா என 11 உபத்வீபங்கள் இவற்றின் அதிபதி.

946. அஷ்டாதசபுராணக்ருத்- கணேசம் மத்ஸ்யம், மார்-கண்டேயம், பவிஷ்யம், பாகவதம், ப்ராம்ஹம், ப்ரும்ஹ வைவர்தம், பிரும்ஹாண்டம், வாமனம், சிவம், வராஹம், விஷ்ணு, அக்னி, நாரதம், பத்மம், லிங்கம், கூர்மம், ஸ்காந்தம் என்ற 18 புராணங்களை எழுதிய வியாஸரானவர். வியாஸர் கூற எழுதியவர்.

947. அஷ்டாதஸௌஷதீ ஸ்ருஷ்டிஃ - 18 வகை தான்யங்களைப் படைப்பவர். செந்நெல், சம்பா நெல், குருவை நெல், யவை, கோதுமை, வால் கோதுமை, வரகு, சாமை, தினை, கொள்ளு, சோளம், உளுந்து, பயறு, துவரை, கடலை, மொச்சை, எள்ளு, மங்குட்டப்பயறு, எனப் பதினெட்டு தானியங்களையும் அவற்றின் வகைகளையும் படைத்தவர்

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



948. அஷ்டாஶவிதிः ஸ்ம்ருதः- *மீமாம்ஸாசாஸ்திரத்தில் 3 விதிகள் உண்டு. அபூர்வ விதி, நியம விதி, பரிஸங்க்யா விதி என. இவை ஒவ்வொன்றும் உத்பத்திவிதி, விநியோக விதி பிரயோக விதி என மூன்று விதம். இவை கௌணம் முக்க்யம் என இரு விதம். இந்த 18 விதிகளின் வடிவில் வேதப்பொருள் அறிய உதவுபவர்.*

அஷ்டாதலிபிவ்யஷ்டி ஸமஷ்டிஜ்ஞான கோவிதः ।
ஏகவிம்ஶः புமான் ஏகவிம்ஶத்யங்குளி பல்லவः ॥ 158

949. அஷ்டாதஶலிபிவ்யஷ்டிஸமஷ்டிஜ்ஞான கோவிதः - *18 லிபிகளைத் தனித்தும் அவற்றின் உட்பிரிவுடனும் அறிபவர். ஸம்ஸ்கிருதம், பிராகிருதம், உதீசீ, மஹாராஷ்ட்ரீ, மாகதீ, மிச்ர மாகதீ, சகாபீரீ, அவந்தீ, திராவிட, ஓட்ரியா, பாச்சாத்யா, ப்ராச்யா, பாஹ்லீகா, ரந்திகா, தாக்ஷிணாத்யா, பைசாசீ, ஆவந்தீ, சௌரஸெனி என அவை 18 மொழிகளின் லிபிகள்.*

950. ஏகவிம்ஶः புமான் - இருபத்தோராவதான புருஷன். பஞ்சீகரணமடைந்த ஐந்து மஹா பூதங்கள், ஐந்து பூத குணங்களாலான சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் கந்தம் என ஐந்து, ஞான இந்திரியங்கள் ஐந்து, பூத மூல நிலையான தன்மாத்ரங்கள் 5 என இருபது ஜட தத்வங்கள் 21வது புருஷன் ராசிபுருஷன் எனப்படுகிற ஜடத்துடன் இணைபவன் *(நா-734, 738, 741)*

951. ஏகவிம்ஶத்யங்குளிபல்லவः - கைகளில் *10,* கால்களில் *10,* துதிக்கையில் ஒன்று என *21* துளிர்போன்ற விரல்கள் கொண்டவர் (இரு கைகளுள்ள வடிவம்)

சதுர்விம்ஶதிதத்வாத்மா பஞ்சவிம்ஶாக்க்யபூருஷः ।
ஸப்தவிம்ஶதிதாரேஶः - ஸப்தவிம்ஶதியோகக்ருத் ॥ 159

952. சதுர்விம்ஶதிதத்வாத்மா - இருபது ஜடத த்வங்களுடன் *(நா-950)* உள்ளம், (மனம் புத்தி) அஹங்காரம், மஹத், பிரகிருதி என்ற தத்துவங்களுமானவர் *(நா 734 - 41)*

953. பஞ்சவிம்ஶாக்க்ய பூருஷः - *25*வது தத்துவமான



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



புருஷனுமானவர் (நா 74 - 950)

954. ஸப்தவிம்ஶதி தாரேஶ: - அசுவினீ முதலிய 27 நட்சத்திரங்களின் ஈசன்

955. ஸப்த விம்ஶதியோகக்ருத் - விஷ்கம்பம் முதலான யோகங்களை அமைத்தவர்.

த்வாத்ரிம்ஶத்ப்பைரவாதீஶ: சதுஸ்த்ரிம்ஶந்மஹா ஹ்ரத:।
ஷட்த்ரிம்ஶத்தத்வ ஸம்ப்பூதி: அஷ்டத்ரிம்ஶத்கலா தநு:॥

956. த்வாத்ரிம்ஶத்பைரவாதீஶ: - முப்பத்திரண்டு பைரவர்களின் ஈஶன். அஸிதாங்கர், ருரு, சண்டர், க்ரோதர், உன்மத்தர், கபாலி, பீஷணர், ஸம்ஹாரர், பீமலோசனர், ஸம்வர்தர் (கிரீடி) பூதேசர், க்ரோதீசர், காலர், தண்டபாணி, மஹாருத்ரர், லம்பகர்ணர், விச்வேசர், அபீரு, ஸ்த்தாணு, ராக்ஷஸேச்வரர், நகுலீசர், க்ஷீரகண்டகர், விக்ருதாக்ஷர், த்ரிஸந்த்யேச்வரர், ஆனந்தர், யோகீசர், வக்ரதுண்டர், பீருகர், கபிலாம்பரர், பத்ரஸேனர், க்ரமதீச்வரர், வ்யோம கேசர் என இவர்கள் 32.

957. சதுஸ்த்ரிம்ஶத் (ந்) மஹாஹ்ரத:- பாரதம் முழுவதும் உள்ள புஷ்கரம் முதலிய தேவர்கள் அமைத்த 34 புண்ய தீர்த்தங்கள் (தடாகம் தாரை முதலியவை) வடிவினர்.

958. ஷட்த்ரிம்ஶத்தத்வஸம்ப்பூதி: - ஜடதத்துவங்கள் 24 வித்யாதத்துவங்கள் 7 ஆத்மதத்துவங்கள் 5 ஆக 36 தத்துவங்களின் உற்பத்தி ஸ்தானம் (நா 374)

959. அஷ்டத்ரிம் ஶத்கலாதநு: - தூம்ரார்ச்சிஸ், ஊஷ்மா, ஜ்வலிநீ, ஜ்வாலிநீ, விஸ்ப்புலிங்கிநீ, ஸுஶ்ரீ, ஸுரூபா, கபிலா, ஹவ்யவாஹினீ, திவ்யவாஹினி என்ற 10 அக்னி கலைகள், தபிநீ தாபிநீ, தூம்ரா, மரீசி, ஜ்வாலிநீ, ருசி, ஸுஷும்நா, போகதா, விச்வா, போதிநீ, தாரிணீ, க்ஷமா என்ற 12 ஸூர்ய கலைகள், அம்ருதா மாநதா முதலிய சந்திர கலைகள் 16 (நா 941) என அக்னி ஸூர்யன் சந்திரன் வடிவிலுள்ளமையால் 38 கலைகள் உள்ளவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



நமதேகோபஞ்சாஶந் மருத்வர்க நிரர்கல: ।
பஞ்சாஶதக்ஷர ஶ்ரேணீ பஞ்சாஶத்ருத்ரவிக்ரஹ: ॥ 161

960. நமதேகோந பஞ்சாசத்மருத்வர்கநிரர்கள:- நாற்பத்தொன்பது மருத்துகளின் கணமும் வணங்குவதால் தடையின்றிச் செல்பவர் - கசியபருக்குத் திதியிடம் பிறந்த மருத்துகள் ஏழு பேர். ஆவஹர், ப்ரவஹர், ஸம்வஹர். உத்வஹர், விவஹர், பரிவஹர், ஸம்வஹர் என. இவர்கள் கருவில் இருக்கும்போது திதியின் புத்திரர்கள் அசுரர்களாகி விடுகிற பயத்தால் இந்திரன் கருவைச் சிதைக்க வயிற்றினுட் புகுந்து வெட்ட ஒவ்வொரு குழந்தையும் ஏழாயிற்று. இறைவனின் ஸங்கல்பத்தில் இந்திரன் எதிர்பார்த்ததற்கு மாறுக 49 மருத்துகளாக வாயுதேவனுக்கு உதவுபவர்களாகி மருத்தும் வாயுவும் ஒன்றே என்ற எண்ணச்செய்தனர். அந்த மருத்துகளால் வணங்கப்பெற்றவர். அந்த மருத்துகள் 49, ஸத்வஜ்யோதிஸ், ஆதித்யர், ஸத்யஜ்யோதிஸ், திர்க்ஜ்யோதிஸ், ஸஜ்யோதிஸ், ஜ்யோதிஷ்மான், ஹரிதர், ருதஜித், ஸத்யஜித், ஸுஷேணர் ஸேநஜித், ஸத்யமித்ரர், அபிமித்ரர், ஹரிமித்ரர், க்ருதர், ஸத்யர், த்த்ருவர், த்தர்த்தா, வித் தர்தா, விதா, ரயர் த்வாந்தர், துனி, உக்ரர், பீமர், அபியு, ஸாக்ஷிபர், ஈத்ருக், அந்யாத்ருக், யாத்ருக், ப்ரதிக்ருத், ருக், ஸமிதர், ஸம்ரம்ப்பர், ஈத்ருக்ஷர், புருஷர், அந்யாத்ருசர், சேதஸர், ஸமிதா, ஸமீத்ருக்ஷர், ப்ரத்ருக்ஷர், மாருதி, ஸரதர், தேவர், திக், யஜுஸ், அநுத்ருக், ஸாம, மானுஷீவிஶ் என (வாயு புராணம்)

961. பஞ்சாஶதக்ஷரஶ்ரேணீ - ஐம்பது அக்ஷரவடிவினர். (16 உயிர் எழுத்துக்கள் 25 வர்க்க எழுத்துகள் யரலவ ஶஷஸஹ க்ஷ என்பது ஐம்பது)

962. பஞ்சாஶத் ருத்ரவிக்ரஹ: - ஸ்ரீகண்டன் முதல் சிவன் வரையிலுள்ள 50 ருத்திர வடிவினர்.

பஞ்சாஶத் விஷ்ணுஶக்தீஶ: பஞ்சாஶந்மாத்ருகாலய: ।
த்விபஞ்சாஶத் வபுஶ்ஶ்ரேணீ த்ரிஷஷ்ட்யக்ஷரஸம்ஶ்ரய:॥ 162

963. பஞ்சாஶத் விஷ்ணு ஶக்தீஶ: - ஐம்பது விஷ்ணுக்களுக்கும் அவர்களது சக்திகளுக்கும் ஈசர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



964. பஞ்சாஶத் மாத்ருகாலயஃ - ஐம்பது அக்ஷரங்களில் பிந்து கூடிய மாத்ருகாக்ஷரங்களின் லயநிலையில் நாத வடிவானவர். 50 சக்தி பீடங்களிலும் வசிப்பவர்

965. த்விபஞ்சாஶத்வபுஶ்ஶ்ரேணீ - ஸம்ஸாரபந்தம் எற்படுத்துகிற அஜ்ஞானத்தின் விளைவான 52 பாசங்களையும் தடைகளையும் விக்னரூபமாக தன் வடிவமாகக் கொண்டவர். (ஸாங்கிய காரிகா, லிங்க புராணம்)

966. த்ரிஷஷ்ட்யக்ஷரஸம்ஶ்ரயஃ - பாசுபத முறையில் பாணினி கூறுகிற 63 அட்சரங்களுக்குப் புகலிடமானவர்.

சதுஷ்ஷஷ்ட்யர்ணநிர்ணேதா சதுஷ்ஷஷ்டிகலாநிதிஃ।
சதுஷ்ஷஷ்டி மஹாஸித்த யோகிநீ ப்ருந்த வந்திதஃ॥ 163

967. சதுஷ்ஷஷ்ட்யர்ணநிர்ணேதா சிவாகமம் கூறுகிற 64 எழுத்துக்கள் வடிவானவர் (உயிர் எழுத்தில் ப்ளுதம் சேர்வதால் எண்ணிக்கை கூடும்.)

968. சதுஷ்ஷஷ்டி கலாநிதி ஃ - அறுபத்து நான்கு கலைகளைச் செல்வமாகக் கொண்டவர்.

969. சதுஷ்ஷஷ்டி மஹாஸித்த யோகிநீப்ருந்த வந்திதஃ - அக்ஷோப்யா முதலிய 64 யோகினிகளின் கணங்களால் வணங்கப்பெற்றவர்.

அஷ்டஷஷ்டி மஹாதீர்த்த க்ஷேத்ரபைரவபாவநஃ।
சதுர்ணவதி மந்த்ராத்மா ஷண்ணவத்யதிகப்ரபுஃ॥ 164

970. அஷ்டஷஷ்டி மஹாதீர்த்த க்ஷேத்ரபைரவ பாவிதஃ - அறுபத்தெட்டு சைவதீர்த்தங்களிலுள்ள பைரவர்களால் தியானிக்கப் பெற்றவர்.

971. சதுர்ணவதி மந்தராத்மா - 94 மந்திரவடிவினர். அக்னி கலைகள் 10, ஸூர்ய கலைகள் 12, சந்திர கலைகள் 16, இவற்றின் மந்திரம், 50 அட்சரங்களான மாத்ருகாமந்திரம் 50,

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



ஹம்ஸஶ்ஶுசிஷத் 'ப்ரதத்விஷ்ணு:' விஷ்ணுர்யோநிம் த்ரியம்பகம், தத்விஷ்ணோ: என்ற - பிரும்மா, விஷ்ணு, ருத்ரர், ஈச்வரன், ஸதாசிவர் இவர்கள் ஐவரின் கலா மந்திரங்கள் - 5, மூலமந்திரம் என்ற 94 ஸாமான்யார்க்கிய விசேஷார்க்கிய திரவ்யசுத்திக்கான மந்திர வடிவினர்.

972. ஷண்ணவத்யதிகப்ரபு: - ஸ்ரீசக்கிர பூஜையில் வழிபடப்பெறுகிற 96 தேவதைகளுக்கும் ஸ்ரீவித்யையையும் கணேசரையும் இணைத்து வழிபடுகிற ஸ்ரீவித்யா கணபதி வழிபாட்டில் கூடுதலாகிற தேவதைகளுக்கும் பிரபு (தந்திரராஜம்)

**ஶதாநந்தஶ் ஶதத்ருதி: ஶதபத்ராயதேக்ஷண: ।**
**ஶதாநீகஶ் ஶதமக்கஶ் ஶதத்தார வராயுத: ॥ 165**

973. ஶதாநந்த: - பூர்ண யௌவனமும் செல்வமும் கல்வியும் பேரறிவும் திறமையும் உடல் வலிவும் ஏனையதும் மிக்க மனிதன் பெறுகிற ஆனந்தம், இதனைப் போன்று படிப்படியாக நூறு நூறு மடங்காக வரிசையாக விரிகிற மனுஷ்யகந்தர்வன், தேவகந்தர்வன், பித்ருக்கள், ஆஜானஜதேவர் ,கர்ம தேவர், தேவர், இந்திரர், பிருஹஸ்பதி, பிரஜாபதி, பிரும்மா என்பவர்களின் ஆனந்தம் - நூறு நூறு மடங்காகப் பெறுகிற ஆனந்தம் இவை அனைத்திற்கும் ஈடாக காமவசப்படாத ச்ரோத்ரிய பிரும்மஞானி பெறுகிற ஆனந்தம் இவை அனைத்திற்கும் இருப்பிடமானவர் (தைத்திரீய உபநிடதம்)

974. ஶதத்ருதி : - எண்ணற்ற உலகங்களைத் தாங்குபவர்.

975. ஶதபத்ராயதேக்ஷண: - மலர்ந்த நூறிதழ்த்தாமரை போன்ற விரிந்த கண்களுள்ளவர்.

976. ஶதாநீக: - எண்ணற்ற படைகள் உள்ளவர்.

977. ஶதமக்க: - நூற்றுக்கணக்கான வழிபாட்டு முறைகளுள்ளவர். இந்திரன் வடிவினர்

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



978. ஶததாரவராயுத: கூரிய முனைகள் கொண்ட வஜ்ராயுதத்தை ஆயுதமாகக் கொண்டவர்.

ஸஹஸ்ரபத்ரநிலயஸ் ஸஹஸ்ரப்பணபூஷண: ।

ஸஹஸ்ரஶீர்ஷா புருஷ: ஸஹஸ்ராக்ஷ: ஸஹஸ்ரபாத் ॥ 166

979. ஸஹஸ்ரபத்ரநிலய: - ஆயிரம் இதழ்த்தாமரை வடிவிலுள்ள ஸஹஸ்ராரசக்கிரத்தில் உறைபவர்.

980. ஸஹஸ்ரப்பண பூஷண: - ஆயிரம் சிரஸுு படைத்த ஆதிசேஷனை அணியாகக் கொண்டவர்.

981. ஸஹஸ்ரஶீர்ஷா புருஷ: - ஆயிரக்கணக்கில் தலைகள் உள்ள விராட்புருஷனானவர்.

982. ஸஹஸ்ராக்ஷ:- ஆயிரக்கணக்கான கண்கள் உள்ள விராட்புருஷன்.

983. ஸஹஸ்ரபாத் - ஆயிரக்கணக்கில் திருவடிகள் உள்ள விராட்புருஷன்.

ஸஹஸ்ரநாம ஸம்ஸ்துத்ய: ஸஹஸ்ராக்ஷபலாபஹ: ।

தஶஸாஹஸ்ர ப்பணப்ருத்ப்ணிராஜக்ருதாஸந: ॥ 167

984. ஸஹஸ்ரநாம ஸம்ஸ்துத்ய: - ஆயிரம் திருநாமங்களால் நன்கு போற்றப்பெறுபவர்.

985. ஸஹஸ்ராக்ஷபலாபஹ: - தவறாக நடந்துகொள்ளும் போது இந்திரனது பலத்தையும் குன்றச் செய்பவர்.

986. தஶஸாஹஸ்ரப்பணப்ருத்ப்பணிராஜக்ருதாஸந: - பத்தாயிரம் தலைகளுள்ள ஸர்பராஜனின் மீதமர்ந்தவர்.

அஷ்டாஶீதி ஸஹஸ்ராத்ய மஹர்ஷிஸ்தோத்ர யந்த்ரித: ।

லக்ஷாதீஶப்ரியாதாரோ லக்ஷாதார மநோமய: ॥ 168

987. அஷ்டாஶீதி ஸஹஸ்ராத்ய மஹர்ஷி ஸ்தோத்ரயந்த்ரித: - படைப்பின் தொடக்கத்தில் அநலன் என்ற அஸுுரன் நெருப்பு போன்று உலகை வாட்ட, எண்பத்தெட்டாயிரம் மஹரிஷிகள் அருகம்புல் கொண்டு வழிபட அதற்குக் கட்டுப்பட்டு அனலனை அடக்கி உலகிற்கு நலம் புரிந்தவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



988. லக்ஷாதீஶப்ரியாதாரঃ - பெருஞ்செல்வந்தர்களான குபேரன் முதலானோரின் வளர்ச்சிக்கான இனிய ஆதாரமானவர். லக்ஷன் என்ற தன் புதல்வனிடம் மிகுந்த பிரிய முள்ளவர்.

989. லக்ஷாதாரமனோமயঃ - மனத்தை இலக்கில் பதித்த யோகியின் சித்தமானவர்.

சதுர்லக்ஷஜபப்ரீதঃ சதுர்லக்ஷப்ரகாஶிதঃ ।

சதுரஶீதிலக்ஷாணாம் ஜீவாநாம் தேஹஸம்ஸ்த்திதঃ ॥ 169

990. சதுர்லக்ஷஜபப்ரீதঃ - நான்கு லக்ஷம் முறை செய்த தன் மந்திர ஜபத்தால் மகிழ்பவர்.

991. சதுர்லக்ஷப்ரகாஶிதঃ - நான்கு லக்ஷம் சுலோகங்கள் கொண்ட *18* புராணங்களிலும் போற்றப்பெறுபவர்.

992. சதுரஶீதிலக்ஷாணாம் ஜீவாநாம் தேஹஸம்ஸ்த்திதঃ - எண்பத்து நான்கு லக்ஷ வகை உயிரினங்களினுள் வசிப்பவர்.

கோடிஸூர்யப்ரதீகாஶঃ கோடி சந்த்ராம்ஶுநிர்மலঃ ।

ஶிவாபவாத்த்யுஷ்ட கோடி விநாயகதுரந்தரঃ ॥ 170

993. கோடிஸூர்யப்ரதீகாஶঃ - கோடி ஸூர்யர்களுக் கொப்பான ஒளி கொண்டவர்.

994. கோடி சந்த்ராம்ஶு நிர்மலঃ - கோடிக்கணக்கான சந்திர ஒளி கொண்டு மாசற்றிருப்பவர்

995. ஶிவாபவாத்த்யுஷ்டகோடி விநாயகதுரந்தரঃ - பார்வதி தேவிக்கும் சிவபெருமானுக்கும் பணி விடை புரிகிற மூன்றரைக் கோடி விநாயகர்களின் தலைமைப் பொறுப்பை ஏற்றவர்.

ஸப்தகோடி மஹாமந்த்ர மந்த்ரிதாவயவத்யுதিঃ ।

த்ரயஸ்த்ரிம் ஶத்கோடிஸுரஶ்ரேணீ ப்ரணதபாதுகঃ ॥ 171

அநந்த நாமா(அ)நந்த ஸ்ரீரநந்தாநந்த ஸௌக்க்யதঃ ॥

996. ஸப்தகோடி மஹாமந்த்ர மந்த்ரிதாவயவத்யுதিঃ - ஏழு கோடி மஹாமந்திரங்களின் ஜபத்தால் பேரருள் மிகுந்து ஒளி வீசுகிற வடிவமைப்புள்ளவர்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



997. த்ரயஸ்த்ரிம்ஶத்கோடிஸுரஸ்ரேணீப்ரணத பாதுகஃ- முப்பத்து முக்கோடி தேவர் கூட்டத்தால் திருவடிகளின் பாதுகைகளில் வணங்கப்பெற்றவர்

998. அநந்தநாமா - எண்ணற்ற பெயர்களுள்ளவர். எல்லா எழுத்துக்களும் அவைகளாலான எல்லா சொற்களும் இவரது திருநாமங்களே.

999. அநந்த ஸ்ரீஃ - எல்லையற்ற செல்வம் புகழ் முதலிய பெரும் சீரைக் கொண்டவர்.

1000. அநந்தாநந்த ஸௌக்க்யதஃ - வரையற்றப் பேரின்ப நிலையான பிரும்மானந்தத்தை அருள்பவர்.

இதி வைநாயகம் நாம்நாம் ஸஹஸ்ரமித மீரிதம் । 172
இதம் ப்ராஹ்மே முஹூர்த்தே யஃ படதி ப்ரத்யஹம் நரஃ ।
கரஸ்தம் தஸ்ய ஸகலமைஹிகாமுஷ்மிகம் ஸுகம் 173

இவ்வாறு ஸ்ரீவிநாயகரது ஆயிரம் நாமங்கள் கூறப் பட்டன.

இந்த ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரத்தை நாள்தோறும் வைகறையில் படிக்கும் பக்தனுக்கு இம்மையிலும் மறுமையிலும் எல்லா வகையான சுகங்களும் கையில் உள்ளன.

பாராயணம் செய்பவர்கள் பெறும் பயன்கள் பல

ஆயுராரோக்யமைஶ்வர்யம் தைர்யம் ஶௌர்யம் பலம் யஶ: ।
மேதா ப்ரஜ்ஞா த்ருதி: காந்தி: ஸௌபாக்யமதிரூபதா ॥ 174 ॥

ஸத்யம் தயா க்ஷமா ஶாந்திர் தாக்ஷிண்யம் தர்மசீலதா ।
ஜகத்ஸம்யமநம் விஶ்வஸம்வாதோ வாதபாடவம் ॥ 175 ॥

ஸபாபாண்டித்யமௌதார்யம் காம்பீர்யம் ப்ரஹ்மவர்ச்சஸம் ।
ஔந்நத்யம் ச குலம் ஶீலம் ப்ரதாபோ வீர்யமார்யதா ॥ 176 ॥

ஜ்ஞாநம் விஜ்ஞாநமாஸ்திக்யம் ஸ்தைர்யம் விஶ்வாதிஶாயிதா ।
தநதாந்யாபிவ்ருத்திஶ்ச ஸக்ருதஸ்ய ஜபாத் பவேத் ॥ 177 ॥

வஶ்யம் சதுர்விதம் ந்ரூணம் ஜபாதஸ்ய ப்ரஜாயதே ।
ராஜ்ஞோ ராஜகலத்ரஸ்ய ராஜபுத்ரஸ்ய மந்த்ரிண: ॥ 178 ॥

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



ஜப்யதே யஸ்ய வஶ்யார்த்தம் ஸ தாஸஸ் தஸ்ய ஜாயதே ।
தர்மார்த்தகாமமோக்ஷாணுமநாயாஸேந ஸாதநம் ॥ 179 ॥

ஶாகிநீ-டாகிநீ-ரக்ஷோயக்ஷோரக-பயாபஹம் ।
ஸாம்ராஜ்யஸுகதம் சைவ ஸமஸ்தரிபுமர்தநம் ॥ 180 ॥

ஸமஸ்த-கலஹ-த்த்வம்ஸி தக்த-பீஜ-ப்ரரோஹணம் ।
து:ஸ்வப்ந-நாஶநம் க்ருத்த-ஸ்வாமி-சித்த-ப்ரஸாதநம் ॥ 181 ॥

ஷட்கர்மாஷ்டமஹாஸித்த்தி-த்ரிகாலஜ்ஞாந-ஸாதநம் ।
பரக்ருத்யா-ப்ரஶமநம் பரசக்ர-விமர்தநம் ॥ 182 ॥

ஸங்க்ராமரங்கே ஸர்வேஷாமிதமேகம் ஜயாவஹம் ।
ஸர்வவந்த்யாத்வ-தோஷக்ந்நம் கர்ப்பரக்ஷைககாரணம் ॥ 183 ॥

பட்யதே ப்ரத்யஹம் யத்ர ஸ்தோத்ரம் கணபதேரிதம் ।
தேஶே தத்ர ந துர்பிக்ஷமீதயோ துரிதாநி ச ॥ 184 ॥

ஸ்ரீ மஹாகணபதி ஸஹஸ்ரநாமத்தை ஒரு தடவை ஜபித்தால் கூடப் போதும். நெடிய ஆயுள், உடல்நலம், மனஉறுதி, ஒளி, ஸௌபாக்கியம், மிக்க எழில், சத்தியம், தயை, பொறுமை, அமைதி, செயல் திறமை, அறநெறியில் நாட்டம், உலகை ஆளும் திறன், சொல்வன்மை, வாதங்களில் ஒப்பற்ற திறைமை, அவைப் புலமை, வள்ளல்தன்மை, கம்பீரத் தோற்றம், இறையொளி, உயர்வு, நற்குலத்தோற்றம், நல்லொழுக்கம், பராக்கிரமம், வீர்யம், பெருந்தன்மை, இறைஞானம், உலக அறிவு, ஆஸ்திக உணர்வு, நிலைதளராத உறுதி, உலகில் மேலான நிலையில் வாழ்வு, தன தானிய வளர்ச்சி முதலிய அனைத்தும் ஸ்ரீ கணேசரின் திருவருளினால் உண்டாகின்றன.

இந்த ஸஹஸ்ரநாமத்தைப் படிப்பவருக்குத் தேவரும் நரரும் வசமாவர். விலங்குகளும் செடிகொடிகளும் இவனுக்கு அடங்கிச் சொன்னபடி கேட்கும். அரசனும் அரசியும் அரச குமாரனும் அமைச்சனும் இவனுக்கு நலமே செய்வர். எத்தகைய மனிதனும் இவனுக்கு அநுகூலமாவான். அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கு இறுதிப் பொருள்களையும் எளிதில் அளிக்கும்.

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



ஸ்ரீமஹாகணபதி ஸஹஸ்ரநாமத்தை நாள்தோறும் படிக்கும் வீட்டில், சாகினி டாகினி என்ற துர்த்தேவதைகள், அரக்கர், இயக்கர், பாம்புகள் முதலிய அச்சமூட்டுகிற ஜீவன்கள் அணுகமாட்டா. அளவற்ற இன்பம் பெருகும். எதிரிகள் யாவரும் அழிவர். சச்சரவுகள் யாவும் தீரும். ஆண்மை வளரும். கெட்ட கனவுகள் வாரா. யஜமானன் சினம் தீர்ந்து உவப்புக் கொள்வான். பிறரை வசப்படுத்தி, எண்வகைச் செல்வங்களையும், முக்கால அறிவையும் பிள்ளையார் அளிப்பார். பிறர் செய்த ஏவல் பில்லி சூன்யங்கள் நாசமாகும். பிறரின் சூழ்ச்சி குலையும். போர்க்களத்தில் யாவருக்கும் வெற்றி விளையும். மலடித்தன்மைக்கான காரணங்கள் நீங்கி, நன்மக்கள் கருவில் நற்காப்புடன் பிறப்பர். இந்த ஸஹஸ்ரநாமம் நடமாடும் இடத்தில் பஞ்சம் பட்டினி தலைகாட்டமாட்டா; எத்தகைய தீங்கும் பாவமும் அண்டமாட்டா.

ந தத்க்ருஹம் ஜஹாதி ஸ்ரீர் யத்ராயம் பட்ட்யதே ஸ்தவ: ।
க்ஷய-குஷ்ட்ட-ப்ரமேஹார்ஶோ-பகந்தர-விஷூசிகா: ॥ 185 ॥

குல்மம் ப்லீஹாநமஶ்மாநமதிஸாரம் மஹோதரம் ।
காஸம் ஶ்வாஸமுதாவர்த்தம் ஶூல-ஶோபாதி-ஸம்பவம் ॥ 186 ॥

ஶிரோரோகம் வமிம் ஹிக்காம் கண்டமாலாமரோசகம் ।
வாத-பித்த-கப-த்வந்த்வ-த்ரிதோஷ-ஜநித-ஜ்வரம் ॥ 187 ॥

ஆகந்தும் விஷமம் சீதமுஷ்ணம் சைகாஹிகாதிகம் ।
இத்யா த்யுக்தமநுக்தம் வா ரோகம் தோஷாதி-ஸம்பவம் ॥ 188
ஸர்வம் ப்ரஶமயத்யாஶு ஸ்தோத்ரஸ்யாஸ்ய ஸக்ருஜ்ஜப: ।
ஸக்ருத்பாடேந ஸம்ஸித்த: ஸ்த்ரீஶூத்ரபதிதைரபி ॥ 189

ஸஹஸ்ரநாமமந்த்ரோயம் ஜபிதவ்ய: ஶுபாப்தயே
மஹாகணபதே: ஸ்தோத்ரம் ஸகாம: ப்ரஜபந்நிதம் ॥ 190 ॥

இச்சிதாந் ஸகலாந் போகாநுபபுஜ்யேஹ பார்த்திவாந் ।
மநோரதபலைர் திவ்யைர் வ்யோமயாநைர் மநோரமை: ॥ 191 ॥

சந்த்ரேந்த்ர-பாஸ்கரோபேந்த்ர-ப்ரஹ்ம ஶர்வாதி ஸத்மஸு ।
காமரூப: காமகதி: காமதோ விசரந்நிஹ ॥ 192 ॥

புக்த்வா யதேப்ஸிதாந் போகாநபீஷ்டாந் ஸஹ பந்துபி: ।

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



கணேஶாநுசரோ பூத்வா மஹாகணபதே: ப்ரிய: ॥ 193 ॥

நந்தீஶ்வராதி ஸாநந்தீ நந்தித: ஸகலைர் கணை: ।
ஶிவாப்யாம் க்ருபயா புத்ரநிர்விஶேஷம் ச லாலித: ॥ 194 ॥

ஶிவபக்த: பூர்ணகாமோ கணேஶ்வரவராத் புந: ।
ஜாதிஸ்மரோ தர்மபர: ஸார்வபௌமோபிஜாயதே ॥ 195 ॥

நிஷ்காமஸ் து ஜபந் நித்யம் பக்த்யா விக்நேஶ தத்பர: ।
யோகஸித்திம் பராம் ப்ராப்ய ஜ்ஞாந-வைராக்ய ஸம்ஸ்தித:॥196॥

நிரந்தரோதிதாநந்தே பரமாநந்தஸம்விதி ।
விஶ்வோத்தீர்ணே பரே பாரே புநராவ்ருத்தி-வர்ஜிதே ॥ 197 ॥

லீநோ வைநாயகே தாம்நி ரமதே நித்யநிர்வ்ருத: ।
யோ நாமபிர் ஹுநேதேதைரர்ச்சயேத் பூஜயேந் நர: ॥ 198 ॥

ராஜாநோ வஶ்யதாம் யாந்தி ரிபவோ யாந்தி தாஸதாம் ।
மந்த்ரா: ஸித்த்யந்தி ஸர்வேபி ஸுலபாஸ்தஸ்ய ஸித்த்தய: ॥ 199 ॥

மூலமந்த்ராதபி ஸ்தோத்ரமிதம் ப்ரியதரம் மம ।
நபஸ்யே மாஸி ஶுக்லாயாம் சதுர்த்யாம் மம ஜந்மநி ॥ 200 ॥

தூர்வாபிர் நாமபி: பூஜாம் தர்ப்பணம் விதிவச்சரேத் ।
அஷ்டத்ரவ்யைர் விஶேஷேண ஜுஹுயாத் பக்திஸம்யுத:॥ 201॥

தஸ்யேப்ஸிதாநி ஸர்வாணி ஸித்யந்த்யத்ர ந ஸம்ஶய: ।
இதம் ப்ரஜப்தம் படிதம் பாடிதம் ஶ்ராவிதம் ஶ்ருதம் ॥ 202 ॥

வ்யாக்ருதம் சர்ச்சிதம் த்யாதம் விம்ருஷ்டமபிநந்திதம் ।
இஹாமுத்ர ச ஸர்வேஷாம் விஶ்வைஶ்வர்ய-ப்ரதாயகம் ॥ 203 ॥

ஸ்வச்சந்தசாரிணுப்யேஷ யேநாயம் தார்யதே ஸ்தவ: ।
ஸ ரக்ஷ்யதே ஶிவோத்பூதைர் கணைரத்யுஷ்டகோடிபி: ॥ 204 ॥

புஸ்தகே லிகிதம் யத்ர க்ருஹே ஸ்தோத்ரம் ப்ரபூஜயேத் ।
தத்ர ஸர்வோத்தமா லக்ஷ்மீ: ஸந்நிதத்தே நிரந்தரம் ॥ 205 ॥

தாநைரஶேஷைரகிலைர் வ்ரதைஶ்ச தீர்த்தைரஶேஷைரகிலைர் மகைஶ்ச ।
ந தத் பலம் விந்ததி யத் கணேஶ ஸஹஸ்ரநாம்நாம் ஸ்மரணேந ஸத்ய: ॥ 206 ॥
ஏதந் நாம்நாம் படதி திநமணென ப்ரத்யஹம் ப்ரோஜ்ஜிஹாநே

https://archive.org/details/muthulakshmiacademy

